19/5

॥ ओ३म् ॥

# ॥ श्रीभगवद्गीता ॥

# ஸ்ரீ பகவத்கீதை.

## ॥ कर्मगीता ॥

## கர்மகீதை.

## ॥ सप्तश्लोकीगीता ॥

## ஸப்தசுலோகிகீதை.



பிரஹ்மநிஷ்டபண்டித
தஞ்சை ஸ்ரீகுப்புஸ்வாமிராஜு என்னும்
பூர்வாசிரமநாமம்பூண்டிருந்த
ஸ்ரீபிரஹ்மாநந்தஸ்வாமிகளால்
மொழிபெயர்க்கப்பட்டு
தஞ்சை ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திர பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

ருதிரோத்காரி௵ ] 1923. | சித்திரை மீ

இத்தகைய பரமப்பிரமாணமாகிய இந்நூல் தமிழிலும் சுத்திய பத்தியரூபமாகவும் உரைகளுடனும் பலவாக வெளிப்பட்டுளது. அவையாவும் பற்பலவிதமாய் விரிந்தும் சுருங்கியும் சில மூலத்திற்கு முரண்பட்டும் மூலசுலோகத்தின் அபிப்பிராயத்தை இஃதுவென நிச்சயத்திற்குப் போதுமானவைகளாயில்லாமைநோக்கி, தஞ்சை ஸ்ரீபிரஹ்மாநந்தஸ்வாமிகள் சம்ஸ்கிருதத்திலுள்ள பாஷியாதி பல வியாக்கியானங்களைத் தழுவி, இக்கீதையின் சுலோகங்கட்கு அத்தியந்தம் நேராக மந்தரும் உணரத்தக்க எளிய தமிழ்நடையில் முமுக்ஷுக்களுக்கு உபயோகமாமாறு வசனரூபமாகத் தமிழில் மொழிபெயர்த்த

ருளினர். கீதாபடனமுதலியவற்றின் பயனும் மாகாத்மியமும் வராகம் பத்மமுதலிய புராணங்களாலும் உலகத்துள்ள வித்துவச்சிரேஷ்டர்களால் பலபாஷைகளாலும் கூறப்பட்டிருத்தலின் பிரசித்தமேயாம். ஆதலால் கீதையினைப் பாராயணஞ்செய்யவும் அதன்சரியான பொருளைத் தெரிந்துகொள்ளவும் தமிழர்கட்கு இந்நூல் மிக்க உபயோகமுள்ள தாயிருத்தல்கருதி, இதனைச் சட்டைப்பையில்வைத்துக்கொள்ளத்தக்க சிறிய அளவினதாக தேவநாகர எழுத்தில் மூலசுலோகங்களுடன் அச்சிட்டு, இதன் முகப்பில் ஸ்ரீமத் ஸ்வாமிகள் இயற்றியருளிய ஸ்ரீபகவத் கீதாசம்பந்தியான அத்தியாத்மபிரசங்கத்தினை விளக்கும்

ரூபகாலங்காரமும் சேர்க்கப்பட்டுளது. அதில் திருதராஷ்டிரன் முதலியோர் யாவரும் தத்துவசொரூபமெனக் காட்டப்படுத லின் பாரதகதையினால் தத்துவசிந்தனம்பண்ணிச் சுலபமாய்த் திடஞானம் பெறுதற்கு ஏதுவாக அமைந்துளது.

இதில் கர்மகீதை, ஸப்தசுலோகிகீதைகளும் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

இது சர்வசுருதிசாரமாயிருத்தலால் புக்தி முக்தி காமிகள் யாவருக்கும் அத்தியந்த முபயோகமுள்ளதெனக்கருதி நித்தியம் பாராயணஞ் செய்வதற்கும் மூலசுலோகங்களோடு அவற்றின் பொருளை நேராய் அறிவதற்கும் யோக்கியமாகத்

தஞ்சை பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீ வி. குப்புஸ்வாமி ராஜு என்னும் பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த ஸ்ரீபிரஹ்மாநந்த ஸ்வாமிகள் மொழிபெயர்த்தருளிய தமிழ் வசனத்துடன் பகவத்கீதாகதாசம்பந்தியான அத்தியாத்மப்பிரசங்க ரூபகாலங்காரமும் சேர்த்து சிறிய பாக்கெட் சைஜில் அச்சிட்டுளது. இதன் முகப்பிலுள்ள ரூபகாலங்காரமோபாரதகதை வாயிலாகத்தம்முள் தத்துவார்த்தங்களை எளிதில் அநுசந்திக்க அத்தியந்த வுபயோகமுள்ளதாம். மிக அருமையானது.

தூத்துக்குடி ரா. மா. கம்பேனி மகா-ள-ள-ஸ்ரீ கோ. சுந்தரம்பிள்ளை அவர்களால் ரூ 400 உதவி செய்யப்பட்டது.

 சு. பாக்கியம் பிள்ளை, மானேஜிங் டிரஸ்டி.

சிவமயம்.

# சிறப்புக்கவி.



தஞ்சாவூர் பிரஹ்மஸ்ரீ சதாவதானம்
சுப்பிரமணிய ஐயர் அவர்களியற்றியது.

விருத்தம்.

பஞ்ச பாண்டவர் தம்மு ணடுவனும்
　　பார்த்தன் சோர்ந்துகை விட்ட தநுவதைத்
துஞ்ச லின்றி மீட்டுந்தொடக் கண்ணன்முன்
　　சொற்ற கீதையத் தியான்மிக மெய்ப்பொருள்

# சிறப்புக்கவி.

விஞ்சு ரூபகா லங்காரத் தான்முத்தி
விட்ட கத்தை யலங்கரித் திட்டனன்
தஞ்சை வாழ்பிர மாநந்த யோகியாந்
தத்து வப்பொரு டேர்ந்தசுஞ் ஞானியே.

ஓம்.

தத்ஸத்ப்ரஹ்மணேநம:

ஸ்ரீபகவத்கீதாசம்பந்தியான

அத்யாத்மபிரசங்கத்தினைவிளக்கும்

# ரூபகாலங்காரம்.

## மங்கலம்.

பத்திதரு முத்திதரும் பலகாலு மேத்தினர்க்குச்
சித்திதரு ஞானத் திருவளிக்கு—மத்திமுகன்
றுங்க முநிவோர்க டூய வுளக்கமலந்
தங்குந் திருவடிக டாம்.

பாகியப் பிரபஞ்சமாகிய தபோவனத்திலும் மனுஷ்ய தேகமாகிய ஹஸ்தினபுரத்திலும் கிரமமாகச் சுத்தசத்துவ குணப்பிரதான மாயாமயப் பிரகிருதியின் பாகவடிவ கன்னிப்பருவமுள்ளசத்தியவதியினிடத்து ஜகத்தின் அத்தியக்ஷரான பிரஹ்மசேதனவடிவ பராசரரின் பிரதிபிம்பவடிவ ஈசுவரரூப வியாசரும், ஜாக்கிரசொப்பனங்களில் புத்தி ரூபமாகப்பரிணமிக்கும் அவித்தியாமயப் பிரகிருதியின் பாகவடிவ பக்குவமடைந்தசத்தியவதியினிடத்தில் தேகமாகிய புரத்தின் அத்தியக்ஷனான கூடஸ்தசேதனவடிவ மனிதத்தன்மையால் பராசரரின் அபின்னனான சந்தநு என்பவனது

பிரதிபிம்பவடிவ ஜீவரூப சித்திரவீர்யன் என்னும் புத்திரனும் பிறந்தார்கள். சித்திரவீர்யனுக்கு இரண்டு இராணிகளும் ஒரு தாசியும் இருந்தார்கள். அச்சீவரூபசிதாபாஸமய சித்திரவீர்யன் சுழுத்தி மரணம் மூர்ச்சை முதலிய அவஸ்தையில் புத்தியாகிய உபாதியின் விலயத்தால் நாசமாக, முற்கூறிய சத்தியவதீமாதாவின் இச்சையாகிய ஆஞ்ஞையினாலும் பதி பிரியப்பெற்றதோஷதிருஷ்டிவடிவ கங்கையில் கூடஸ்தசேதனவடிவ சந்தநுவினின்றும் பிறந்த விராகத்தின் மந்தத்தன்மைவடிவ பீஷ்மரது பிரேரணையினாலும் ஈசுவரவடிவ வியாசரால் ஜீவனாகிய பிராதாவின் ஸ்திரீகளிடத்தில் மூன்று புத்திரர்களுண்டானார்கள்.

அங்குச் சுழுத்தியவஸ்தையாகிய வீட்டில் வசிப்பவளான தாமஸீதிரவ்யசக்திவடிவ மூடியகண்களுடைய இராணியினிடத்தில் சத்ஸங்கமும் விவேகமுமான இரண்டு நேத்திரங்களுமில்லாத அவிவேகத்தின் பரியாயமான மோகமய சாக்ஷியாகிய ஆத்மாவோடு பிரமஜதாதாத்மியமுடைய அகங்காரமாகிய அந்தக்கரணத்தின் பரிணாமஸ்வரூபவடிவ ஜேஷ்டபுத்திரனை திருதராஷ்டிரன் உண்டானான்.
உ. ஜாக்கிரதவஸ்தையாகிய வீட்டில் வசிப்பவளான இரண்டாவது கிரியாசக்தியாகிய இராஜஸக்கிரியாரூப வெண்மை நிறத்தோடுகூடிய இராணியினிடத்தில் இரஜோகுணப்பிர

தானமாகிய வியவகாரநிபுணமனோமய அந்தக்கரணத்தின் பரிணாமவடிவ மத்தியமபுத்திரனான பாண்டு உண்டானான். விக்ஷேபத்தினைச் செய்யும் இரஜோகுணத்தினால் தமோ குணம் அமிழ்த்தப்படுதலின் அந்தப் பாண்டு முதலில் ஜாக் கிராவஸ்தாதிகாலத்தில் இராஜ்யத்திற்கு அதிகாரியானான். பின்னர்ச் சுழுத்தியாதிகாலத்தில் இரஜோகுணம் விலயமா கத் தமோகுணத்தின் வலியால் தமப்பிரதானரூபபோக்தா வாகிய அகங்காரவடிவ திருதராஷ்டிரன் ராஜாவானான். அவன் சாத்துவிகீபுத்திவிருத்தியின் காரியமான உபசார மாகச் சொல்லப்படும் பாண்டுவின் புத்திரரான பதார்த்த

சோதனுதி சாதனவடிவ பாண்டவர்களை வலியற்றவர்களா கக்கண்டு, அவர்களது பிரஹ்மாத்மாவின் ஏகத்துவமய இராஜ்யமாகிய பாத்தியத்தைச் சுவாதீனமாக்கிக்கொண் டான். மற்றும், ௩. ஸ்வப்னுவஸ்தையாகிய•வீட்டில் வசிப் பவளான மூன்றுவது ஞானசக்திவடிவ வஸ்திரபூஷண உற் சாகங்களோடுகூடிய இராஜதாசியினிடத்தில் சத்துவகுணப் பிரதான ஹரிஸ்மரணமயதர்மமுடைய சித்தரூப அந்தக் கரணத்தின் பரிணுமவடிவ கநிஷ்ட புத்திரனுன பக்தனும் தர்மாவதாரனுமாகிய விதுரன் உண்டானுன். அவன் திருத ராஷ்டிர ராஜாவுக்கு நற்புத்தி சொல்லும் மந்திரியானுன்.

அவனுக்குப் பகவானிடத்தில் பக்தி(பிரீதி)வடிவ மனைவி யிருந்தாள். அந்தத் திருதராஷ்டிரனுக்கு இரண்டு ஸ்திரீ கள் இருந்தனர். ஒருத்தி, ஜீவப்பிரஹ்மஐக்கியத்தின் அசம்பவவடிவ சுபல ராஜாவினால் பேதவாதிகளின் சம்பந்த வடிவமாதாவினிடத்தில் உண்டானவளும், பேதஞானமா கிய சூதில் சமர்த்தனும், மனனவடிவ சகதேவனால் பேதத் தைப் பாதிப்பனவும் அபேதத்தைச் சாதிப்பனவுமாகிய எண்ணிறந்த யுக்திவடிவ சஸ்திரங்களால் தனதுள்ளிருக் கும் பேதசமூகவடிவ சைனியங்களோடு நாசமாகத்தக்க வனுமான பிரமேயகதசம்சயவடிவ சகுனியின் தங்கையும்,

மூடத்தன்மையாகிய கண்மூடுதலையுடையவளும், முற்கூறிய பதியினைவிட விவேகவடிவ அந்நியபுருஷனை ஒருபோதும் பாராதவளும், தனது திருஷ்டியினால் துரியோதனனை அரைத்தலமொழிந்த மற்றையவெல்லா அங்கங்களாலும் இடமாக்குகிறவளும் பதிவிரதையுமான இராஜஸகோர விருத்திவடிவ காந்தாரியாவள். மற்றவள் பேததிருஷ்டி வடிவ வைசியை. இவ்விருவரும் மனைவிகளானார். அவர்களுள், அக்காந்தாரியினிடத்தினின்றும் தியானவடிவ பீமனால் பெரும்பாலும் நாசமாகத்தக்க [க] விபரீதஞானமய விபரீதவடிவ துரியோதனன், [உ] காமவடிவ சித்திரசேனன்,

[௩] குமிராதவடிவ துர்முகன், [௪] உபாதிவடிவ துரௌபதி பினை விசேஷபப்படுத்தும் மகாபாவியான லோபவடிவ துச் சாஸனன், [௫] பிரமாதவடிவ விகர்ணன் என்பவர் முதலிய ஆசுரிசம்பத்திமய இராஜஸ தாமஸ மனதின் பரிணாமவடிவ நூறு புத்திரர் உண்டானார்கள். அன்றியும், சற்சங்காதிப் பிரசங்கத்தில் வருவதான நித்திரையினாரம்பத்திலுண்டாம் ஆலசியமய தந்திரையென்னும் பரியாயமுள்ள சோம்பல் வடிவ ஜயத்ரதனுடைய பத்தினியாகிய நித்திரைவடிவ துச் சலை யென்னும் ஒரு கன்னிகையும் உண்டானாள். இரண் டாமவளான பேதிருஷ்டிவடிவ வைசியாஸ்திரீயினிடந்

தில் பயவடிவ யுயுத்ஸு என்னும் புத்திரன் உண்டானன். அத்திருதராஷ்டிரனுக்கு விதுரன் மந்திரியும் சாத்துவிக பரிணமவிசேஷவடிவ சஞ்சயன் சாரதியும் ஆனார்கள். அவ் விருவரும் அவனுக்கு நற்புத்தி சொல்லுங்கால் பாண்டவர் களுக்குச் சிறிது அநுகூலமுண்டாகிறது; அந்தச் சகுனி கர்ணன் முதலிய துர்புத்தி மந்திரிகள் துர்புத்தியைப் போ திக்கும்போது அவற்றினும் பிரதிகூல முண்டாகிறது. (க) மனதோடுகூடிய பதினொரு இந்திரியங்களின் வழியாய் வெளிப்பட்ட சாஸ்திரசம்ஸ்காரமின்றிச் சுபாவிகமான இராஜஸமாகிய கோரமும் தாமஸமாகிய மூடமுமான என்

ணிறந்த அந்தக்கரணத்தின் பரிணாமங்களது பதினொன்றின் சமூகம் ஆசுரிசம்பத்திமய பதினொரு அக்குரோணிக் கணக்குள்ள திருதராஷ்டிரபுத்திரர்களான துரியோதனாதியருக்குச் சகாயஞ்செய்யும் சேனையாயிற்று.

அச்சேனையின் எட்டுநாயகர்களைக் கூறுவாம்:—

[க] லௌகிகவைதிகவிசாரமாகிய சஸ்திரவித்தையின் சிக்ஷகரும், தைவஆசுரபரிணாமவடிவ கௌரவர் பாண்டவரிருவர்களதுபக்ஷத்திருப்பவரும், நிஷ்காமதவமாகிய அக்னிகுண்டத்தினின்று வெளிப்பட்டவளும் அப்பாண்டவர்களோடு சம்பந்தவடிவ விவாகத்திற்கு முன் ஜிஞ்ஞாஸை (ஞானவிருப்ப)

வடிவினளாயிருந்து பின்சாந்தியின் பரியாயமான உபரதிரூப மானவளும், போதவடிவ அர்ஜுனனிடத்தில் விசேஷமான பிரீதி யுள்ளவளும், அப்பஞ்சபாண்டவர்களான பர்த்தாக் களை வரித்தவளுமான துரௌபதியோடு அவ்வக்னிகுண் டத்தினின் றுண்டானவனும் தோஷதர்சனஜந்திய அபர (அதிட) வைராக்கியவடிவ துருபதனது புத்திரனுமான வா சனக்ஷயவடிவ திருஷ்டத்துய்ம்னனால் நாசமாகத்தக்கவரு மான விவேகத்தின் மந்தத்தன்மைவடிவ துரோணாசாரியர். [உ] முற்கூறிய துருபதனுடைய இரண்டாவது புத்திரனும், முதலில் விவேககாலத்தில் விஷயங்களில் பரோக்ஷமித்தியா

புத்திவடிவ துருபதனது பத்தினியிடத்தில் அதிடவிரக்தி வடிவ புத்திரித்தன்மையால் வெளிப்பட்டு, பின் போதகாலத்தில் கூறப்பட்ட அர்ஜுனனது புண்ணியரூபபாக்கியத்தினுண்டாகிய பிரபஞ்சத்தினது அபரோக்ஷமித்தியாத்தன்மையின் நிச்சயமயமான ஸ்தூணாகர்ணயக்ஷனால் பர (திட) வைராக்கியத்தன்மைவடிவ புருஷத்தன்மையினை யடைந்தவனுமான சிகண்டியோடு திடபோதவடிவ அர்ஜுனனால் நாசமாகத்தக்கவரும், தைவாசுரஉபயபக்ஷபாதியும் கூடஸ்தரூபசந்தநுவினின்றும் வியோகமடைந்த (மந்த) தோஷதிருஷ்டிவடிவ கங்கையினிடத்தில் பிறந்தவருமான வைராக்கி

யத்தின் மந்தத்தன்மைவடிவ பீஷ்மர். [ரு] மந்த முமு க்ஷுத்தன்மைவடிவ சூரியனால் சாத்துவிகபுத்திவடிவ குந்தி யினிடத்தில் உற்பத்தியானவனும், மோக்ஷசாதனவடிவ சுப கர்மங்களில் பிரவிருத்திக்கு ஏதுவும், மூவித சாஸ்திர வாசனையும், நால்வகைத்தேகவாசனையுமாகிய சகிகளிடத்திலும் அநுகூதமாயிருக்கும் "ஒருவனும் என்னை நிந்திக்கலாகாது, எல்லோரும் துதிக்கவேண்டும்" என்னும் புத்திவாசனமைய லோகவாசனைவடிவ ராதையாகிய தாசியினோடு சம்பந்தத்தினால் முற்றும் கூடாததான சர்வலோகத்திலும் நிந்தையின்மைக்கும் கீர்த்திக்கும் காரணமான கர்மத்தில் பிரவிருத்

திக்கு எதுவானவனும், இதனாலேயே மேற்சொல்லப்படும் கடோற்கசனைக்கொல்லுபவனும், திடபோதவடிவ அர்ஜுனனால் நாசமாகத்தக்கவனுமான விதிநிஷேதரூபவேதத்தின் ஆஞ்ஞைக்குக் கிங்கரனாய்க் கர்மத்தினைச் செய்தல்வடிவமாகிய கர்மத்தின் கர்த்தவ்யத்தன்மைவடிவ கர்ணன். [ச] கூறிய துரோணருடைய பத்தினியாகிய பிரவிருத்திவடிவ கிருபியின் பிராதாவான வியாவகாரிகப் பெருமுயற்சிவடிவ கிருபாசாரியர். [ரு] உபராமவடிவ அபிமன்யுவின் வேறான சமதமாதி ஐந்து சாதனவடிவ துரௌபதியின் ஐந்து புத்திரர் முதலிய எஞ்சிய சேனையினைப் பெருமுயற்சிவடிவ கிருபா

சாரியாரும் மந்தஜீவத்வைதவடிவ கிருதவர்மனும் தகைக்கப்பட்டதுவாரமுடையதும், தைவாசுரபரிணாமங் களின்து விஷயங்களின் சமூகவடிவ குருக்ஷேத்திரத்தின் கண் உள்ள விவேக ஞானி ஸ்ரீ கிருஷ்ணன் பஞ்சபாண்டவர் சாத்தியகி யென்னும் எழுவராகு நிவாசஸ்தானமாகிய பிரஹ்மாத்மாவின் அபேதத்தன்மையில் முடிதல்வடிவ *சிபிரத்தினும் வேறானதுமான இருதய(அந்தக்கரண)வடிவ சிபிரத்திற்சென்று நாசஞ்செய்தவனும், அதனால் சித்த நிரோதமய சமாதிக்கும் சாந்திக்கும் பரியாயமான உபரதி

* யுத்தகளத்தில் பாதுகாப்புள்ள இடம் சிபிரம் எனப்படும்.

வடிவ துரௌபதியினை விக்ஷேபப்படுத்தியவனும், போத வடிவ அர்ஜுனனால் பிரபலப்பிரபாவவடிவ சிரோமணி யிழந்தவனும், கூறிய துரோணர் கிருபி யென்பவர்கள் புத் திரனுமான போதத்திற்குப் பின்னும் பிரஹ்ம விசாரமப பிரஹ்மாப்பியாசத்தின் அபாவவடிவ அசுவத்தாமா. [சு] பீமனால் நாசமாகுபவனாகிய சர்வசுபசாதனங்களையும் சிதில மாக்கும் அவசியஞ்செய்யவேண்டிய காரியத்தினைமறத்தல் மயமான பிரமாதவடிவ விகர்ணன். (எ) போதவடிவ அர்ஜு னனால் சேதிக்கப்பட்டகையுடையவனும், ஸமவடிவ சாத்திய கியினால் நாசமாகத்தக்கவனும் பேதஞானவடிவ சோமதத்த

னுடைய புத்திரனுமான எங்கும்விஷமத்தன்மைவடிவ பூரி சிரவா. [அ] முன் சகுனேப்பாசனகாலவடிவ வனவாசத்தில் சகுணத்தியானவடிவ பீமனால் தோல்வியடைந்தவனும், விசாரமாகியபோரில்திடபோதவடிவ அர்ஜுனனால் விவேக வடிவ ஸ்ரீகிருஷ்ணனது சகாயத்தால் நாசமாகத்தக்கவனும், பதார்த்தசோதனமுதலியபஞ்சசாதனவடிவ பாண்டவர் களுக்குப்பிரதிபந்தகனயிருத்தலால் சத்துருவுமான தந்தி ரை (சோம்பல்) வடிவ ஜயத்ரதன். இவ்வெண்மரும்ஆசுரிசம் பத்திவடிவ கௌரவசேனைகளின் நாயகர்.

(உ) இப்போது தைவீசம்பத்திவடிவ பாண்டவர்களை யும் அவர்களது சேனையையும் வர்ணிப்பாம்:—

[க] சூக்ஷ்ம சாத்துவிகீபுத்திவடிவ குந்திக்குச் சத்ச மாகம (பெரியோர்நல்வரவுஎற்றல்)வடிவ துர்வாசரது சேவை யினுற் கிடைத்த சாஸ்திரசம்ஸ்காரரூப மந்திரத்தின் பிரபா வத்தால், முதலில் ஆவிர்பவித்த மந்தமோக்ஷகாமவடிவ சூரி யனுல் மோக்ஷசாதனங்களின் கர்த்தவ்யத்தன்மைவடிவ கர்ணனென்னும் புத்திரன் உண்டானுன். பின் விஷயங்களில் இராகவடிவ ரிஷியின் மாரணவடிவ நிமித்தத்தால் நிர்பலத் தன்மைவடிவ விதவைத்தன்மையினையடைந்த விஷயவாசனு

வடிவ ரிஷிபத்தினியின் "ஸ்திரீசங்கத்தால் மிருத்யுவை யடைவாய்" என்னும் சாபத்தினைப்பெற்றவனான மலவிக்ஷேபமாகிய தோஷத்தினால் மலினமும் இந்திரியவாயிலாகவெளிப்படுமியல்பினதுமான இதுவென்னும் வடிவ அந்தக்கரணத்தின் இராஜோகுணப்பிரதானபரிணாமமய மனவடிவ பாண்டுராஜாவோடு (க) சூக்ஷ்ம(தீவிரமும்அந்தர்முகமுமான) புத்திவிருத்திவடிவ குந்திக்கும், (உ) பதார்த்தசோதனவடிவ யுதிஷ்டிரரால் நாசமாகத்தக்கவனும், விசாரத்தின் பீஜமாயிருத்தலால் சிரவணமனனவடிவ நகுல சகதேவர்களுடைய அம்மானுமான சுத்தசத்துவகுண தத்துவம்பதார்த்

தத்தின் சத்பாவத்திலிருப்பதான சம்சயவடிவ சல்லிய னுடைய தங்கையுமான மாத்திரிக்கும் சம்பந்தவடிவ விவாக முண்டாயிற்று. ஆனால் சாபத்தினலாம் மரணத்தின் பயத் தால் அப்பாண்டு கூறிய அந்த ஸ்திரீகளின் சங்கத்தினின் றும் நீங்கியவனுயிருந்தான். அப்போது அப்பதியின் இச்சை வடிவ ஆஞ்ஞையால் அவ்விரண்டு ஸ்திரீகளும் தத்துவஞான மும் அதன் சகாயவடிவ யதார்த்த சோதனுதி சாதனமய விசாரவடிவமுமான சந்தானங்களினது உற்பத்தியின்பொரு ட்டு, நிஷ்காமகர்மத்தோடுகூடிய சிவவிஷ்ணுவாதி பஞ்சு தேவர்களின் உபாசனைவடிவ ஆவாகனத்தாற்பெற்ற சித்தத்

தின் சுத்தியையும் ஏகாக்கிரத்தன்மையையும் முன்னிட்ட நான்கு சாதனங்களின் சம்பத்திவடிவ ருதுகாலத்தில் உபாசிய தேவனான காரணப்பிரஹ்மஈசுவரனே அவ்வச்சாதனங்களின் உற்பத்திக்குத்தகுதியான வாக்கியோபதேசத்தின் பேதத்தினாலாவது அல்லது கோபமுடையவர், வாத்ஸல்யமு (பிரீதியு)டையவர், ஓதாவிய்யவர், சம்சயமொழிப்பவர், சாந்தரூபர் என்னும் பேதத்தினாலாவது சிவ விஷ்ணு கணேச சூரிய கங்காதேவிமய ஐந்து குருரூபமாகப் பிராப்தமா (மதிக்கப்படுபவரா) கின்றார். அக்குருவடிவ தருமன் வாயு இந்திரன் அசுவினிகுமாரரிருவர் என்னும் ஐந்து

தேவர்களின் வாக்கியத்தினாலாகும் சம்ஸ்காரவடிவ பீஜத்தினால் பதார்த்த சோதனாதி சாதனமய பஞ்சபாண்டவவடிவ் சந்தானங்களைப்பெற்றனர். அவர்களுள், வியாபக ஈசுவரத்தியானவடிவ மானஸஉபாசனையுடையதும் அந்தர்முகமாயிருத்தலால் சூக்ஷ்மமுமான புத்திவிருத்திவடிவ குந்தியானவள் (க) வியவகாரதசையிலும் பரமார்த்ததசையிலும் எங்கும் காணப்படுதலாலும் ஞானசிரவணாதிகளைவிட முதலில் உண்டானதாயிருத்தலாலும் ஜேஷ்ட ராஜாவாகிய தத்துவம் பதார்த்தத்தின் சோதனமய ஞானத்தின் முக்கிய சாதன வடிவ யுதிஷ்டிரராஜாவையும், (உ) முதலில் சகுணத்தின்

பின்னர் நிர்க்குணத்தின் தியானமயமும், போதத்திற்கு முன்னர் அபேக்ஷிக்கப்படுவதாயிருத்தலால் போதத்தை விடப்பெரிதுமான நிதித்தியாசனவடிவமாய் எண்ணிறந்த ஆசுரிசம்பத்திகளை நாசஞ்செய்யும் மகாபலமுடைய பீமனை யும், (௩) அபேதத்தினைப் போதிக்கும் மகாவாக்கியத்தி னது சிரவணத்தின் சம்ஸ்காரமாகிய குருவடிவ இந்திரபீஜ த்தினலாகிய, முதலில் பரோக்ஷரூபமும், பின்னர் விசார ரூபமும், யுத்தசமயத்தில் சம்சயவிபரியயாதி தோஷரூப துரியோதனாதியரின் சம்பந்தத்தினல் மந்தஅபரோக்ஷரூப மும், பின் மிகுந்த விவேகவடிவ ஸ்ரீ கிருஷ்ணாது உபதே

சத்தால் திடமாகிய அபரோக்ஷரூபமுமாய் எண்ணிறந்த தோஷரூப யுத்தவீரரையழிக்கும் தத்துவபோதவடிவ அதிரதியாகிய அர்ஜுனனையும் பெற்றாள். மூர்த்திபூஜனமுதலிய காயிக வாசிக பாகிய உபாசனையுடையதான சிறிது பகிர்முகமாயிருத்தலால் ஸ்தூலபுத்திவிருத்திவடிவ மாத்ரியானவள், (க) சுத்தியின் சொற்பத்தன்மையால் புத்திமந்தத் தன்மையும் குதர்க்கமுமான தோஷத்தினிருப்பால் * அபேக்ஷிக்கப்படுவதும், சாரீரக சாஸ்திரத்திற் கூறியுள்ள சர்வ சுருதிகளது ஏக (ஒரு)வாக்கியத்தன்மையின் விவேகரூப

* இது சிரவணத்திற்கு விசேஷணம்.

ஸ்ரீ கிருஷ்ணனால் நசித்தவனும், அக்கிருஷ்ணனால் நாநா சுருதிவடிவ ராஜ்யம் கன்னிகைகள் முதலிய சர்வசொத்துக்களும் கவர்ந்துகொள்ளப்பட்டவனும், நாநாசுருதிவாக்கிய வடிவ ஆயிரக்கணக்கான ராஜகன்னிகைகளைக் கவர்ந்தவனுமான சுருதி நாநாத்துவவடிவ பௌமாசுரனுடையபௌத்திரனும், கூறிய அர்ஜுனனால் நாசமாகத்தக்க சுருதிநாநாத்துவத்தின் திடசம்ஸ்காரவடிவ மகாப்பிரபல பகதத்தனுடைய புத்திரனுமாயுள்ளவனைத் தாற்பரியத்தினை நிச்சயிப்பனவாகிய உபக்கிரமோபசங்காராதிஷட்லிங்கவடிவ சஸ்திரங்களால் நாசஞ்செய்பவனுமான, குருமுகமாகச் செய்யும்

சாஸ்திரவிசாரரூப அசுவினி குமாரனாற் பிறந்த சர்வ உப நிஷத்துக்கட்கும் அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரிய நிச்சயமய சிரவணவடிவ நகுலனையும், (உ) தனதுள்ளிருப்பதான அநேக பேதரூப சேனையோடுகூடிய பிரமேயகதசம்சயவடிவ சகுனியையும் குதர்க்கவடிவ சல்லியவம்மான் மகனையும் நாசஞ்செய்யும் மனனவடிவ சகதேவனையும் பெற்றாள். பின் ஸ்தூலசாத்துவிகிபுத்திவிருத்திவடிவ மாத்ரியின் சங்கத்தால் மலவிக்ஷேபரூப தோஷத்தோடுகூடிய இராஜோகுணப்பிரதான மனோமய பரிணாமவடிவ பாண்டுவின் திரஸ்காரவடிவ நாசமுண்டாயிற்று. அப்போது பாகிய விக்

கிரகபூஜையின் பாவனையோடுகூடிய புத்தி விருத்திவடிவ மாத்திரிக்கும் சிதிலத்தன்மைவடிவ தாகமுண்டாயிற்று. முதலில் சகுணப்பிரஹ்மத்தினை விஷயஞ்செய்தலால் மந்தவலியுடைய அப்பாண்டவர்களுக்கு நிர்குணப்பிரஹ்மபாவனைவடிவ இந்திரப்பிரஸ்தத்தில் இராஜ்யம் கொடுத்தார்கள். அங்கு விபரியபவடிவ துரியோதனனது பிரேரணையால் தேகாபிமானரூப அரக்கு மாளிகையில் வசிக்க மூவிததாபவடிவ அக்கினி மூண்டது. ஆனால் ஹரிஸ்மரணமய சாத்துவிகசித்தவடிவ விதுரனது கிருபையால் அப்பாண்டவர்கள் தகிக்கப்படாமல் நிர்க்குணஉபாசனைவடிவ இந்திரப்பிரஸ்த

நகரத்திளைவிட்டு, பேதத்தோடுகூடிய சகுணோபாசனைவடிவ வனத்தில் சஞ்சரித்தனர். அங்குச் சகுணப்பிரஹ்மத்தியானவடிவ பீமன், பகிர்முகத்தன்மைவடிவ ஹேடம்பன் (இடும்பன்) என்னும் இராக்ஷசனையும் சித்தத்தின் மலதோஷவடிவ பகாசுரனையும் கொன்று, தியானரூப பீமனுடைய பரிபக்குவ அவஸ்தாமய சமாதிவடிவ துரௌபதியின் *சபத்தினியாகிய தூரசிரவணம்தரிசனமுதலியவற்றின் சக்திவடிவ ருதம்பரையெனும் புத்திவடிவ ஹேடம்பா (இடும்பி)

* தன்கணவனை வரித்தமற்றவள் சபத்தினி எனப்படுவாள், அவளை உலகினர் சக்களத்தி யென்பர்.

ராக்ஷசியான தனதுஸ்திரீயின் ஆறுமாசபரியந்தமான சம்பந்தத்தால் அணிமாதிசித்திமய ஐசுவரியவடிவ கடோற்கசனென்னும் புத்திரனைப்பெற்றாள். அன்றியும், பதபதார்த்தங்களின் சிந்தனைமய தியானரூப அந்தப் பீமனை காவியாலங்காரதர்க்காதி வித்தியாரூப காளி யென்னும் பெயருள்ளவளாய் மூன்கிருகத்திலுள்ள வேறு ஸ்திரீயினிடத்தில் மூன்னரே தோல்வியடையும் சேனையின் பக்ஷபாதியும், எவ்வொருபக்ஷத்திலும் நிலையின்றியவனும், தெய்வஆசுரரூப சர்வயுத்தவீரர்களது நாநாயுக்திகற்பனைவடிவ மரண நிமித்தத்தினை அறிபவனும், சாஸ்திராப்பியாசஜந்நிய விற்பத்தி

மயபோதரூபசிரமுடையவனும், மரணகாலத்தில் மகேசு வரனது ஸ்துதி பாடங்களைச் செய்தல்வடிவ தலைமாலையில் உபயோகியாய் நிலைப்பவனும், அந்த ஜீவனோடு கூடிய சிரசி னைக் கூறிய கிருஷ்ணனது வசனபூர்வகமாக வாளோடுகூடி ய கையினால் வெட்டுவிக்கப்பட்டு, சுபாசுப அர்த்தசமூகத் தின் நிர்ணயவடிவ இரணஸ்தம்பத்தில் ஸ்தாபிக்கப்பட்டு, கூறிய கௌரவ பாண்டவர்களது இருபக்ஷங்களின் வெற்றி தோல்விகளைப்பக்ஷபாதமின்றிய தன்மையாகக்கண்டு, ஜீவ னோடுகூடிய தனது சிரத்துள்ள வாயினால் அநுவாதமாத் திரம் செய்பவனுமான காவியாலங்காரதர்க்கங்களைச் செய்த

லாகிய கலைத்தேர்ச்சிவடிவ பர்பரீகனென்னும் பிறரால் ஜயிக்கப்படாத மற்றோர் புத்திரனையும் பெற்றிருந்தான். பரோக்ஷஞானவடிவ அர்ஜுனனுனவன், விசாரமாகிய போரில் சகாயமாகும் புத்தியின் திவிரத்தன்மைவடிவ காந்தர்வவித்தையினை அடைந்தான். அன்றியும், ஆத்மஞானத்தினல் நீக்கப்படும் பவிஷ்யத்துக்கசாதனமாகிய சரீரமுதல் அஞ்ஞானபரியந்தமான பதார்த்தங்களின் விசாரவடிவ மச்சத்தினைத் துளைத்தல் வாயிலாகச் சர்வ பாண்டவர்களுக்கும் சமமானவளான ஜிஞ்ஞாஸை (ஞானவிருப்ப)வடிவ துரௌபதியினையும் அடைந்தான். சுபசாதனவடிவ சேனையோடு

கூடிய அபரவைராக்கியவடிவ துருபதனதுசகாயத்தையும் பெற்றான். அப்போது பயத்தோடுகூடிய திருதராஷ்டிரன் பாண்டவர்களை அழைத்து, மறுபடியும் நிர்குண உபாசனை வடிவ இந்திரப்பிரஸ்தத்தின் இராஜ்யத்தினைக் கொடுத்து விட்டான்.

அங்கு ஒருகால் கலகஞ்செய்யும் மனபரிணாம விசேஷ வடிவ நாரதமுநியின் பிரேரணையால் உபாதிவடிவ துரௌபதியின் ஏகாந்த சங்கத்தினது பேதத்தின் சங்கேதவடிவ நிமித்தத்தால் அவ்வர்ஜுனன் உபாதிவடிவ நிர்குணப்பிர ஹ்ம ஜிஞ்ஞாஸைவடிவ துரௌபதியின் வியோகவடிவ பிர

ஹ்மசரியத்தினைக்கொண்டு, பன்னிரண்டு வருஷம் வரையில் சகுணஉபாசனைவடிவ வனத்தில் சஞ்சரிப்பவனாய், பிராண ரூப நாகனுடைய ஹடசமாதிவடிவ உலூபி யென்னும் கன்னிகையோடு பிரஹ்மரந்திரமாகிய நாகலோகத்திற்சென்று, பிராணநிரோதமய ஹடயோகவடிவ இராவந்தன் என்னும் புத்திரனைப் பெற்றான். நாசிவடிவ மணிபுரத்தில் கமனாக மனம் செய்வதான பிராணவிருத்திவடிவ அஜபாமந்திரமய மணிபுரபதியினுடைய சித்திராங்கதை யென்னும் புத்திரியின் அப்பியாசவடிவ சங்கத்தினால் மனோவிருத்தி நிரோதமய இராஜயோகவடிவ பப்புருவாகனன் என்னும்புத்திரனைப்

பெற்று, ஏகாந்தவாசவடிவ துவாரகையில் ஸ்ரீ கிருஷ்ண னுடைய தங்கையான சத்ஸங்கதிவடிவ சுபத்திரையினை ஸ்வீகரித்து, அவளிடத்தில் கூறிய அபிமன்னியுவென்னும் புத்திரனையும் பிறக்கச் செய்தான். மற்றும், அவ்வர்ஜு னன் கூறிய ஸ்ரீ கிருஷ்ணன் முதலியவர்களோடு இந்திரப் பிரஸ்தத்தில் வந்து சுபவாசனுமய சம்ஸ்காரவடிவ அக்னி யின் பிரார்த்தனையினுல் சுபகர்மவடிவ அக்கினியஸ்திரத்தி னுல் பாபசமுதாயவடிவ காண்டவவனத்தினை எரித்து, அவ்வக்கினியினைப் புஷ்டியுள்ளவனுக்கி அக்ஷய (ஒழியாத) யுக்திவடிவ தூணிரத்தினை (அம்புக்கூட்டை)ப் பெற்ருன்.

அங்கு நிஷ்காம புண்ணியவடிவ மயனாகியதானவனால் சம்ரக்ஷணத்தால் கூறிய யுதிஷ்டிர ராஜன் பொருட்டுத் தூரிய பதத்தில் நிலைத்தல்வடிவ சபையினையும், கூறிய பீமன் பொருட்டுத் திடத்தன்மைவடிவ கதையினையும், தன்பொருட்டு அபேதத்தினைப் போதிக்கும் அஜபாதி மந்திரங்களின் ஜபவடிவ தேவதத்த மென்னும் சங்கத்தினையும் சம்பாதித்தான். பின் பாண்டவர் அங்கு நாநாநற்குணவடிவ ராஜாக்களை நிரோதிப்பவர்களான அநாத்மாவில் ஆத்மாவையறிதற்றன்மைவடிவ ஜராசந்தன் முதலிய துஷ்டராஜாக்களின் நாசபூர்வகமாகச் சற்குணவடிவ சிரேஷ்டராஜாக்களை

வசப்படுத்தி, அதனை நினைத்தல், அதனைப் பேசுதல், ஒருவரோடொருவர் அதனைப் போதித்தல்மயமான பிரஹ்மாப்பியாசவடிவ இராஜசூயயாகத்தினைச் செய்து, அதில் புத்திபூர்வகமாகச் செய்யப்பட்ட பாபங்களோடுகூடிய நானாவிஷயங்களிலுண்டாம் இராகவடிவ ஹவிஸினை ஹோமஞ் செய்தனர். எப்போது அக்கூறிய ராஜ்யத்திற்குத் தீவிரத்தன்மையுண்டாகத் தொடங்கியதோ, சாக்ஷித்தன்மைவடிவ மயதானவனால் பெற்ற சபையில் பாண்டவர்களுக்கு நிலைப்பு உண்டாயிற்றே, அப்போது முற்கூறிய துரியோதனனால் முற்கூறிய சகுனி வாயிலாகக்கூறிய யுதிஷ்டிராஜாவைப்

பேதஞானவடிவ சூதாடுவித்து, சர்வஐசுவரியங்களையும் கவர்ந்து கொண்டு, தாஸத்தன்மைமய ஜீவத்தன்மைவடிவ தாரித்திரியத்தையும் பேதமாகிய துக்கத்தோடு கூடிய சகுணோபாசனைவடிவ வனத்திற்செல்லுதலையும் அப்பாண்டவர்களடையச் செய்தனர். அதாவது சகுணோபாசனகாலத்தில் பதார்த்தசோதனம் சிரவணமுதலியயாவும் சகுணப்பிரஹ்மத்தினதாகவே நிகழ்ந்தன. அங்குச் சுபசாதனங்களின் சமூகவடிவ ரிஷிக்கூட்டத்துடனும் மந்தஜிஞ்ஞாஸைவடிவ துரௌபதியுடனும் அப்பாண்டவர் பன்னிரண்டு வருஷம் வரையில் சுற்றிக்கொண்டிருந்தார்கள். கூறிய சூரி

யனூற் பெற்ற *அக்ஷயபாத்திரத்தினுல் சர்வ சாதனங்களின் பாலனமுண்டாய்க்கொண்டிருந்தது. ஈசுவரரூப சிவனு டைய கிருபையினுலும் குருரூப இந்திரனது கிருபையினு லும் கூறிய அர்ஜுனனுக்கு விசாரவடிவ யுத்தத்தில் உப யோகமுள்ள அநேகப் பிரபல யுக்திவடிவ அஸ்திரங்கள் கிடைத்தன. பின்னர் அவர்கள் லோகலஜ்ஜைவடிவ விரா டநகரத்தில் இரகசிய விசாரவடிவ அஞ்ஞாதவாசம் செய்து, இந்திரிய கணவடிவ கோதனத்தினை (பசுக்களை) விஷயாபி முகஞ்செய்தல்வடிவ கவர்தலைச் செய்பவர்களான கூறிய கௌரவர்களைச் செயித்து வெளிப்பட்டார்கள்.

பின்னர்ச் சகலசாதனவடிவ போர்வீரர்களினது பிராப்தியின் நிமித்தத்தினாலும், போதவடிவ அர்ஜுனனுக்குக் கணந்தோறும் சகாயவடிவினரான சாரதிவடிவினராகிய கூறிய விவேகஞானவடிவ ஸ்ரீ கிருஷ்ணரது கிருபையினாலும் அந்தப் பஞ்சசாதனவடிவ பாண்டவர்களுக்குச் சகாயஞ்செய்யும் சாஸ்திர சம்ஸ்காரத்தினால் அந்தர்முகப் பிரவாகமுடைய ஐந்து ஞானேந்திரியம், புறம்போந்த இதுவெனும் விருத்திவடிவ மனம், வாக்கிந்திரியம் என்னும் ஏழு வாயில்களால் கிரமமாகச் (க) சுத்த கல்யாணத்தைச் செய்வனவாகிய கதை முதலியவற்றைக் கேட்டல், (உ) ஹரிகுரு

முதலியோர் சரணங்களைப் பரிசித்தல், (௩) ஹரி குரு சாஸ்திர முதலியவற்றைக் காண்டல், (௪) ஹரிக்கு நிவேதிக்கப்பட்டனவும் முநிவர்களுண்ட சேடமுமான அந்நாதிகளின் இரஸத்தைக் கிரகித்தல், (௫) ஹரி குரு நிர்மால்ய புஷ்பாதிகளின் கந்தத்தினைக் கிரகித்தல், (௬) சகுண நிர்க்குணப் பிரஹ்மசிந்தனத்தில் உபயோகமுள்ளனவாகிய சிரவணாதி சாமக்கிரிகளைக் கிரகித்தல், சுபமான ஓதல் ஓதுவித்தல் பிரணவ பஞ்சாக்ஷராதி ஜபமுதலிய அர்த்தம் வெளிப்படுதல் என்னும் ஏழு சுபசாத்துவிக அந்தக்கரணத்தினது பரிணாமங்களின் சமூகவடிவ ஏழு அக்குரோணிக் கணக்

குள்ள தைவீசம்பத்திவடிவ சேனை சம்பாதிக்கப்பட்டது. அப்பாண்டவ சேனையின் திருஷ்டதுயும்னனாகிய சேனபதியோர்ஜுனர்களோடுகூடிய இருபது நாயகர்களைக் கூறுவாம்:—

[க] வைராக்கியரூப துருபதனது புத்திரனை வாசனாக்ஷயவடிவ திருஷ்டதுயும்னன். [உ] கூறிய கடோற்கசன் பர்பரிகன் என்பவர்களின் பிதாவும், விபரியயாதி துரியோதனாதியரை நாசஞ்செய்யும் நிதித்தியாசனவடிவ பீமன். [ந] மந்தபோதவடிவ அர்ஜுனன். [ச] விஷமத்தன்மை வடிவ பூரிசிரவாவை நாசஞ்செய்யும் எங்கும் சமத்தன்மை

வடிவ சாத்தியகி. [ரு] சுபசாதனவடிவபாண்டவர்களைக் காப்பவனும் விசாரவடிவபோரின் சர்வசாமக்கிரிகளையுஞ்சம்பாதிப்பவனுமான தீவிரமுமுக்ஷுத்தன்மைவடிவவிராடராஜன். [சா] போதமுதலிய சர்வசாதனங்களுக்கும் வெகுசகாயஞ்செய்யும் தோஷதிருஷ்டி ஜந்நிய தீவிரதர அபரவைராக்கிய வடிவ துருபதராஜன். [எ] அபயவடிவ நிர்பயத்துவஜமுடைய திருஷ்டகேது. [அ] விசுத்தஸ்வபாவவடிவ சேகிதானன். [கூ] ஞானயோகரூப காசிபுரத்தில் உள்ள ஸ்திரத்தன்மை வடிவ காசிராஜன். [க0] திருணமின்றியபூமியிலுள்ள அக்கினிக்குச்சமானமாக வெகுசத்துருக்களை ஜயிப்பவனான

க்ஷமாஸ்வபாவவடிவ புருஜித்து. [கக] சரளஸ்வபாவமயஆர் ஜவ(நேர்மை)வடிவ குந்திபோஜன். [கஉ] உதாரஸ்வபாவவ டிவ சிபியின்வம்சத்திற்றோன்றிய சற்பாத்திரங்களில் கொ டுத்தல்வடிவ சைப்பியன். [கங] காமக்குரோதங்களின் வேகத்தைத்தடுத்தலாகிய யுத்தத்திறைல் தனது விருத்தி (பெருக்க)வடிவ குரோதமுடையவனைதைரியவடிவ யுதாம ன்யு. [கச] தனதுசத்தையினுல் சிங்கம் மான் முதலிய விரோ திகளான பிராணிகளின் வைரத்தைக்கெடுப்பதும், அஹிம் ஸைவடிவ தாயினிடத்தில்இரக்கவடிவ பிதாவினுல் பிறந்த தும் உத்தமதேஜசுடையதுமான துரோகமின்மைவடிவ உத்

தமேளஜஸா. [கரு] மிருந்தவிவேகவடிவ ஸ்ரீகிருஷ்ணனு டையதங்கையும் ஞானவடிவ அர்ஜுனனது பத்தினியுமான சத்ஸங்கதிவடிவ சுபத்திரையின் புத்திரனும், கிருகமடாதி பரிக்கிரகவடிவ சக்கிரவியூகத்தின் யுத்தத்தில் ஸ்திரீயினி டத்தில் கிடைத்த பஞ்சவிஷயவடிவ பிரபலன் ஜயத்திரதன் முதலிய யுத்தவீரர்களது சகாயத்தோடுகூடிய வாசனுக்ஷய வடிவ திருஷ்டத்யும்னனால் நாசமாகும் ஸ்திரீசங்கமவடிவ துற்சாசனனுடைய புத்திரனாகிய நிர்பல யுத்தவீரனால் நாச மாகத்தக்கவனுமான வைராக்கியத்தினால் வாந்தியன்னத் தினைப்போல விட்ட விஷயபோகங்களில் மறுபடியும் தீனமா

தலின்மைமய வைராக்கியத்தின் பயனாகிய உபராமவடிவ அபிமன்யு. [௬௯-௨௦] சமதமதபசிர்த்தாசமாதானவடிவ பிரதிவிந்தியன் முதலிய துரௌபதியின் புத்திரர் ஐவர். இவர்கள் இருபதின்மரும் பாண்டவசேனையின் நாயகர்கள். பிரத்தியக்ஷபின்னபிரஹ்மரூப தேசத்தில் உள்ள அதிகாரி மனுஷ்ய தேகமய ஹஸ்தினாபுரவடிவ இராஜதானியில் கூறிய பாண்டு ராஜாவினால் அதிஷ்டிக்கப்பட்டதாயிருத்தலின் பாண்டவர்களுக்குக் கிடைக்கத்தக்க இராஜ்யத்தினை எப்போது அவிவேகவடிவ திருதராஷ்டிரனும் விபரியயாதி அவன் புத்திரர்களும் அழுத்திக்கொண்டனரோ, அப்போது பாண்டவர்

கள் அவர்களோடு யுத்தஞ்செய்தற்காகக் கூறியசேனையைச் சம்பாதித்தனர். அவ்விருசேனைகளும் தத்தம் விஷயங்களின்சமூகவடிவ வெளி உள் கற்பிதப்பிரதேசத்தில் பிராணவடிவ வாகனங்களின் பலத்தால் யுத்தத்தின் பொருட்டுச் சென்று, ஒன்று சேர்ந்தார்கள். அங்கு யுத்தத்தின் ஆரம்பகாலத்தில் சம்சய விபரியயாதி தனது சம்பந்திகளின் தரிசனத்தால் தளர்ச்சியடைந்த தத்துவஞானவடிவ அர்ஜுனனை மிகுந்த விவேகவடிவ ஸ்ரீ கிருஷ்ணர் ஜடசேதனங்களினது விவேசனத்தின் உச்சாரணவடிவ கீதையின் உபதேசத்தால் திடப்படுத்தி, முன்னரே பாதிக்கப்பட்டவரான

அஞ்ஞானதற்காரியரூப சகலப் பிரபஞ்சவடிவ ஆசுரீ சேனை
யின் பாதத்தினைச்செய்வித்தார். அப்போது தத்துவஞான
வடிவ அர்ஜுனன், வியவகார பாமார்த்தங்களினது விசா
ரத்தின் தசைவடிவ சர்வகாலத்திலும் தோற்றுகின்றவரும்,
கூறிய அர்ஜுனன் அவனுக்குத் துணைவரான பீமாதியர்
என்பவர்களுக்கு முன்னரே உண்டாயிருத்தலால் ஜேஷ்டரு
மாயிருத்தலின், பதார்த்த சோதனமய யுதிஷ்டிரவடிவ
மூத்த தமையனை இராஜாவாக்கிச் சிரவணாதி பிராதாக்க
ளோடுகூடப் பிரஹ்மாபின்னஆத்மமயஸ்வவிஷயவடிவ ஸ்வ
தேசத்தில் நிற்பவன் (ஆரூடன்) ஆனான்.

முற்றிற்று.

॥ ॐ ॥

॥ श्री कृष्णायपरब्रह्मणे ममः ॥

ஸ்ரீகிருஷ்ணாயபரப்பிரஹ்மணே நம:

# ॥ अथ गीतामाहात्म्य प्रारंभः ॥

## கீதாமாகாத்மியம்.



॥ धरोवाच ॥

भगवन्परमेशान भक्तिरव्यभिचारिणी ।
प्रारब्धं भुज्यमानस्य कथं भवति हे प्रभो ॥ १ ॥

பூமிதேவி கேட்கலாயினள் :— பகவானே! (நடத்து பவருள்) மேலான நடத்துபவரே! ஏ! பிரபுவே! பிராரப் தத்தினைப் புசிப்பவனுக்கு வியபிசாரமின்றிய பக்தி எப்படி உண்டாகும்? (க)

॥ विष्णुरुवाच ॥

प्रारब्धं भुज्यमानो हि गीताभ्यासरतः सदा ।
स मुक्तः स सुखी लोके कर्मणा नोपलिप्यते ॥ २ ॥

விஷ்ணுவானவர் சொல்லலாயினர் :—

பிராரப்தத்தினைப் புசிப்பவனாய் எதனால் எப்போதும் கீதாப்பியாசத்தில் இரமிப்பவனாகின்றானோ, அவன் உலகத் தில் முக்தன்; அவன் சுகி; கர்மத்தினால் பற்றப்படான். (உ)

महापापादिपापानि गीताध्यानं करोति चेत् ।
क्वचित्स्पर्शं न कुर्वंति नलिनीदलमंबुवत् ॥ ३ ॥

கீதையைப் படிப்பானாயின் அவனை மகாபாப முதலிய பாபங்கள் தாமரையிலையினை நீர்போல் ஒருபோதுந்தீண்டா.

गीतायाः पुस्तकं यत्र यत्र पाठः प्रवर्तते ।
तत्र सर्वाणि तीर्थानि प्रयागादीनि तत्र वै ॥ ४ ॥

கீதையின் புஸ்தகம் எங்குஉளதோ, எங்குப்பாடம் பிரவர்த்திக்கின்றதோ, அங்குப் பிரயாக முதலிய சர்வதீர்த்தங்களுமுள. அங்கு

(ச)

सर्वे देवाश्च ऋषयो योगिनः पन्नगाश्च ये ।
गोपाला गोपिका वापि नारदोद्धवपार्षदैः ॥ ५ ॥

சர்வதேவர்களும், இருஷிகளும், யோகிகளும், பந்நகர் எவர்களோ அவர்களும், கோபாலர்களும், கோபிகைகளும், நாரதர் உத்தவர்முதலிய பக்கத்திருப்பவர்களோடு இருப்பர். (௫)

सहायो जायते शीघ्रं यत्र गीता प्रवर्तते ।
यत्र गीताविचारश्च पठनं पाठनं श्रुतम् ।
तत्राहं निश्चितं पृथ्वि निवसामि सदैव हि ॥ ६ ॥

எங்குக்கீதை பிரவர்த்திக்கின்றதோ, அங்குவிரைவில் சகாயமுண்டாகிறது. எங்குக் கீதையின் விசாரமும், படித்தலும், படிப்பித்தலும், கேள்வியும் உளதோ, அங்குப்பிருதிவியே! நிச்சயமாக யான் எப்போதுமே வசிக்கின்றேன். (சு)

गीताश्रयेऽहं तिष्ठामि गीता मे चोत्तमं गृहम् ।
गीताज्ञानमुपाश्रित्य त्रींल्लोकान्पालयाम्यहम् ॥ ७ ॥

கீதாசிரயத்தில் யான்நிற்கின்றேன். கீதை எனது உத்தமமானவீடு. கீதாஞானத்தினைத்தழுவி மூன்றுலகங்களையும் யான்பரிபாலிக்கின்றேன். (எ)

गीता मे परमा विद्या ब्रह्मरूपा न संशयः ।
अर्धमात्राक्षरा नित्या स्वानिर्वाच्यपदात्मिका ॥ ८ ॥

கீதை எனது பிரஹ்மவடிவமாகிய மேலானவித்தையாம்; சம்சயமில்லை. அது *அர்த்தமாத்திரையாகிய அக்ஷரமும், நித்தியமும், தனது அநிர்வாச்சிய (சொல்லவொண்ணாப்) பத வடிவினதுமாம். (அ)

चिदानंदेन कृष्णेन प्रोक्ता स्वमुखतोऽर्जुनम् ।
वेदत्रयी परानंदा तत्त्वार्थज्ञानसंयुता ॥ ९ ॥

---

* பிரணவத்தின் பிரிவுகளான அ உ ம் அர்த்தமாத்திரை என்பவற்றுள் துரியம் அர்த்தமாத்திரை யெனப்படும்.

வேதமூன்றுவடிவினதும், பரமாநந்தமும், தத்துவார்த்தஞானத்தோடு கூடியதுமாய்ச் சிதாநந்தனாகிய கிருஷ்ணனல்தனது திருமுகத்தால் அர்ஜுனனுக்குச் சொல்லியருளியதாம். (௯)

योऽष्टादशजपो नित्यं नरो निश्चलमानसः ।
ज्ञानसिद्धिं स लभते ततो याति परं पदम् ॥ १० ॥

எந்தநரன் நித்தியமும் நிச்சலமான மனதோடு பதினெட்டத்தியாயமும் ஜபிக்கின்றானோ, அவன் ஞானசித்தியையடைகின்றான். அதன்பின் பரம(மேலான) பதத்தினை யடைகின்றான். (௧௦)

पाठेऽसमर्थः संपूर्णे ततोऽर्धं पाठमाचरेत् ।
तदा गोदानजं पुण्यं लभते नात्र संशयः ॥ ११ ॥

இதனை முழுவதுமாகப் படிக்கச் சமர்த்தனாகாவிடின், இதிற்பாதியைப் படிக்கக்கடவன். அப்போது கோதானத்தினாலாம் புண்ணியத்தினைப் பெறுவான்; இதிற்சம்சயமில்லை. (கக)

त्रिभागं पठमानस्तु गंगास्नानफलं लभेत् ।
षडंशं जपमानस्तु सोमयागफलं लभेत् ॥ १२ ॥

மூன்றிலொருபாகம் படிக்கிறவனே, கங்காஸ்நானபலத்தையடைவான். ஆறிலொருபாகம் ஜபிப்பவனே, சோமயாக பலத்தை யடைவான். (கஉ)

एकाध्यायं तु यो नित्यं पठते भक्तिसंयुतः ।
रुद्रलोकमवाप्नोति गणो भूत्वा वसेच्चिरम् ॥ १३ ॥

ஒருஅத்தியாயத்தினை எவன்நித்தியம் பக்தியோடுகூடியவனாய்ப் படிக்கின்றானோ, அவன் உருத்திரலோகத்தினையடைகின்றான். (அங்கு) கணங்களுள் ஒருவனாய் நெடுங்காலம் வசிப்பன். (௧௩)

अध्यायं श्लोकपादं वा नित्यं यः पठते नरः ।
स याति नरतां यावन्मन्वंतरं वसुंधरे ॥ १४ ॥

ஒருஅத்தியாயமாவது அல்லது அதன் சுலோகங்களில் காற்பாகமாவது தினமும் எந்த நரன் படிக்கின்றானோ, அவன் பூமியே! ஒருமநுவந்தரம் (ஒருமநுவின் ஆயுட்காலம் வரையில்) மனிதத்தன்மையினை அடைகின்றான். (கச)

गीतायाः श्लोकदशकं सप्त पंच चतुष्टयम् ।
द्वौ त्रीनेकं तदर्धं वा श्लोकानां यः पठेन्नरः ॥ १५ ॥

கீதையின் சுலோகங்களுள் பத்து, அல்லது ஏழு, அல்லது ஐந்து, அல்லது நான்கு, அல்லது மூன்று, அல்லது

இரண்டு, அல்லது ஒன்று அல்லது அதன்பாதியாகிய சுலோகங்களை எந்த நரன் படிக்கின்றானோ, (கரு)

चंद्रलोकमवाप्नोति वर्षाणामयुतं ध्रुवम् ।
गीतापाठसमायुक्तो मृतो मानुषतां व्रजेत् ॥ १६ ॥

அவன் நிச்சயமாகப் பதினாயிரம் வருஷங்கள் சந்திரலோகத்தினையடைகின்றான். கீதாபாடத்தோடு கூடியவனாய் மரித்தவன் மானுடத்தன்மையினை யடைவான். (கசா)

गीताभ्यासं पुनः कृत्वा लभते मुक्तिमुत्तमाम् ।
गीतेत्युच्चारसंयुक्तो म्रियमाणो गतिं लभेत् ॥ १७ ॥

உலகத்தில் கீதையினை ஆசிரயித்து ஜநகர்முதலிய வெகு அரசர்கள் பாபமொழிந்தவர்களாய்ப் பரமபதத்தினை அடைந்தார்களென்று சொல்லப்பட்டுளது. (௨0)

गीतायाः पठनं कृत्वा माहात्म्यं नैव यः पठेत् ।
वृथा पाठो भवेत्तस्य श्रम एव ह्युदाहृतः ॥ २१ ॥

கீதையினைப் படித்து மாகாத்மியத்தினை எவன் படியானே, அவனது படிப்பு வீணாகும்; சிரமமேயாம் என்று சொல்லப்பட்டுளது. (௨௧)

एतन्माहात्म्यसंयुक्तं गीताभ्यासं करोति यः ।
स तत्फलमवाप्नोति दुर्लभां गतिमाप्नुयात् ॥ २२ ॥

இந்தமாகாத்மியத்தோடு கீதாப்பியாசத்தினை எவன் செய்கின்றானோ, அவன் அதன்பயனை யடைகின்றான். பெறுதற்கரிய கதியினையும் அடைவான். (உஉ)

॥ सूत उवाच ॥

माहात्म्यमेतद्गीताया मया प्रोक्तं सनातनम् ।
गीतान्ते च पठेद्यस्तु यदुक्तं तत्फलं लभेत् ॥ २३ ॥

ஸூதர்சொல்லலாயினர் :—

என்றுச் சொல்லப்பட்ட பழைமையான இக்கீதாமாகாத்மியத்தினைக் கீதையின் முடிவில் எவன் படிப்பானோ, அவன் கூறியது எதுவோ, அப்பயனையடைவான். (உங)

॥ इति श्रीवाराहपुराणे श्रीगीतामाहात्म्यं संपूर्णम् ॥

இவ்வாறு வராகபுராணத்திற் கூறப்பட்டுள்ள

கீதாமாகாத்மியம்

முடிந்தது.



॥ ॐ ॥

॥ तत्सद्ब्रह्मणे नमः ॥

॥ श्रीगणेशाय नमः ॥

॥ श्रीगोपालकृष्णाय नमः ॥

ॐ अस्य श्रीभगवद्गीतामालामंत्रस्य भगवान्वेदव्यास ऋषिः ॥ अनुष्टुप् छंदः ॥ श्रीकृष्णः परमात्मा देवता ॥ अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषस इति बीजम् ॥ सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रजेति शक्तिः ॥ अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुच इति कीलकम् ॥ नैनं छिंदंति शस्त्राणि नैनं दहति पावक इत्यंगुष्ठाभ्यां

नमः ॥ न चैनं क्लेदयंत्यापो न शोषयति मारुत इति तर्जनीभ्यां नमः ॥ अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव चेति मध्यमाभ्यां नमः ॥ नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातन इत्यनामिकाभ्यां नमः ॥ पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रश इति कनिष्ठिकाभ्यां नमः ॥ नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि चेति करतलकरपृष्ठाभ्यां नमः ॥ इति करन्यासः ॥ अथ हृदयादिन्यासः ॥ नैनं छिंदंति शस्त्राणि नैनं दहति पावक इति हृदयाय नमः ॥ न चैनं क्लेदयंत्यापो न शोषयति मारुत इति शिरसे स्वाहा ॥ अच्छेद्योऽय-

मदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव चेति शिखायै वषट् ॥ नित्यः सर्वगतः स्थानुरचलोऽयं सनातन इति कवचाय हुम् ॥ पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रश इति नेत्रत्रयाय वौषट् ॥ नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि चेति अस्त्राय फट् ॥ श्रीकृष्णप्रीत्यर्थे पाठे विनियोगः ॥



॥ ॐ ॥

# ॥ अथ ध्यानम् ॥

## தியானம்.



ओं पार्थाय प्रतिबोधितां भगवता नारायणेन स्वयं व्यासेन ग्रथितां पुराणमुनिना मध्येमहाभारतम् । अद्वैतामृतवर्षिणीं भगवतीमष्टादशाध्यायिनीमंब त्वामनुसंदधामि भगवद्गीते भवद्वेषिणीम् ॥ १ ॥

பகவானாகிய நாராயணனால் சுவயம் பார்த்தனுக்கு உபதேசிக்கப்பட்டவளும், புராணமுனிவராகிய வியாசரால்

மகா பாரதத்தினடுவில் கோக்கப்பட்டவரும், அத்வைதாமிருதத்தினைப் பெய்பவளும், பகவதியும், பதினெட்டு அத்தியாயவடிவினளும், பவத்தினை (பிறப்பை) த்துவேஷிப்பவளுமான பகவத்கீதையாகிய அம்மையே உன்னை அநுசந்திக்கின்றேன். (க)

नमोऽस्तु ते व्यास विशालबुद्धे फुल्लारविंदायतपत्रनेत्र ।
येन त्वया भारततैलपूर्णः प्रज्वालितो ज्ञानमयः प्रदीपः ॥ २ ॥

எந்த உன்னால் பாரததைல நிரம்பிய ஞானமயமான தீபம் செவ்வையாய்க் கொழுந்தப்பட்டுளதோ, அத்தன்மையவியா

சரனு விசாலபுத்தியும் மலர்ந்த தாமரையின் விசாலமான இதழ்போன்ற கண்ணுடையவருமான உனக்கு நமஸ்காரம் உளதாகுக. (உ)

प्रपन्नपारिजाताय तोत्रवेत्रैकपाणये ।
ज्ञानमुद्राय कृष्णाय गीतामृतदुहे नमः ॥ ३ ॥

பாரிஜாதத்தினைப் பெற்றவரும், சவுக்கோடுகூடிய கோலினை ஒருகையிலுடையவரும், ஞானமுத்திரையை யுடையவரும், கீதாம்ருதத்தினைக் கறப்பவருமான கிருஷ்ணபகவானுக்கு நமஸ்காரம். (௩)

सर्वोपनिषदो गावो दोग्धा गोपालनंदनः ।
पार्थो वत्सः सुधीर्भोक्ता दुग्धं गीतामृतं महत् ॥ ४ ॥

சர்வ உபநிடதங்களும் கோக்கள். கோபாலநந்தனுகிய பகவான் கறப்பவன். பார்த்தன் கன்று. நல்லறிஞன் அநுபவிப்பன். மகத்தான கீதாமிருதம் பால். (ச)

वसुदेवसुतं देवं कंसचाणूरमर्दनम् ।
देवकीपरमानंदं कृष्णं वंदे जगद्गुरुम् ॥ ५ ॥

வசுதேவன் புத்திரரும், தேவனும், கம்ஸ சாணூரர்களைக் கொன்றவரும், தேவகியின் பரமாநந்தரும், ஜகத்குருவுமான கிருஷ்ணபகவானை வணங்குகிறேன். (ரு)

भीष्मद्रोणतटा जयद्रथजला गांधारनीलोपला शल्यग्राहवती
कृपेण वहनी कर्णेन वेलाकुला । अश्वत्थामविकर्णघोरमकरा दुर्यो-
धनावर्तिनी सोत्तीर्णा खलु पांडवै रणनदी कैवर्तकः केशवः ॥ ६ ॥

பீஷ்ம துரோணர்களாகிய கரைகளுள்ளதும், ஜயத்திரதனுகிய ஜலமுடையதும், காந்தாரனுகிய நீலோற்பலமுடையதும், சல்லியனுகிய முதலையுடையதும், கிருபாசாரியரால் ஓடுவதும், கர்ணனுல் அலைக்கப்பட்டதும், அசுவத்தாமா விகர்ணனென்னும் கோரமான மகரங்களை யுடையதும், துரியோதனனுகிய சுழியையுடையதுமான இரண (போர்)நதியாகிய அது நிச்சயமாகப் பாண்டவர்களாற்கடக்கப்பட்டது. கடத்துவிப்பவன் கேசவன். (கா)

पाराशर्यवचःसरोजममलं गीतार्थगंधोत्कटं नानाख्यानककेसरं हरिकथासंबोधनाबोधितम् । लोके सज्जनषट्पदैरहरहः पेपीयमानं मुदा भूयाद्भारतपङ्कजं कलिमलप्रध्वंसि नः श्रेयसे ॥ ७ ॥

*பாராசரியரான வியாசருவாக்காகிய சரஸிஜுண்டான தும், சுத்தமானதும், கீதார்த்தமாகிய வாசனை மிகுந்ததும், பல ஆக்கியானங் (வார்த்தை) களான கேசரங்களுள்ளதும், ஹரிகதையாகிய சம்போதனையால் போதிக்கப்பட்டதும், உலகத்தில் சற்சனர்களான வண்டுகளால் தினந்தோறும்*

அடிக்கடி பருகப்படுவதும், கலியின் மலத்தை அத்தியந்தம் கெடுப்பதுமான பாரதமாகிய தாமரை நமக்குச் சிரேயசின் பொருட்டதாகுக. (எ)

मूकं करोति वाचालं पंगुं लंघयते गिरिम् ।
यत्कृपा तमहं वंदे परमानंदमाधवम् ॥ ८ ॥

எவனுடைய கிருபையானது ஊமையை வாக்குச் சமர்த்தனக்குமோ, முடவனை மலையைத்தாண்டச்செய்யுமோ, அப்படிப்பட்ட பரமாநந்த மாதவரை யான் வணங்குகிறேன்.(அ)

यं ब्रह्मावरुणेंद्ररुद्रमरुतः स्तुन्वंति दिव्यैः स्तवैर्वेदैः सांगपदक्रमोपनिषदैर्गायंति यं सामगाः । ध्यानावस्थिततद्गतेन मनसा पश्यंति यं योगिनो यस्यांतं न विदुः सुरासुरगणा देवाय तस्मै नमः ॥ ९ ॥

எவரைப் பிரஹ்மா வருணன் இந்திரன் உருத்திரன் மருத்துக்கள் என்பவர் திவ்வியங்களான ஸ்துதிகளால் ஸ்துதிக்கின்றனரோ, எவரைச் சாமகானஞ்செய்வோர் அங்கம் பதம் கிரமம் என்பவற்றோடுகூடிய உபநிஷதங்களாகிய வேதங்களால் பாடுகின்றனரோ, எவரைத் தியானத்தில்

நிலத்து அவனிடத்துப் பொருந்தியதான மனதினால் காண்கின்றனரோ, எவருடைய முடிவினைச் சுராசுரகணங்கள் அறியாரோ, அந்தத்தேவனுக்கு நமஸ்காரம். (கூ)

॥ इति ध्यानम् ॥

தியானம் முடிந்தது.



# பாயிரம்.

## மங்கலம்.

### ஸ்ரீ கணேசர் ஸ்துதி.

பாசத்தோ டங்குசமும் பாணியினிற் றாங்கிமிக
நேசத்தோ டுள்ளத்தே நின்றெனது—பாசமதைக்
கட்டி யிருக்கிக் கனங்குசத்தான் மாய்த்திடுக
குட்டிக் கரிமுகத்தெங் கோன்.

## ஸ்ரீ சாரதா ஸ்துதி.

அக்கர பதங்க ளாகி யனைத்தினும் வேற தாகி
அக்கர பரையாய் நின்றே யகிலமுந் தாங்கி நிற்கும்
அக்கர வபய மேந்தி யருளொடு வரம தியும்
அக்கர வாணி பாத மநுதினஞ் சிந்தை செய்வாம்.

## ஸ்ரீ சங்கராசார்யர் ஸ்துதி.

இவ்வுல கறியு மான்மா வேகமே யென்னும் ஞானம்
பவ்வ நோய் தீர்ப்பதென்னப் பலருமே யறியும் வண்ணம்
செவ்விதிற் பாடி யாதிசெய் தவெம் பகவற் பாதன்
திவ்விய பதத்திற் றாழ்ந்தார் சேருவர் மேலாம் வீடே.

ஸ்ரீ சற்குருவிஷ்ணுஸ்வாமி துதி.

சுந்தர ஞானத் தோடு தொன்மையாஞ் சுகமு மீந்து
தந்தையின் மிக்க தான தயையினை யுடைய கோவா
மிந்திரை மணாள னும மெய்து மெய்க்கு ரவனோடு
முந்திய மேலோர் தம்மை முன்னியே வணக்கஞ் செய்வாம்.

ஸ்ரீ பகவான் ஸ்துதி.

சத்தினோ டாநந் தந்தான் றன்பெயர்ப் பொருள தாக
மித்தையாந் துன்ப மெல்லா மிரிந்திடப் பிளப்போ னென்றும்
இத்தகை கிருஷ்ணப் பேரை யெழில்பெறப் பெற்ற வந்த
வத்துவோ டபேத மாகும் வணக்கம நியற்று வாமே.

(இ-ள்) கிருஷ் (कृष्) என்னும் சொல்லின் பரியாயமான பூ (भू) என்னும் சொற்பொருளான ஸத்; நிர்விருதி (சுக) வாசகமான ண என்னும் சொற்பொருளான ஆநந்தம்; இவ்விரண்டும் கூடிய சதாநந்தன் என்பதுதனது கிருஷ்ணன் என்னும் பெயருக்குப் பொருளாக: மித்தையாகிய துன்பங்களெல்லாம் நாசமாகுமாறு தன்னருட்சக்தியால் பிளப்பவன் (கர்ஷணஞ் செய்பவன்) என்னும் இத்தன்மையவிற்பத்தியமைந்த கிருஷ்ணன் என்னும் யோகப்பெயரை அழகு பொருந்தப்பெற்றுள்ள அந்த (கோபாலோத்தரதாபநீயவுபநிடதத்தில் துர்வாச கோபிகையரின் சம்வாதத்தாற் பிரதி

பாதிக்கப்பட்டுள்ள பரப்பிரஹ்மமாகிய) வத்துவோடு (உள் பொருளாகிய சத்தோடு) அபேதமாதலாகிய வணக்கத்தினைச் செய்வாம். (எ-று)

## நூல் வரலாறு.



போர்முனை தன்னி லையம் பொருந்திய பார்த்த னுக்கா
எர்மிகு கண்ண னன்பா லியம்பிய கீதை தன்னை
சீர்மிகு வியாத ஞானே திவ்விய திருட்டி பெற்றங்
கார்வமார் திருத ராட்டிரற் கறைந்தனன் சஞ்ச யன்றான்.

அத்தகு கீதை தன்னை யவனியோ ரறியு மாறு
வித்தக வியாத னூலால் விளம்பின னதனை யானும்
கத்திய ரூப மாகக் கழறுவ னன்றி ஞேடே
இத்தமி ழகத்தாரி யாரு மெளிதினி லுணரு மாறே.

நூலியல்பு.

முன்னுரை பலவு மாய்ந்து முநிமொழி தனக்கு நேராச்
சொன்னதா விதனை மூல சுலோகத்தோ டொத்து நோக்கும்
நன்னய புத்தி யுள்ளார் நலமுள தெனவே கொள்வர்
பின்னுறு புத்தி மந்தர் பிதற்றுவர் பல்லாற் றனே.



॥ श्री कृष्णायपरब्रह्मणे नमः ॥

# ॥ अथ श्रीभगवद्गीता ॥

# ஸ்ரீ பகவத்கீதை.



# ஸ்ரீ பகவத்கீதை.



நூல்.

॥ प्रथमोऽध्यायः ॥

முதல் அத்தியாயம்.

॥ अर्जुनविषादयोगः ॥

அர்ஜுனவிஷாதயோகம்.



॥ धृतराष्ट्र उवाच ॥

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पांडवाश्चैव किमकुर्वत संजय ॥ १ ॥

[க] திருதராஷ்டிரன் சொல்லலாயினான் :—சஞ்சய ! தர்மக்ஷேத்திரமா(புண்ணியபூமியா)கிய குருக்ஷேத்திரத்தில் யுத்தஞ்செய்ய விரும்பியவர்களாய்க் கூடியவர்களாகிய என்னுடையவர்களும் (என் குமாரர்முதலியோரும்) பாண்டவர்களும் என்ன செய்தார்கள் ? (க)

॥ संजय उवाच ॥

दृष्ट्वा तु पांडवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसंगम्य राजा वचनमब्रवीत् ॥ २ ॥

[உ] சஞ்சயன் சொல்லலாயினான் :—அப்போது துரியோதனனாகிய இராஜா அணிவகுக்கப்பட்டுள்ள பாண்டவர்களது

சைனியத்தைப்பார்த்து, தன் ஆசாரியராகிய துரோணரு கிற்சென்று (பின்வரும்) வார்த்தையைச் சொல்லலாயினான்:—

पश्यैतां पांडुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥ ३ ॥

[௩] ஆசாரியரே! தமது சிஷ்யனும் புத்திமானுமாகிய துருபதராஜ புத்திர (திருஷ்டத்யும்ந)னால் அணிவகுக்கப் பட்ட பாண்டுபுத்திரர்களது இந்தப் பெரிய சேனையைப் பாரும். (௩)

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४ ॥

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित् कुंतिभोजश्च शैब्यश्च नरपुंगवः ॥ ५॥
युधामन्युश्च विक्रांत उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६ ॥

[ச-ரு-சா] இங்கு சூரர்களும் மகாவில்லிகளும் யுத்தத்தில் பீமார்ச்சுனர்களுக்குச் சமானமானவர்களுமான யுயுதானன் (சாத்தியகி), விராடன், மகாரதனான் அருபதன், திருஷ்டகேது, சேகிதானன், வீரியமுள்ள காசிராஜன், புருஜித், குந்திபோஜன், நரசிரேஷ்டனான சைப்பியன், வெற்றி

யுள்ள யுதாமன்னியு, பராக்கிரமமுடைய உத்தமௌஜா, சுபத்திரை புதல்வன் (அபிமன்னியு), துரௌபதை புத்திரர்கள் என்பவரிருக்கின்றனர். இவர்களெல்லோருமே மகாரதர்கள். (சு-ரு-சு)

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य संज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७ ॥

[எ] பிராஹ்மணோத்தமரே! நம்மவர்களில் சிறந்தவர்கள் எவர்களோ அவர்களைத் தெரிந்துகொள்ளுவீராக. என் சைனியத்தின் நாயகர்கள் எவர்களோ, அவர்களை நினைப்பூட்டுதற்பொருட்டுத் தமக்குச் சொல்லுகிறேன். (எ)

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिंजयः ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥ ८ ॥

अन्ये च बहवः शूरा मदर्थे त्यक्तजीविताः ।
नानाशस्त्रप्रहरणाः सर्वे युद्धविशारदाः ॥ ९ ॥

[அ-ரை] தாமும், பீஷ்மரும், கர்ணனும், கிருபாசாரியரும், யுத்தத்தில் வெற்றியுடைய அசுவத்தாமரும், விகர்ணனும், சௌமதத்தியும் (சோமதத்தன்குமாரனாகிய பூரிசிரவனும்), அப்படியே மற்றும் அநேக சூரர்களும் என்பொருட்டு வாழ

ஊத் துறந்தவர்களாய் நாநாவிதமான ஆயுதவிசேஷமான சாதனங்களுடையவர்களாயும், எல்லோரும் யுத்தத்தில் தேர்ந்தவர்களாயுமிருக்கின்றனர். (அ-கூ)

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥ १० ॥

[க0] (அப்படியானாலும்) பீஷ்மரால் செவ்வையாய்க் காக்கப்படும் அந்த நமதுபலம் (சைனியம்) அளவிறந்தது. பீமனால் இரக்ஷிக்கப்படும் இந்த இப்பாண்டவர்களது சைனியமோ அளவுபட்டதாம். (க0)

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिताः ।
भीष्ममेवाभिरक्षंतु भवंतः सर्व एव हि ॥ ११ ॥

[கக] (ஆதலால்) அணியின் வழிகளெல்லாவற்றிலும் தத்தமக்கேற்பட்ட இடங்களில் நிற்பவர்களாய் நீங்களெல்லோரும் பீஷ்மரையே இரக்ஷிப்பீர்களாக. (கக)

तस्य संजनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शंखं दध्मौ प्रतापवान् ॥ १२ ॥

[கஉ] பிரதாபமுடையவரும் குருசிரேஷ்டரும் பிதாமகருமான பீஷ்மாசாரியர் அத்துரியோதனனுக்குச்சந்தோஷத்

தை யுண்டுபண்ண உரத்த ஸிம்ஹநாதத்தைச் செய்து சங்கத்தைப் பூரித்தார். (கஉ)

ततः शंखाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यंत स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३ ॥

[கங] அதன்பின் (கௌரவர்களது) சங்கங்களும், பேரி (நகாரா)களும், பணவம் (மத்தளம்), ஆநகம், முரசு (பறை), கோமுகம் (கொம்பு) என்பவைகளும் உடனே முழங்கின. அச்சத்தம் பெரிதாயிற்று. (கங)

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यंदने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शंखौ प्रदध्मतुः ॥ १४ ॥

[கச] அதன்பின் வெள்ளைக்குதிரைகளால் பூட்டப்பட்ட பெருந்தேரிலிருப்பவர்களாகிய மாதவரும் அர்ஜுனனும் தமது திவ்வியமான சங்கங்களைச் செவ்வையாய்ப் பூரித்தனார். (கச)

पांचजन्यं हृषीकेशो देवदत्तं धनंजयः ।
पौंड्रं दध्मौ महाशंखं भीमकर्मा वृकोदरः ॥ १५ ॥

[கரு] பாஞ்சசன்னியத்தினை ருஷிகேச (இந்திரியங்கட்கீச)ரும், தேவதத்தத்தினைத் தனஞ்சயனும், பௌண்டிரமென்னும் சங்கத்தினை பயங்கரமானசெய்கையுடைய விருகோதரன்(ஓநாய்போன்ற வயிறுடையவன் அல்லது விருகமென்னும் அக்கினியை வயிற்றிலுடையவனான பீமசேனன்) பூரித்தான்.

अनंतविजयं राजा कुंतीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥ १६ ॥

[கசு] அநந்தவிஜயத்தினை குந்திபுத்திரராகிய யுதிஷ்டிரரும், சுகோஷம் மணிபுஷ்பகமென்னு மிரண்டனையும் நகுல சகதேவர்களும் பூரித்தார்கள். (கசு)

काश्यश्च परमेष्वासः शिखंडी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥ १७ ॥
द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शंखान्दध्मुः पृथक्पृथक् ॥ १८ ॥

[கஎ-கஅ] பிருதிவிபதியே! மேலானவில்லையுடைய காசிராஜனும், மகாரதனான சிகண்டியும், திருஷ்டத்துய்மனனும், விராடனும், பிறரால் ஜயிக்கப்படாத சாத்தியகியும், துருபதனும், துரௌபதி புத்திரர்களும், பெருத்த தோளுடைய அபிமன்னியுவும் எல்லோருமாக தனித்தனியே சங்கங்களைப் பூரித்தனர். (கஎ-கஅ)

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥ १९ ॥

[கசு] அந்த முழக்கமானது மண்ணிலும் விண்ணிலும் (எத்திக்கிலும்) விசேஷமாய்த் தொடர்ந்து சத்தித்து, தார்த்தராஷ்டிர (திருதராஷ்டிரனைச் சேர்ந்தவ)ர்களது இதயங்களைப் பேதித்தது. (கசு)

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान्कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसंपाते धनुरुद्यम्य पांडवः ॥ २० ॥

हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ।

॥ अर्जुन उवाच ॥

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ॥ २१ ॥

[௨௦-௨௧] அரசனே! பின்போர்செய்ய முயன்று நிற்கின்றவர்களாகிய தார்த்தராஷ்டிரர் (நம்மவர்)களைக் கண்டு அப்போது ஆயுதங்கள்விழப் பிரவிருத்தித்தபோது (படை வழங்கத்தொடங்கியபோது) ஹநுமக்கொடியோனாகிய பாண்டவன் (அர்ஜுனன்) வில்லை எற்றி ஹ்ருஷிகேசனைப் பார்த்து

இவ்வாக்கியத்தைச் சொல்லலாயினன்:—அர்ஜுனன் சொல்லலாயினன் :—அச்சுதனே ! இரண்டு சேனைகளுக்குமிடையில் என்னுடைய இரதத்தை நிறுத்தியருள்வீராக. (உ௦-உக)

यावदेतान्निरीक्ष्येऽहं योद्धुकामानवस्थितान् ।
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ २२ ॥

[உஉ] இந்த ரணபூமியில் எவர்களோடு யான் யுத்தஞ்செய்யவேண்டுமோ அத்தன்மைய யுத்தஞ்செய்யும் விருப்போடு நிற்பவர்களாகிய இவர்களை எவ்வெல்லையில் யான் காணலாமோ (அங்கு நிறுத்துக). (உஉ)

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ २३ ॥

[உ௩] துர்ப்புத்தியாகிய துரியோதனனுக்கு யுத்தத்தில் பிரியத்தைச் செய்யவிரும்பியவர்களாய் எந்த இவர்கள் வந்திருக்கின்றார்களோ அத்தன்மைய யுத்தஞ்செய்கின்ற வீரர்களை யான் பார்ப்பேனாக. (உ௩)

॥ संजय उवाच ॥

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४ ॥

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान्समवेतान्कुरूनिति ॥ २५ ॥

[உச-உரு] சஞ்சயன் சொல்லலாயினன் :—இவ்வாறு அரசனே! குடாகேச(நித்திரையை ஜயிப்பவ)னுகிய அர்ச்சுனனுல் சொல்லப்பட்ட பகவானனவர் இரண்டு சேனைகளுக்கும் மத்தியில் உத்தமமான இரதத்தை பீஷ்மர் துரோணர்முதலியோருக்கு முன்னும் எல்லா அரசர்களுக்கு முன்னும் நிறுத்தி பார்த்த! (யுத்தத்தின் பொருட்டுக்) கூடியுள்ள இக்கௌரவர்களைப் பார் என்று கூறினர். (உச-உரு)

तत्रापश्यत्स्थितान्पार्थः पितॄनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातॄन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ।
श्वशुरान्सुहृदश्चैव सेनयोरुभयोरपि ॥ २६॥. ॥

[உகூ] பார்த்தன் (பிருதாவின் புத்திரன்) அங்கு இரண்டு சேனைகளிலுமிருக்கின்ற பிதாக்களையும், பின் பிதாமகர்களையும், ஆசாரியர்களையும், அம்மான்மாரையும், பிராதாக்களையும், புத்திரர்களையும், பௌத்திரர்களையும், தோழர்களையும், அவ்வாறே மாமன்மாரையும், சுகிருத்து (ஒன்றையெதிர்பாராது உபகரிப்பவர்) களையுமே பார்த்தான். (உகூ)

तान्समीक्ष्य स कौंतेयः सर्वान्बंधूनवस्थितान् ।
कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ॥ २७॥. ॥

[௨௭] அக்குந்திபுத்திர(அர்ச்சுன)ன் அங்கு நிற்கும் அப்பந்துக்களெல்லோரையும் செவ்வையாய்ப்பார்த்து இரக்கமேலிட்டவனாய்ச் சோகித்து இது (பின்வருமாறு) கூறலாயினான். (௨௭)

॥ अर्जुन उवाच ॥

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ।
सीदंति मम गात्राणि मुखं च परिशुष्यति ॥ २८॥. ॥

[உஅ] அர்ச்சுனன் சொல்லலாயினன் :— கிருஷ்ணபகவானே! யுத்தஞ்செய்ய விரும்பிநிற்கின்ற இந்த சுவஜனங்களைப்பார்த்து என் அங்கங்கள் சோர்கின்றன ; வாய் உலருகிறது. (உஅ)

वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ।
गांडीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ॥ २९॥

[உகூ] என் சரீரத்தில் நடுக்கமும் மயிர்க்குச்சு முண்டாகின்றன. காண்டீவம் (என்னும் வில்) கையினின்றும் நழுவுகிறது. உடல் காந்துகிறது. (உகூ)

न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ।
निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ॥ ३०॥. ॥

[௩௦½] நிற்கக்கூடவில்லை; என்மனம் சுழலுவது போலி ருக்கிறது (௩௦). கேசவ! விபரீதங்களான நிமித்த (சகுன)ங் களைக் காண்கின்றேன். (௩௦½)

न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥
न कांक्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ॥ ३१॥. ॥

[௩௧½] யுத்தத்தில் பந்துக்களைக் கொன்று பின் நன்மை யொன்றையும் காணேன் (௩௧). பகவானே! வெற்றியையும், இராஜ்யத்தையும், சுகங்களையும் நான் விரும்பவில்லை. (௩௧½)

किं नो राज्येन गोविंद किं भोगैर्जीवितेन वा ॥ ३२ ॥
येषामर्थे कांक्षितं नो राज्यं भोगाः सुखानि च ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३ ॥

[கூஉ-கூகூ] கோவிந்த! இராஜ்யத்தினாலாவது, போகங்களினாலாவது, ஜீவித்திருப்பதினாலாவது எங்களுக்கென்ன பிரயோஜனம்? (கூஉ). எவர்கள் (எவ்வுறவினர்) பொருட்டாக எமது இராஜ்யமும், போகங்களும், சுகங்களும் விரும்பப்பட்டனவோ அப்படிப்பட்ட இவர்கள் தங்கள் பிராணனையும் செல்வத்தையும் விட்டு யுத்தத்தில் நிற்கின்றார்கள். (கூகூ)

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः श्यालाः संबन्धिनस्तथा ॥ ३४ ॥
एतान्न हंतुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५ ॥

[௩௪-௩௫] ஆசாரியர்களும், தந்தைமாரும், புத்திரர்களும், அப்படியே பாட்டன்மாரும், அம்மான்மாரும், மாமன்மாரும், பேரன்மாரும், மைத்துனர்மாரும், அப்படியே சம்பந்திகளுமாகிய இவர்களை மதுசூதன! (மதுவைத் தியனைக் கொன்

றவரே!) (யான்) கொல்லப்படுபவனாயினும் மூவுலகராஜ்யத்
தின்பொருட்டும் கொல்ல இச்சியேனெனின், இப்பூமியைப்
பெறுதற் பொருட்டுச் சொல்லுவதென்னே? (௩௪-௩௫)

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६ ॥

[௩௬] ஜநார்த்தன! (ஜனனென்பவனைக் கொன்றவரே!)
தார்த்தராஷ்டிரர்களைக் கொன்று எங்களுக்கு என்ன சந்தோ
ஷமுண்டாகும்? ஆததாயி (நெருப்புவைத்தல் முதலிய கொ

டிய பாபஞ்செய்வோர்)களாகிய இவர்களைக் கொல்லுவதனால் பாபமே எம்மை ஆசிரயிக்கும். (௩௬)

तस्मान्नार्हा वयं हंतुं धार्तराष्ट्रान्स्वबांधवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७ ॥

[௩௭] ஆதலால் நாங்கள் பந்துக்களாகிய தார்த்தராஷ்டிரர்களைக் கொல்லுதற்குரியோமல்லோம். மாதவ! பந்துக்களைக் கொன்று எப்படிச் சுகிகளாவோம். (௩௭)

यद्यप्येते न पश्यंति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८ ॥

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९ ॥

[௩௮-௩௯] உலோபத்தினால் அபகரிக்கப்பட்ட சித்தமுள்ள இவர்கள் குலக்ஷயத்தினலாம் தோஷத்தையும், மித்திரத்துரோகத்தினலாம்பாதகத்தையும்பார்க்கமாட்டார்களெனினும், ஜநார்த்தன ! குலக்ஷயத்தினலாம் தோஷத்தையறியும் எம்மால் இப்பாபத்தினின்றும் விலகுதற்குத் தெரியத்தகாதது எப்படி ? (௩௮-௩௯)

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४० ॥

[சO] குலம் க்ஷயமானால் பழைமையான (தொன்றுதொட்டுவரும்) குலதர்மங்கள் கெடுகின்றன. தர்மம் கெடவே குலங்களெல்லாவற்றையும் அதர்மமானது வந்து மூடுகிறது. ()

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यंति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसंकरः ॥ ४१ ॥

[சக] கிருஷ்ணா! அதர்மம் அமிழ்த்தலால் குலஸ்திரீகள்

ஷிகத் தூஷிக்கப்படுகின்றார்கள். வார்ஷ்ணேய! (விருஷ்ணிகுலத்தில் வந்தவரே!) ஸ்திரீகள் தூஷிக்கப்பட்டபோது(தோஷமுடையவராகவே) வர்ணசங்கரம் (ஜாதிக்கலப்பு) உண்டாகின்றது. (சக)

संकरो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतंति पितरो ह्येषां लुप्तपिंडोदकक्रियाः ॥ ४२ ॥

[சஉ] வர்ணசங்கரமானது குலத்திற்கும் குலத்தினைக் கெடுத்தவர்களுக்கும் நரகத்தின்பொருட்டே யாகின்றது. அவ்

றியும் இவர்களது பிதிர்க்கள் பிண்டோதகக்கிரியைகள்குறை ந்தவர்களாய் (நரகத்தில்) விழுகின்றார்கள். (௪௨)

दोषैरेतैः कुलघ्नानां वर्णसंकरकारकैः ।
उत्साद्यंते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः ॥ ४३ ॥

[௪௩] குலத்தைக் கெடுத்தவர்களது வர்ணசங்கரத்தையு ண்டுபண்ணும் இத்தோஷங்களால் சாசுவதமான சாதி (வர்ண) தர்மங்களும் குலதர்மங்களும் கெடுக்கப்படுகின்றன. ()

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरके नियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४ ॥

[சச] ஜநார்த்தன ! கெடுக்கப்பட்ட குலதர்மமுடைய மனிதர்களுக்கு நரகத்தில் நியதமான (நீங்காத) வாசமுண்டாகின்றதென்று கேட்கின்றோம். (சச)

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हंतुं स्वजनमुद्यताः ॥ ४५ ॥

[சரு] எக்காரணத்தால் நாங்கள் இராஜ்ய சுகங்களின் இச்சையால் பந்துஜனங்களைக் கொல்ல எத்தனித்தோமோ, அக்காரணத்தால் அதிக பாபத்தைச்செய்ய முயன்றவர்களானோம். ஐயோ ! கஷ்டம் ! (சரு)

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणयः ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥ ४६ ॥

[சகூ] ஆயுதபாணிகளான துரியோதனாதியர் ஆயுதமில்லாமலும் பிரதிக்கிரியை செய்யாமலுமிருக்கும் என்னை யுத்தத்தில் கொல்லுவாராயின் அது (கொலை) எனக்கு மிக்க க்ஷேமத்தைத் தருவதாம். (சகூ)

॥ संजय उवाच ॥

एवमुक्त्वाऽर्जुनः संख्ये रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानसः ॥ ४७ ॥

[௪௭] சஞ்சயன் சொல்லுற்றான் :—சோகத்தாற் கலங்கியமனத்தினனாகிய அர்ச்சுனன் யுத்தகளத்தில் இவ்வாறுகூறி பாணத்தோடுகூடிய வில்லைவிட்டுத் தேர்த்தட்டில் உட்கார்ந்தான். (௪௭)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुन संवादे
प्रथमोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீ பகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
முதல் அத்தியாயம் முடிந்தது.



|| द्वितीयोऽध्यायः ||

இரண்டாம் அத்தியாயம்.

|| सांख्ययोगः ||.

சாங்கியயோகம்.

—·····+·····—

|| संजय उवाच ||

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदंतमिदं वाक्यमुवाच मधुसूदनः || १ ||

[ச அ] சஞ்சயன் சொல்லலாயினன் :—அவ்வாறு இரக்கத்தினால் வியாபிக்கப்பட்டவனும் கண்ணீர் நிரம்பிய வியாகுல

முள்ள பார்வையுடையவனுமாய்த் தூக்கிக்கின்ற அவ்வர்ச்சுனனை நோக்கி மதுசூதனர் இவ்வாக்கியத்தைச் சொல்லாயினார் :— (௧)

|| श्रीभगवानुवाच ||

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥ २ ॥

[௪௧] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார் :—அர்ச்சுனா! யுத்த சங்கடத்தில் ஆரியரல்லாதவராற் சேவிக்கப்படுவதும், சுவர்க்க விரோதியும், கீர்த்தியின்மையைத் தருவதுமான இந்த அழுக்கு (மோகம்) உன்னை எப்படியடைந்தது? (௨)

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परंतप ॥ ३ ॥

[பொ] பார்த்த! அலித்தன்மையை யடையாதே. உன்னிடத்து இது பொருந்தாது. பரந்தப! (சத்துருக்களைத் தபிக்கச்செய்பவனே!) துச்சமான மனதின் துர்ப்பலத்தன்மையினை விட்டு எழுந்திரு. (௩)

॥ अर्जुन उवाच ॥

कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४ ॥

[௫க] அர்ச்சுனன் சொல்லலாயினான் :—சத்துருசங்கார! மதுசூதனா! (புஷ்பங்களால்) பூஜிக்கத்தக்க பீஷ்மாசாரியரையும் துரோணாசாரியரையும் யுத்தத்தில் யான் எப்படி பாணங்களால் அடிப்பேன். (௪)

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुंजीव भोगान्रुधिरप्रदिग्धान् ॥ ५ ॥

[௫உ] பிரசித்தமகாநுபாவர்களான குருமாரைக் கொல்லாமல் பிச்சையெடுத்துண்பது மேன்மையானதாம். பொருள் விருப்புடைய குருமாரைக்கொன்று இகலோகத்திலேயே இரக்தத்தினாற் பூசப்பட்ட போகங்களைப் புசிப்பேன். (௫)

न चैतद्विद्मः कतरन्नो गरीयो यद्वा जयेम यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषामस्तेऽवस्थिताः प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६ ।

[டீகா] எமக்கு (போர்செய்தல் பிச்சையெடுத்தலிரண்டனு ள்)யாது கிலாக்கியமானதெனஅறியோம். அல்லது (யாம்) ஜயிப்போமோ? துரியோதனாதியர் எம்மை ஜயிப்பார்களோ? (அறியேம்) எவர்களைக்கொன்று(பின்)ஜீவித்திருக்க விரும்ப மாட்டோமோ அந்தத் தார்த்தராஷ்டிரர்களே எதிரில் நிற்கிறார்கள். (௬)

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

[௫௪] கிருபணத்தன்மையாகிய தோஷத்தினுல் திரஸ்கரிக்கப்பட்ட சுபாவமுடைய யான் தர்மஞானமில்லாத(தர்மத்தில் சம்சயமுள்ள)சித்தமுடையவனுய்த் தம்மைக் கேட்கின்றேன். மேலானதாக நிச்சயிக்கப்பட்டது எதுவோ அதனை எனக்குச் சொல்லியருளல்வேண்டும். தமக்கு யான் சிஷ்யன். தம்மைச் சரணடைந்த எனக்கு உபதேசித்தருளல்வேண்டும்.

न हि प्रपश्यामि ममापनुद्याद् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८ ॥

[௫௫] எது என்னுடைய இந்திரியங்களின் மிக வாட்டுவனவாகிய சோகத்தினைக் கெடுக்குமோ அதனை, யான் பூமியில் நிஷ்கண்

டகமும்(எதிரியில்லாததும்)வளமுள்ளதுமான இராஜ்ஜியத்தையும் தேவர்களின் அதிபத்தியமான இந்திரத்தன்மையையும் அடைந்தும் காணேனன்றோ: (அ)

॥ संजय उवाच ॥

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परंतप ।
न योत्स्य इति गोविंदमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९ ॥

[ருசு] சஞ்சயன் சொல்லலாயினன்:—பரந்தபனான(சத்துருசங்காரனான)குடாகேசன்(நித்திரையைஜயித்தவனான அர்ச்சுனன்)இருஷீகேசரை(இந்திரியங்கட்கதிபரானபகவானை)ப்

பார்த்து இவ்வாறு கூறி (மறுபடியும்) கோவிந்தனைப் பார்த்து யுத்தஞ்செய்யேனென்று கூறி சும்மாவிருந்தான். (௯)

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदंतमिदं वचः ॥ १० ॥

[ப-ள] திருதராஷ்டிரரே! இரண்டு சேனைகளினிடையில் துக்கப்படுகின்ற அவ்வர்ச்சுனனை நோக்கி இருஷிகேசர் பரிகாசஞ்செய்பவர்போல இவ்வாக்கியத்தினைக் கூறினார். (௧௦)

॥ श्रीभगवानुवाच ॥

अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।
गतासूनगतासूंश्च नानुशोचंति पंडिताः ॥ ११ ॥

[ருஅ] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார் :—நீ சோகப்படத் தகாதவர்களைக் குறித்துச் சோகிக்கிறாய். பண்டிதர்களது மொழிகளைக் கூறுகின்றாய். (நீ பண்டிதனல்லை.) பண்டிதர்கள் பிராணனீங்கியவர்களைக் குறித்தும் பிராணனீங்காதவர்களைக்குறித்தும் துக்கமடையார். (கக)

न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः ।
न चैव न भविष्यामः सर्वे वयमतः परम् ॥ १२ ॥

[ருக] யான் எக்காலத்தேனும் இருந்ததிலனென்பதில்லை. நீயுமிருந்திலையென்பதில்லை. இந்த ராஜாக்களுமிருந்ததிலரெ

ன்பதில்லை. இதன்மேல் நாமெல்லோரும் இருக்கமாட்டோ மென்பதுமில்லை. (கஉ)

देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।
तथा देहांतरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥ १३ ॥

[சுo] இத்தேகத்தில் பாலியமும், யௌவனமும், மூப்பும் எப்படியோ அப்படியே தேகிக்கு வேறு தேகத்தையடைதலாம். அதில்(தேகநாசோற்பத்தி முதலியவற்றில்) தீரன்மோகத்தை யடையான். (கங)

मात्रास्पर्शास्तु कौंतेय शीतोष्णसुखदुःखदाः ।
आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ १४ ॥

[கச] கௌந்தேய(குந்திபுத்திர)! பாரத(பரதவம்சத்தோய்)! மாத்திரை(இந்திரியங்)களுக்கு விஷயங்களோடுண்டாம் ஸ்பரிச(சம்பந்த)ங்கள் சீதோஷ்ணங்கள்போல சுகதுக்கங்களைத் தருவனவும், போக்குவரவுள்ளனவும் அநித்தியமுமாம். ஆதலால் அவற்றைச் சகிப்பாயாக. (கச)

यं हि न व्यथयंत्येते पुरुषं पुरुषर्षभ ।
समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥ १५ ॥

[கரு] புருஷசிரேஷ்டனே! சமமான சுகதுக்கங்களையுடைய எந்தத்தீரபுருஷனை இவை(இந்திரியவிஷயசம்பந்தங்கள்)எ

தனால் துன்பப்படுத்தாவோ அதனால் அவன் மோக்ஷத்தின் பொருட்டு தகுதியுள்ளவனாகின்றான். (கரு)

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥ १६ ॥

[சா.] அசத்துக்கு(அநித்தியமாகிய தேகாதிகளுக்கு)பாவம்(இருப்பு)இல்லை. சத்திற்கு(நித்தியமாகிய ஆத்மாவிற்கு)அபாவ(நாச)மில்லை. இவ்விரண்டின் நிர்ணயம் தத்துவமுணர்ந்தோரால் காணப்பட்டுளது. (கசா)

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७ ॥

[௧௬] எது(எச்சத்தி)னால் இவையாவும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ அதனை அவிநாசியென்றறி. அவ்வியயமான (குறைவுநிறைவில்லாத) இவ்வாத்மாவை எவனும்நாசஞ்செய்தற்குரியவனாகான். (௧௭)

अंतवंत इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८ ॥

[௧௮] நித்தியமும் நாசமில்லாததும் பிரமாணங்கட்கெட்டாததுமான சரீரி(ஆத்மாவு)க்கு இச்சரீரங்கள் நாசமுடையவாக(அறிஞர்களால்)சொல்லப்பட்டுள. ஆதலால் பாரத! யுத்தஞ்செய். (௧௮)

य एनं वेत्ति हंतारं यश्चैनं मन्यते हतम् ।
उभौ तौ न विजानीतो नायं हंति न हन्यते ॥ १९ ॥

[கூகூ] எவன் இதனை (ஆத்மாவை)க் கொல்லுகிறதாய் அறிகின்றானோ, எவன் இதனை இறந்ததாக மதிக்கின்றானோ, அவ்விருவரும் விசேஷமாய் அறிந்தவராகார். இவ்வாத்மா கொல்லாது, கொல்லப்படாது. (ககூ)

न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः ।
अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे ॥ २० ॥

[கூஎ] இவ்வாத்மா பிறப்பில்லாதது, நித்தியம், சாசுவதம் (என்றுமிருப்பது), புராணம் (பழமையானது). இவ்வாத்மா

ஒருபோதும் பிறவாது. இறவாது. இவ்வாத்மா(முன்)இல்லா திருந்து மறுபடியும் ஆகத்தக்கவதன்று. ஆதலால் சரீரம் கொல்லப்படுங்காலத்துக் கொல்லப்படுகிறதில்லை. (உ0)

वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।
कथं स पुरुषः पार्थ कं घातयति हंति कम् ॥ २१ ॥

[சூ-அ] அர்ச்சுனா! எவன் இவ்வாத்மாவை அவிநாசியும்,நித்தியமும், பிறப்பில்லாததும், அவ்வியயமு(குறைவுநிறைவில்லாதது)மாக அறிகின்றானோ, அப்புருஷன் எவனை எப்படிக் கொல்லுவிக்கிறான், எவனை எப்படிக் கொல்லுகிறான்? (உக)

वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति नरोऽपराणि ।
तथा शरीराणि विहाय जीर्णान्यन्यानि संयाति नवानि देही ॥ २२ ॥

[௩௧] நரன் எப்படிக்கிழிந்த வஸ்திரங்களைக் களைந்துவே று புதியவஸ்திரங்களைத் தரிக்கின்றானோ, அப்படித் தேகியா னவன் ஜீர்ணமான தேகங்களை விட்டு வேறு புதியசரீரங்களைக் கொள்ளுகின்றான். (௨௨)

नैनं छिंदंति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयंत्यापो न शोषयति मारुतः ॥ २३ ॥

[எO] இவ்வாத்மாவை சஸ்திரங்கள் சேதிக்கிறதில்லை. நெருப்பு எரிக்கிறதில்லை. நீர் நனைக்கிறதில்லை. வாயு உலர்த்துகிறதில்லை. (உங)

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥ २४ ॥

[எக] இவ்வாத்மா சேதிக்கத்தகாதது, இது தகிக்கப்படாதது, நனைக்கப்படாதது, உலர்த்தப்படாதது. இது நித்தியம்; எங்குமுள்ளது. ஸ்தாணு (ஸ்திரசுபாவமுடையது), அசலம் (கிரியையில்லாதது), பழமையானது (அநாதி). (உச)

अव्यक्तोऽयमचिंत्योऽयमविकार्योऽयमुच्यते ।
तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५ ॥

[எஉ] இஃது அவ்வியக்தம்(வெளிப்படாதது). இதுசிந்திக்கமுடியாதது. இது விகாரப்படாதது என்று சொல்லப்படுகின்றது. ஆதலால் இவ்வாறு இதனை அறிந்தால் சோகித்தற்குரியவனல்லாய். (உரு)

अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।
तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥ २६ ॥

[எகூ] பெரும்புயத்தோய்! மற்றும், நீ இதனை(ஆத்மாவை) நித்தியமும் பிறப்பதும், நித்தியமும் இறப்பதுமாக(உடலாக)

மதிக்கின்றாயா? அப்படியானாலும் இவ்வாறு சோகித்தற்கு ரியவனாகாய். (உகூ)

जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।
तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥ २७ ॥

[எசு] எதனால் பிறந்ததற்கு மரணம் நிச்சயமோ, இறந்தத ற்குப் பிறப்பு நிச்சயமோ, அதனால் விலக்கக்கூடாத காரியத் தில் நீ சோகிக்கத்தக்கவனல்லை. (உஎ)

अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८ ॥

[எரு] அர்ச்சுனா! சரீரங்கள் அவ்வியக்தத்தை(வெளிப்படாமையை) ஆதியாகவுடையன. வெளிப்படுதலை மத்தியாகவுடையன. அவ்வியக்தத்தினையே மரணமாகவுடையன. அவ்விஷயத்தில் புலப்பம் என்ன? (உஅ)

आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥२९॥

[எசு] ஒருவன் இதனை(ஆத்மாவை) ஆச்சரியம்போல் பார்க்கிறான். அவ்வாறே மற்றொருவன் இதனை ஆச்சரியம் போலவே சொல்லுகிறான். மற்றொருவன் இதனை ஆச்சரியம்போல்

கேட்கின்றான். ஒருவன் (யாதானுமோர் பிரதிபந்தமுடைய வன்) இதனைக்கேட்டும் (கண்டும், சொல்லியும்) அறியான். ()

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३० ॥

[எஎ] பாரத! எல்லோருடைய சரீரங்களிலும் (உள்ள) இந்தத்தேகி எப்போதும் கொல்லப்படாதவன். ஆதலால் நீ எல்லா ஜீவர்களையும் குறித்துச் சோகிக்கத்தக்கவனாகாய். (௩௦)

स्वधर्ममपि चावेक्ष्य न विकंपितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१ ॥

[எஅ] மற்றும் சுவ(க்ஷத்திரிய)தர்மத்தை நோக்கியும் பி ன்வாங்குதற்குரியவனாகாய். எதனாலெனின், க்ஷத்திரியனுக் குத் தர்மமுள்ள யுத்தத்தைவிடசிரேயசு(மேலானசாதனம்) வேறில்லை. (ருக)

यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।
सुखिनः क्षत्रियाः पार्थ लभंते युद्धमीदृशम् ॥ ३२ ॥

[எக] பார்த்த! திறக்கப்பட்ட சுவர்க்கவாயிலும் தற்செ யலாகவே கிடைத்ததுமான இத்தன்மைய யுத்தத்தை எந்த க்ஷத்திரியர் அடைகின்றார்களோ அவர்கள்தான் சுகமுடை யோர். (ருஉ)

अथ चेत्त्वमिमं धर्म्यं संग्रामं न करिष्यसि ।
ततः स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३ ॥

[அ0] இனி நீ சுவதர்மமான இந்தயுத்தத்தைச் செய்யாயாயின், அதனால் சுவதர்மத்தினையும் கீர்த்தியையும் இழந்து பாபத்தையடைவாய். (௩௩)

अकीर्तिं चापि भूतानि कथयिष्यंति तेऽव्ययाम् ।
संभावितस्य चाकीर्तिर्मरणादतिरिच्यते ॥ ३४ ॥

[அ௦] அன்றியும் பிராணிகள் சாசுவதமான உனது அபகீர்த்தியையும் சொல்லுவார்கள். மதிப்புள்ளவனுக்கு அபகீர்த்தியானது மரணத்தினும் அதிகம்(துக்கந்தருவது)ஆம். ()

भयाद्रणादुपरतं मंस्यंते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५ ॥

[அ-உ] மகாரதிகர்களாகிய அவர்கள் உன்னை பயத்தினால் யுத்தத்தினின்றும் நீங்கியவனாக மதிப்பார்கள். நீ இவர்களுக்கு வெகு மதிப்புடையவனாயிருந்து இப்போது சிறுமையையடைவாய். (௩௫)

अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।
निंदंतस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६ ॥

[அ-௩] உன்பகைவர் உன்னுடைய சாமர்த்தியத்தை நிந்தி

ப்பவர்களாய் அநேக சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லுவார்கள். அதைவிட அதிக துக்கமுள்ளது யாது? (௩௬)

हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।
तस्मादुत्तिष्ठ कौंतेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७ ॥

[அ-ரை] குந்திபுத்திரா! கொல்லப்பட்டாலும் சுவர்க்கத்தை யடைவாய் ஜயித்தாலும் பூமியைப் போகிப்பாய். ஆதலால் உறுதிசெய்துகொண்டவனாய் யுத்தத்திற்கு எழுந்திரு. (௩௭)

सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।
ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८ ॥

[அரு] சுகதுக்கங்களையும், லாபாலாபங்களையும் ஜயாபஜயங்களையும் சமமாக்கி, அதன் பின் யுத்தத்தின்பொருட்டு முயல்வாயாக. இவ்வாறு செய்வதனால் பாபத்தை அடையாய். ()

एषा तेऽभिहिता सांख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।
बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबंधं प्रहास्यसि ॥ ३९ ॥

[அகூ] பார்த்த! உனக்கு இந்தப்புத்தி (ஞானநிஷ்டை) சாங்கிய(ஆத்மதத்துவ)த்தில் சொல்லப்பட்டது. இப்பொழுதோ எந்தப்புத்தி (கர்மநிஷ்டை)யோடுகூடியவனாய்க் கர்மபந்தத்தை அத்தியந்தம் நீக்கிக்கொள்வாயோ அவ்விதமான (நிஷ்கர்மமாகிய) யோகத்தில் சொல்லுகிறேன்; கேள். (௩௯)

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।
स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४० ॥

[அ-ள] இங்கு (இக்கர்மயோகத்தில்) தொடங்கியதற்கு நாசமில்லை; (ஏற்றத்தாழ்வால்) பிரத்தியவாய (பாப)மும் இல்லை. இந்தத் தர்மத்தின் சொற்பமும் அதிக பயத்தினின்றும் இரக்ஷிக்கின்றது. (௪௦)

व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनंदन ।
बहुशाखा ह्यनंताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१ ॥

[அ-அ] குருநந்தன (குருகுலத்தையானந்திப்பவனே)! இங்கு நிச்சயவடிவபுத்தி ஒன்றே (பிறழ்ச்சியில்லாததாம்). நிச்ச

யமில்லாதவர்களது புத்திகள் அநேகம் கிளைகளுள்ளனவுமா
ம். பிரஸித்தமாய் அநந்தமு(பிறழ்ச்சியுள்ளனவு)மாம். (சுக)

यामिमां पुष्पितां वाचं प्रवदंत्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२ ॥
कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेष बहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३ ॥

[அ௪௨-௪௩] பார்த்த! வேதத்தின் அர்த்தவாதத்தில் பற்று
டையவர்களும்(கர்மபலத்தைவிட)வேறொன்றில்லை என்று சொ
ல்லுகிறவர்களும் பற்றுள்ள மனமுடையவர்களும் சுவர்கத்

தினையே மேலாகக் கருதுமிறவர்களுமாகிய அபண்டிதர்கள் (மீமாம்ஸகர் முதலியோர்) எந்த இப்புஷ்பித்தமும் ஜன்ம கர்மபயன்களையடைவிப்பதும் போகைசுவரியங்களினடைவைக் குறித்த கிரியாவிசேஷங்களை விஸ்தாரமாகவுடையதுமான வாக்கியங்களைக் கூறுகின்றனரோ, (சஉ-சங)

भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधीयते ॥ ४४ ॥

[கக] போகைசுவரியப்பற்றுடையவர்களும் (முற்கூறிய) அவ்வாக்கியங்களால் அபகரிக்கப்பட்ட சித்தமுடையவர்களு

மாகிய அவர்களுக்குச் சமாதியில் (உள்ளத்தில்) திடநிச்சயவ
டிவபுத்தி விதிக்கப்படவில்லை. (௪௪)

त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५ ॥

[௯௨] அர்ச்சுனா! (கர்மகாண்டவடிவ) வேதங்கள் முக்குணாத்த (சம்சாரத்)தினை விளக்குவனவாம். நீ சீதோஷ்ணாதி இருமையில்லாதவனும் நித்தியசத்துவத்(சலியாத சத்வகுண காரியத்)திருப்பவனும் யோக(பெறுதலையிட்டலும்)க்ஷேம (பெற்றதைக்காத்தலு)மில்லாதவனும் ஆத்மா (அந்தர்முகம்) உடையவனும் முக்குணவசமின்றியவனுமாவாய். (௪௫)

यावानर्थ उदपाने सर्वतः संप्लुतोदके ।
तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः॥ ४६ ॥
कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूर्मा ते संगोऽस्त्वकर्मणि ॥ ४७ ॥

[௪௬-௪௭] (கிணறு முதலிய பல) ஜலாசயத்தில் எவ்வளவு பிரயோஜனமுண்டாகின்றதோ அவ்வளவு பிரயோஜனம் முழுவதும் நிறைந்துள்ள ஏரியிலுமாகின்றது. அதுபோல சகல வேதங்களிலும் எவ்வளவு பிரயோஜனமுண்டாகின்றதோ அவ்வளவு பிரயோஜனம் விசேஷமாயறியும் பிராஹ்மணனு(ஞா

ணி)க்குண்டு. (௪௬) உனக்கு (நித்தியநைமித்திக) கர்மங்களில் மாத்திரம் அதிகாரம்(இருக்குக). பலத்தில் அதிகாரம் ஒரு போதுமிருக்கலாகாது. நீ கர்மபலகாரணனாகவேண்டாம். உனக்கு அகர்மத்தில்(கர்மம் செய்யாமையில்) ஆசைவேண்டாம். (௪௭)

योगस्थः कुरु कर्माणि संगं त्यक्त्वा धनंजय ।
सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८ ॥

[௪௮] சித்தி அசித்திகளில் சமத்துவம் யோகமென்று சொல்லப்படும். யோகத்திலிருப்பவனாய் தனஞ்சய! (நீ)சித்தி

யஸித்திகளில்(ஜயாபஜயங்களில்) சமமுடையவனாய் ஆசையை விட்டு (யுத்தாதி) கருமங்களைச்செய். (௪௮)

दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनंजय ।
बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९ ॥

[கூகு] தனஞ்சய! (நிஷ்காமகர்மமாகிய) புத்தியோகத்தை விட (காமிய)கர்மம் மிகத் தாழ்ந்ததாம். அதனால் ஞானத்தில் சரணத்தை(புகலை)விரும்புக. பயனுக்குக்காரணமானவர்(பயனையுண்டுபண்ணுவோர்) கிருபண(தீன)ராவர். (௪௯)

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥ ५० ॥

[கூஎ] இங்கு ஞானநிஷ்டையுடையவன் புண்ணியபாபங்களிரண்டையும் விடுகின்றான். ஆதலால் (சமத்துவபுத்தியாகிய) யோகத்தின்பொருட்டு முயல்வாயாக. (சமத்துவபுத்தியாகிய) யோகம் கர்மங்களில் தேர்ந்த தன்மையாம். (௫௦)

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबंधविनिर्मुक्ताः पदं गच्छंत्यनामयम् ॥ ५१ ॥

[கூஅ] (சமத்துவ) புத்தியோடுகூடியவர்களாய்க் கர்மத்தினாலாம் பயனைவிட்டு அறிஞர் பிறப்பென்னும் பந்தத்தினின்றும் விசேஷமாய் விடுபட்டவர்களாய் நிச்சயமாக நோயின்றிய பதத்தை யடைகின்றார்கள். (௫௧)

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गंतासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ ५२ ॥

[கூகூ] எப்போது உன் புத்தி மோகமாகிய மலத்தைக்கடக்குமோ, அப்போது கேட்கத்தக்கனவும் கேட்டனவுமாகிய அர்த்தங்களின் வைராக்யத்தை அடைவாய். (டுஉ)

श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।
समाधावचला बुद்धिस्तदा योगमवाप्स्यसि ॥ ५३ ॥

[கOO] நாநாசாஸ்திரசிரவணத்தால் விக்ஷேபமடைந்த உன்புத்தி நிச்சலமா(விக்ஷேபமின்றியதா)ய்ச் சமாதியில் (பிர

த்தியகமின்னபரமாத்மாவில்)ஸ்திரமாய் எப்போதுநிற்குமோ அப்போது (ஞான) யோகத்தையடைவாய். (௫௩)

॥ अर्जुन उवाच ॥

स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।

स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥ ५४ ॥

[௫௦௧] அர்ச்சுனன் சொல்லலாயினன்:—கேசவரே! சமாதியிலிருக்கும் நிலைபெற்ற பிரஞ்ஞையுடையவனது வார்த்தை (லக்ஷணம்) யாது? (சமாதியினின்று விழித்த) நிலைத்தபுத்தியுடையவன் என்ன பேசுவான்? எப்படி இருப்பான்? எப்படி நடப்பான்? (௫௪)

॥ श्रीभगवानुवाच ॥

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥ ५५ ॥

[௧௦௨] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:—பார்த்த! எப்போது ஆத்மாவி(பரமானந்தவடிவதன்)னிடத்தில்(தன்) ஆத்மாவினாலேயே சந்தோஷமடைந்தவனாய் மனதின்கணுள்ள சகல காமங்களையும் விடுகின்றானோ அப்போது நிலைபெற்ற பிரஞ்ஞையுடையவனெனப்படுகின்றான். (௫௫)

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६ ॥

[க0௫] துக்கங்களில் கலங்காத மனதுடையவனும், சுகங்களில் விசேஷமாக இச்சையொழிந்தவனும், இராகபயக்குரோதங்கள் விசேஷமாயொழிந்தவனுமாகிய முனி நிச்சலபுத்தியுடையவ (ஸ்திதப்பிரஞ்ஞ)னெனப்படுகின்றான். (௫௬)

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनंदति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ५७ ॥

[க0௬] எவன் எல்லாவற்றிலும் (ஸ்திரீபுத்திராதியருக்கு வரும் லாபநஷ்டத்தினைத் தனதாய்க்கொள்ளற்கேதுவான) அபிநிவேசமில்லாதவனாயிருக்கின்றானோ, அந்தந்தச் சுபாசுப

ங்களையடைந்து சந்தோஷியாகானோ, த்வேஷியாகானோ அவனு
டைய புத்தி மிக்க நிலைபெற்றதாம். (௫௭)

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इंद्रियाणींद्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥५८ ॥

[க௦௫] எப்போது இவன் இந்திரியார்த்தங்களினின்றும் இந்திரியங்களை ஆமையானது முற்றும் அவயவங்களைச் சுருக்கிக்கொள்ளுவதுபோலச் சுருக்கிக்கொள்ளுகின்றானோ, அப்போது அவனது பிரஞ்ஞை மிக நிலைபெற்றதாம். (௫௮)

विषया विनिवर्तंते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥ ५९ ॥

[௧௦௯] (அந்நவடிவ அல்லது இந்திரியங்களால் விஷயங்களைக்கிரகியாமைவடிவ) ஆகாரமின்றிய தேகிக்கு விஷயங்கள் (உருசிவடிவ அல்லது ஸூக்ஷ்மமாகவடிவ) இரஸமில்லாதனவாக நீங்குகின்றன. பரமாத்மாவைப் பார்த்து இந்நிலைத்த புத்தியுடையவனுக்கு (முற்கூறிய) இரஸமும் ஒழிகின்றது. (௫௯)

यततो ह्यपि कौंतेय पुरुषस्य विपश्चितः ।
इंद्रियाणि प्रमाथीनि हरंति प्रसभं मनः ॥ ६० ॥

[௧௦௭] குந்திபுத்திர! (அடக்க)எத்தனஞ்செய்கின்ற விவேகியான புருஷனது மனதையும் மிகக்கடைவனவாகிய இந்திரியங்கள் எதனால் பலாத்காரமாய் இழுக்கின்றனவோ, அதனால்,

तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येंद्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥

[௨0அ] என்னிடத்துப் பற்றுள்ளவன் அவ்வெல்லா இந்திரியங்களையும் செவ்வையாய் அடக்கி யோகமுடையவனுயிருக்கக்கடவன். எவனுடைய இந்திரியங்கள் வசத்திலேயேயிருக்கின்றனவோ அவனுடைய பிரஞ்ஞை நிலைபெற்றதாம். (௬௧)

ध्यायतो विषयान्पुंसः संगस्तेषूपजायते ।
संगात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥ ६२ ॥

[௨0௬] விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டிருக்கும் புருஷ

னுக்கு அவற்றில் சங்கம்(பற்று)உண்டாகின்றது. சங்கத்தால் காமமுண்டாகின்றது. காமத்தால் குரோதமுண்டாகின்றது.

क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३ ॥

[௧௧௦] குரோதத்தினால் மோகம்(விவேகமின்மை)உண்டாகின்றது. மோகத்தினால்(கேட்ட அர்த்தத்தின்) நினைவு தடுமாறுதலுண்டாகின்றது. நினைவு கெடுதலால் புத்திநாசமுண்டாகின்றது. புத்திநாசத்தால் மிகக்கெடுகின்றான். (௬௩)

रागद्वेषवियुक्तैस्तु विषयानिंद्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४ ॥

[கககூ] இராகத்துவேஷங்களினின்றும் விடுபட்ட சித்தசுவாதீனமுள்ள இந்திரியங்களால் விஷயங்களை அநுபவித்துக் கொண்டிருப்பவனாயினும் சுவாதீன சித்தமுடையவன், பிரசாதத்தை (மனதின் நிர்மலத்தன்மையை) அடைகின்றான்.()

प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ।
प्रसन्नचेतसो ह्याशु बुद्धिः पर्यवतिष्ठते ॥ ६५ ॥

[ககஉ] இவனுக்கு(யோகிக்கு)ப் பிரசாதமு(மனத்தெளிவு)ண்டானபோது, சர்வதுக்கங்களின் நாசமுண்டாகின்றது. ஏதனாலெனின், தெளிந்தசித்தமுடையவனுக்கு விரைவில் (நிச்சயவடிவ)புத்தி நிலைபெறுகின்றது. (சுரு)

नास्तिबुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।
न चाभावयतः शांतिरशांतस्य कुतः सुखम् ॥ ६६ ॥

[கக௬] யோகமி(மனவொருமைப்பி)ல்லாதவனுக்கு ஆத்ம புத்தி இல்லை. யோகமில்லாதவனுக்குப் பாவனையும் இல்லை. (பிரஹ்ம) பாவனை செய்யாதவனுக்குச் சாந்தி(சித்தவொடுக்கம்) இல்லை. சாந்தி இல்லாதவனுக்குச் சுகமேது? (௬௬)

इंद्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवांभसि ॥ ६७ ॥

[ககஎ] ஏனெனின், விஷயங்களில் சரிக்கின்ற இந்திரியங்களை எந்தமனதானது அநுசரித்து நடத்தப்படுகின்றதோ அ

அந்த மனது இவனது பிரஞ்ஞையை நீரில் ஓடத்தை வாயு வானது இழுப்பதுபோல இழுக்கின்றது. (கூஎ)

तस्माद्यस्य महावाहो निगृहीतानि सर्वशः ।
इंद्रियाणींद्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६८ ॥

[ககரு] மகாபாகுவே (பெருந்தோள)! ஆகலால் எவனது இந்திரியங்கள் எல்லா வகையினாலும் இந்திரியார்த்தங்களினின்றும் தடுக்கப்பட்டனவாகின்றனவோ அவனது பிரஞ்ஞை மிக நிலைத்ததாம். (கூஅ)

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥ ६९ ॥

[கககூ] எந்தப் புத்தியானது (புத்தி இல்லாத) எல்லா ஜீவர்களுக்கும் இரவாயின்றதோ அவ்வாத்மவிஷய புத்தியில் சம்யமமுடையவன் (ஞானி) விழித்திருப்பான். எதில் சகல ஜீவர்களும் விழித்திருக்கின்றார்களோ அந்த (சத்தாதிவிஷய) புத்தி ஆத்மாவையறியவனுகிய முனிக்கு இரவாம். (சூகூ)

आपूर्यमाणमचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशंति यद्वत् ।
तद्वत्कामा य प्रविशंति सर्वे स शांतिमाप्नोति न कामकामी ॥ ७० ॥

[ககஎ] எப்படி ஜலங்கள், நாற்புறமும் நிறைந்துள்ளதாய் மரியாதையைக் கடவாமலிருக்கின்ற சமுத்திரத்தில் பிரவேசிக்கின்றனவோ அதுபோலச் சகல காமங்களும் எவனிடத்

னுப் பிரவேசிக்கின்றனவோ அவன் சாந்தியை அடைகின்று
ன்; போகவிருப்புள்ளவன் அடையான். (எ0)

विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।
निर्ममो निरहंकारः स शांतिमधिगच्छति ॥ ७१ ॥

[கக அ] எந்தப் புருஷன் சர்வகாமங்களையும் விட்டு ஆசை
யில்லாதவனாய், எனதென்பதில்லாதவனாய், அகங்காரமில்லா
தவனாய் நடக்கின்றானோ அப்புருஷன் சாந்தியை அடைகின்
றான். (எக)

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामंतकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ७२ ॥

[கககூ] பார்த்த! இது பிரஹ்மவிஷயமான நிஷ்டை. இதனையடைந்து (எவனும்) மோகப்படான். கடைசிக்காலத்தில் இதில் நின்று பிரஹ்மநிர்வாண (மோக்ஷ) த்தை அடைகின்றான். (எஉ)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
द्वितीयोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீ பகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
இரண்டாம அத்தியாயம் முடிந்தது.

——o——

## ॥ तृतीयोऽध्यायः ॥

## மூன்றும் அத்தியாயம்.

## ॥ कर्मयोगः ॥

## கர்மயோகம்.

—·····●·····—

॥ अर्जुन उवाच ॥

ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन ।
तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १ ॥

[கஉ0] அர்ச்சுனன் சொல்லலாயினன் :—ஜனார்த்தனரே ! ஞானம் கர்மத்தைவிட சிரேஷ்டமானதென்று தமக்கபிப்பிராயமிருக்குமாயின் அஃதேன் என்னைக் கோரமான கர்மத்தில் பிரவிருத்திக்கச் செய்கிறீர். (க)

व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।
तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥ २ ॥

[கஉக] கலப்புள்ளதுபோன்ற வாக்கியத்தினுல் தாம் என் புத்தியை மோகிக்கச் செய்கிறீர்போலிருக்கிறது. யான் எதனுல் மோக்ஷமடைவேனே அஃதொன்றினையே நிச்சயித்துக் கூறுவீராக. (உ)

॥ श्रीभगवानुवाच ॥

लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।
ज्ञानयोगेन सांख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३ ॥

[கஉஉ] ஸ்ரீ பகவான் கூறலாயினர்:—பாபமற்றவனே! முன் (முந்திய அத்தியாயத்தில்) இவ்வுலகத்தில் சாங்கியர்களுக்கு ஞானயோகத்தாலும் யோகிகளுக்குக் கர்மயோகத்தாலும் இருவகையான நிஷ்டை(நிலை)என்றல் சொல்லப்பட்டது. (௩)

न कर्मणामनारंभान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४ ॥

[கஉ௩] (மலினசித்தமுடைய) புருஷன் கர்மங்களைச் செய்யாவிடின், கிரியையொழிந்த நிச்சய(ஞான)த்தினை யடைகிறதில்லை. (ஞானமின்றிய) சந்நியாசமாத்திரத்தினால் (கர்மமொழிந்த தன்மையாகிய) சித்தி(முத்தி)யைச் செவ்வையாயடையான். (௪)

न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।
कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥ ५ ॥

[கஉ௪] பிரசித்தமாக எவனும் எப்போதாயினும் கர்மஞ்செய்யாதவனுய் ஒருகணமாயினுமிரான். எதனாலெனின், பிர

கிருதியினுற்றேன்றிய குணங்களால் சுவதந்திரமில்லாத சகலப் பிராணியும் கர்மம் செய்விக்கப்படுகின்றன. (ரு)

कर्मेंद्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इंद्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥

[கஉ௬] எந்த விசேஷ மூடசித்தமுள்ளவன் கர்மேந்திரியங்களை அடக்கி இந்திரிய விஷயங்களை மனதினுல் ஸ்மரித்துக் கொண்டிருக்கின்றுனே அவன் பொய்யொழுக்கமுடையனெனப்படுகின்றுன். (௬)

यस्त्विंद्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।
कर्मेंद्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७ ॥

[கஉகா] அர்ச்சுனா! எவன் இந்திரியங்களை மனதினால் அடக்கிக்கொண்டு கர்மேந்திரியங்களால் கர்மயோகத்தைப் பலாபேக்ஷையின்றியவனாய் ஆரம்பிக்கின்றானோ அவன் மேம்படுகின்றான். (எ)

नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।
शरीरयात्रापि च ते न प्रसिध्येदकर्मणः ॥ ८ ॥

[கஉஎ] (அர்ச்சுனா!) நீ நியதமான (நித்திய) கர்மத்தைச் செய்வாயாக. ஏனெனில், கர்மஞ்செய்யாததைவிடக் கர்மமானது மேலானதாம். அன்றியும் ஒரு கர்மமுமில்லாதவனான உனக்குச் சரீரயாத்திரையும் மிகச் சித்தியாகாது. (அ)

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबंधनः ।
तदर्थं कर्म कौंतेय मुक्तसंगः समाचर ॥ ९ ॥

[கஉஅ] குந்திபுத்திரா! இவ்வுலகம் (பகவதாராதனமாகிய) யஞ்ஞத்தின் பொருட்டதான கர்மத்தைவிட வேறு கர்மத்தில் (பிரவர்த்திக்கின்) கர்மபந்தமுடையதாம். ஆதலால் பலேச்சையை விட்டவனாய் அதன் (யஞ்ஞத்தின்) பொருட்டுக் கர்மத்தினைச் செவ்வையாய் ஆசரிப்பாயாக. (௯)

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥ १० ॥

[கஉ-கூ] பிரஹ்மா முன் (ஸ்ருஷ்டிகாலத்தில்) யாகத்தோடு கூடிய பிரஜைகளைச் ஸ்ருஷ்டித்துச் சொன்னார்:—இந்த யஞ்ஞத்தினால் விருத்தியடையுங்கள். இது உங்களுக்கு விரும்பிய காமத்தைக் கறப்ப(தருவ)தாகுக. (கO)

देवान्भावयतानेन ते देवा भावयंतु वः ।
परस्परं भावयंतः श्रेयः परमवाप्स्यथ ॥ ११ ॥

[கஉ-O] (பிரஜைகளே!) இதனால்(இந்திராதி)தேவர்களை திருப்திசெய்வியுங்கள். அத்தேவர்கள் உங்களை (மழை முதலியவற்றால்) பாவிக்கட்டும் (திருப்திசெய்விக்குக), ஒருவரை

யொருவர் திருப்திசெய்விப்பவர்களாய் மேலான சிரேயஸை (முக்தியினைக் கிரமமாக) அடைவீர்கள். (கக)

इष्टान्भोगान्हि वो देवा दास्यंते यज्ञभाविताः ।
तैर्दत्तानप्रदायैभ्यो यो भुंक्ते स्तेन एव सः ॥ १२ ॥

[கஉ-க] எதனாலெனின், யாகத்தினால் பாவிக்க (திருப்தி செய்ய)ப்பட்ட தேவர்கள் உங்களுக்கு இஷ்டமான போகங்களைக் கொடுக்கின்றார்கள். அவர்களால் கொடுக்கப்பட்டவைகளை இத்தேவர்களுக்குக் கொடுக்காமல் எவன் புசிக்கின்றானோ அவன் (தேவர்கள் சொத்தைக்கவரும்) திருடனே. (கஉ)

यज्ञशिष्टाशिनः संतो मुच्यंते सर्वकिल्बिषैः ।
भुंजते ते त्वघं पापा ये पचंत्यात्मकारणात् ॥ १३ ॥

[௧௩-உ] யாகத்தில் மிஞ்சியதைப்புசிக்கும் சற்புருஷர் (பஞ்சகுருதி) சகல பாபங்களினின்றும் விடுபடுகின்றார்கள். எந்தப்பாபிகள் தம்பொருட்டுப் பாகஞ்செய்கின்றார்களோ அவர்கள்பாபத்தை (பாபவடிவ அந்நத்தை)ப் புசிக்கின்றார்கள்.

अन्नाद्भवंति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥ १४ ॥

[௧௪] அந்நத்தினின்றும் பிராணிகள் உண்டாகின்றார்கள். மழையினால் அந்நத்தின் உற்பத்தியுண்டாகின்றது. யாகத்தினால் மழையுண்டாகின்றது. யாகம் கர்ம(ருத்விக்கு யஜமானர்களது வியாபார)த்தினின்றுண்டானதாகின்றது.()

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥ १५ ॥

[௧௫] கர்மம் வேதத்தினின்றுண்டானதாக அறி. அந்த வேதம் அக்ஷரமாகிய பரமாத்மாவினின்றுண்டானதாக அறி. ஆதலால் வேதம் (எல்லாவற்றையும் விளக்குந்தன்மையால்)

எல்லாவற்றிலுமிருப்பதாய் நித்தியம் (எப்போதும்) யஞ்ஞத்தில் நிலைபெற்றிருக்கின்றது. (கரு)

एतं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।

अघायुरिंद्रियारामो मोघं पार्थ स जीवति ॥ १६ ॥

[கசு) பார்த்த! எவன் இவ்வுலகத்தில் இவ்வாறு பிரவிருத்திக்கப்பட்ட (ஜக)சக்கரத்தை அநுசரித்து நடவானே, அவன் பாபமயமான ஆயுளுடையவனுய் இந்திரியங்களால் விஷயங்களிலிரமிப்பவனுய் வியர்த்தமாக ஜீவிக்கிருன். (கசு)

यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥ १७ ॥

[கா.டீ.கூ] எந்தமானவன் (மானமாகிய ஞானத்தை வகிப்பவன்) ஆத்மாவிலேயே பிரீதியுடையவனும், ஆத்மாவினாலேயே திருப்தியடைந்தவனும், ஆத்மாவினிடத்திலேயே சந்தோஷப்படுகின்றவனுமாகின்றானோ அவனுக்குச் செய்யத்தக்கதில்லை.

(கஎ)

नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥ १८ ॥

[கஎ] அந்தப் பிரஹ்மநிஷ்டனுக்கு இவ்வுலகத்தில் கர்மஞ்செய்ததினால் பயனுமில்லை. கர்மஞ்செய்யாததினால் ஒன்றும் இல்லை. அன்றியும் இவனுக்கு எல்லா ஜீவர்களிடத்தும் ஒன்றனைக்குறித்து ஆசிரயமுமில்லை. (கஅ)

तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।
असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥ १९ ॥

[கஅ] ஆகலால் நீ சங்கமில்லாதவனாய் நித்தியமும் செய்யத்தக்க கர்மத்தை செவ்வையாய்ச் செய். எதனாலெனின், பலாபேக்ஷையில்லாதவனாய்க் கர்மத்தைச்செய்யும் புருஷன் பர(மோக்ஷ)த்தை யடைகின்றான். (க௯)

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ॥ २० ॥

[கங.கூ] ஏனெனின், ஜனகாதிராஜரிஷிகள் கர்மத்தினுலேயே ஸித்தியையடைந்தார்கள். நீயும் உலகம் வழிப்படுதலை (உலகம் தீவழியிற் செல்லாது தடுத்தலை)யே காண்பவனுய்க் கர்மஞ்செய்தற்குரியவனுவாய். (௨௦)

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ २१ ॥

[கச௦] சிரேஷ்டன் (மேலானவன்) எதனை எதனையாசரிக்கின்றானோ, அதனை அதனையே மற்ற ஜனங்களும் ஆசரிக்கின்றார்கள். அவன் எதனைப் பிரமாணமாக்குகின்றானோ அதனை உலகம் அநுசரிக்கின்றது. (உக)

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥ २२ ॥

[கசக] பார்த்த! எனக்கு மூன்றுலோகத்திலும் செய்ய வேண்டியது எதுவுமில்லை. அடையப்படாததாய் அடைய வேண்டியதில்லை. (அப்படியிருந்தும்) கர்மத்திலேயே இருக்கின்றேன் (கர்மத்தினையே செய்கின்றேன்). (உஉ)

यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतंद्रितः ।
मम वर्त्मानुवर्तंते मनुष्याः पार्थ सर्वशः ॥ २३ ॥

[கசஉ] எதனாலெனின், அர்ச்சுன! நான் எப்போதேனும் சோம்பலில்லாதவனாய்க் கர்மத்தில் சேரேனாயின், மனிதர்கள் எல்லாவிதத்தாலும் என்னுடைய வழியை அநுசரிப்பார்கள்.

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
संकरस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥ २४ ॥

[கசரு] யான் கர்மத்தைச் செய்யாவிடின், இந்த ஜனங்கள்

கெட்டுப்போவார்கள். வர்ணக்கலப்பிற்கும் கர்த்தாவாவேன். (அதனால்) இப்பிரஜைகளைக் கெடுப்பவனாவேன். (௨௪)

सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वंति भारत ।
कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसंग्रहम् ॥ २५ ॥

[கஉச] பாரத! அஞ்ஞானிகள் கர்மத்தில் இச்சையுடையவர்களாய் எப்படிச் செய்கின்றார்களோ, அப்படி உலகம் வழிப்படுதலை செய்ய விரும்பியவனாய் ஞானி இச்சையில்லாதவனாய் (கர்மத்தை)ச் செய்யக்கடவன். (௨௫)

न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसंगिनाम् ।
जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६ ॥

[கசரு] வித்வான் யோகமுடையவனாய்க் கர்மப்பற்றுள்ள அவிவேகிகளின் புத்திபேதத்தை யுண்டுபண்ணலாகாது. யோகமுடையவனாய் (தான்) சர்வகர்மங்களையும் செவ்வையாய் ஆசரித்து (அவர்களையும்) ஆசரிக்கச் செய்யவேண்டும். (உசு)

प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।
अहंकारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७ ॥

[௧௪௬] அகங்காரத்தினல் மூடமான மனதுடையவன் பிரகிருதியின் குணங்களால் எல்லாவிதத்தாலும் செய்யப்படுகின்ற கர்மங்களை "யான் செய்கின்றவன்" என்று மதிக்கின்முன். (௨௭)

तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।
गुणा गुणेषु वर्तत इति मत्वा न सज्जते ॥ २८ ॥

[௧௪௭] மகாபாகுவே! குணகர்மங்களின் விபாகங்களின் தத்துவஞானியோ குணங்கள் (இந்திரியங்கள்) குணங்களில் (சப்தாதிவிஷயங்களில்) பிரவிருத்திக்கின்றனவென்று மதித்துச் சங்கமுடையவனாகிறதில்லை. (௨௮)

प्रकृतेर्गुणसंमूढाः सज्जंते गुणकर्मसु ।
तानकृत्स्नविदो मंदान्कृत्स्नविन्न विचालयेत् ॥ २९ ॥

[கசஅ] எவர்கள் பிரகிருதியின் (தேகாதிகாரியவடிவ) குணங்களில் முற்றும் அறிவின்றியவர்களாய்க் குணகர்ம (தேகேந்திரியாதி வியாபார)ங்களில் பற்றுடையவராகின்றனரோ, அத்தன்மைய முற்றுணர்வின்றிய மந்தமதியினரை முற்றுணர்வுடையவன் (ஆத்மஞானி) சலிக்க(கலங்க)ச்செய்யலாகாது.

(உகூ)

मयि सर्वाणि कर्माणि सन्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युद्ध्यस्व विगतज्वरः ॥ ३० ॥

[கசகூ] அத்தியாத்மபுத்தியால் சகல கர்மங்களையும் என்னிடத்துச் செவ்வையாகவைத்து, நிஷ்காமியும் எனதெனுந் தன்மையில்லாதவனுமாய்த் தாபமொழிந்தவனாய்ப் போர்புரிவாயாக. (கூo)

ये मे मतमिदं नित्यमनुतिष्ठंति मानवाः ।
श्रद्धावंतोऽनसूयंतो मुच्यंते तेऽपि कर्मभिः ॥ ३१ ॥

[கருo] எந்த மனிதர்கள் சிரத்தையுடையவர்களாய் அசூயையில்லாதவர்களாய் என்னுடைய (கர்மம் செய்யவேண்டியதாமென்னும்) இவ்வபிப்பிராயத்தை நித்தியமும் அநுசரி

த்து நடக்கின்றார்களோ அவர்களும் கர்மங்களினின்றும் விடு படுகின்றார்கள். (௩க)

ये त्वेतदभ्यसूयंतो नानुतिष्ठंति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतसः ॥ ३२ ॥

[கஙக] மற்றும் எவர்கள் இந்த என்னுடைய அபிப்பிராய த்தை அசூயையுள்ளவர்களாய் அநுசரித்து நடவாரோ, அவி வேகிகளும் எல்லா ஞானங்களிலும் மிக்க மூடமுள்ளவர்களு மான அவர்களை நாசமடைந்தவர்களென்றறி. (௩உ)

सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यांति भूतानि निग्रहः किं करिष्यति ॥ ३३॥

[கருஉ] ஞானமுடையவனும் தன்னுடைய பிரகிருதி(ஜன்மாந்தரவாசனை)க்குச் சமானமாக(ஒப்ப)ப் பிரவர்த்திக்கின்றான். எல்லாப் பிராணிகளும் பிரகிருதியை அடைகின்றார்கள்(சுபாவத்தை யநுசரித்தே செய்கிறார்கள்). அதனால்(தானாவது பிறராவது செய்யும்)நிக்கிரகம்(விலக்கு) என்ன செய்யும்?(எதுவும் செய்யாதென்பது பொருள்.) (ஙங)

इंद्रियस्येंद्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।
तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपंथिनौ ॥ ३४ ॥

[கருங] இராகத்துவேஷங்கள் ஒவ்வோரிந்திரியத்தின் விஷயத்திலும் இருக்கின்றன, அவற்றின்(இராகத்துவேஷங்க

ளின்) வசமாகலாகாது. எதனாலெனின், அவ்விரண்டும் இவ னுக்கு(மோக்ஷமார்க்க)விரோதிகளாம். (௩௪)

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५ ॥

[கடுச] செவ்வையாய் அநுஷ்டிக்கப்பட்ட பிறதர்மங்களி னும், குணமில்லதாயினும் சுவ(தன்)தர்மம் மேலானதாம். த ன் தர்மத்தில் மரித்தலும் சிரேஷ்டமாம். பிறர் தர்மம்(நரகத் தில் வீழ்தலாதி)பயத்தை யுண்டுபண்ணுவதாம். (௩௫)

॥ अर्जुन उवाच ॥

अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ ३६ ॥

[கடுரு] அர்ச்சுனன் சொல்லலாயினன் :—இப்போது விருஷ்ணிகுலோத்பன்னரே! இப்புருஷன் விரும்பாதிருந்தும் பலாத்காரமாய் ஏவப்படுபவனைப்போல எவனாலாவது(வலியுடைய யாராலாவது)பிரேரிக்கப்பட்டவனாய்ப் பாவத்தை ஆசரிக்கின்றான். (௩௬)

॥ श्रीभगवानुवाच ॥

काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७ ॥

[கடுகூ] ஸ்ரீ பகவான் சொல்லலாயினர்:—இது காமம், இது குரோதம்; இரஜோகுணத்தினுலுண்டாகியது. மிகுந்தவுணவுடையதும் மகாபாபவடிவினதுமாம். ஆதலால் இக்காமத்தை இங்கு(சம்சாரத்தில் அல்லது மோக்ஷமார்க்கத்தில்) வைரியாக அறி. (௩௭)

धूमेनाव्रियते वह्निर्यथाऽऽदर्शो मलेन च ।
यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८ ॥

[கருஎ] எப்படி(உடன்ருேன்றிய)புகையிஞல் அக்கினியும் அழுக்கிஞல் கண்ணுடியும் மறைக்கப்படுகின்றனவோ, எப்படி மாவியிஞல்(கருவைமறைக்கும் தோலிஞல்)கர்ப்பமானது மறைக்கப்படுகின்றதோ, அதுபோல அதஞல்(காமத்தால்)இது(ஞானம்)மறைக்கப்பட்டதாகின்றது. (௩அ)

आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।
कामरूपेण कौंतेय दुष्पूरेणानलेन च ॥ ३९ ॥

[கருஅ] குந்திபுத்திரா! ஞானியின் நித்தியவைரியும் நிறைக்கக்கூடாத அக்கினியுமாகிய இக்காமவடிவத்தால் ஞானம் மறைக்கப்பட்டதாகின்றது. (௩௯)

इंद्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

[கருகூ] இந்திரியங்களும் மனதும் புத்தியும் இக்காமத்திற்கு அதிஷ்டானமெ(ஆசிரயங்களெ)னப்படுகின்றன. இக்காமம் இவற்றால்(இந்திரியாதிகளால்)ஞானத்தை(அறிவை)மறைத்துத் தேகிகளைப் பலவகையாய் மோகிக்கச் செய்கின்றது. ()

तस्मात्त्वमिंद्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

[கசு॰] பரதசிரேஷ்டனே! ஆதலால் நீ முதலில் இந்திரியங்களையடக்கி சாஸ்திரஞானத்தையும் அநுபவஞானத்தையும் கெடுப்பதும் பாபவடிவினதுமான இக்காமத்தை நிச்சயமாய்க் கொல்லு. (சக)

इंद्रियाणि पराण्याहुरिंद्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

[கசுக] (ஞானிகள்)இந்திரியங்களை மேலானவைகளாகக் கூறுவர். மனது இந்திரியங்களைவிட மேலானது. புத்தி மனதைவிட மேலானது. எது புத்தியைவிட மேலானதாயிருக்கின்றதோ(அதுவே)அது(ஆத்மா). (சு௨)

एवं बुद्धेः परं बुद्ध्वा संस्तभ्यात्मानमात्मना ।
जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥ ४३ ॥

[கசு௨] மகாபாஹோ! இவ்வாறு புத்திக்கு மேலானதை (ஆத்மாவை)அறிந்து, புத்தியினுல் மனதைச் செவ்வையாய் நி

றுத்தி அரிதில் வெல்லத்தக்க காமசொரூபமான சத்துருவைக் கொல்லுவாயாக. (௪௩)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
तृतीयोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீ பகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
மூன்றும் அத்தியாயம் முடிந்தது.



## ॥ कर्मब्रह्मार्पण(ज्ञान)योगः ॥

## கர்மபிரஹ்மார்பண(ஞான)யோகம்.

## ॥ चतुर्थोऽध्यायः ॥

## நான்காம் அத்தியாயம்.

—o—

॥ श्रीभगवानुवाच ॥

इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।
विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १ ॥

[கசுரு] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார் :—யான் அவ்வியயமான இந்த யோகத்தைச் சூரியனுக்குச் சொன்னேன். சூரியன் மநுவுக்குச் சொன்னார். மநு இக்ஷுவாகுவுக்குச் சொன்னார். (க)

एवं परंपराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परंतप ॥ २ ॥

[கசுச] அர்ச்சுனா! இவ்வாறு பரம்பரையாக அடையப்பட்ட இந்த யோகத்தினை இராஜரிஷிகள் அறிவர். அந்த யோகம் நெடுங்காலத்தினால் இங்கு நஷ்டமாயிற்று. (உ)

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत்तमम् ॥ ३ ॥

[கசூ] அதே இப்பழமையான(பரம்பரையாகவந்த)யோகம் என்னால் இப்போது உனக்கு, நீ எனக்குப் பக்தனும் தோழனுமாயிருக்கின்றாயென்று சொல்லப்பட்டது. எதனாலெனின், இது மிக உத்தமமான இரகசியமாம். (௩)

॥ अर्जुन उवाच ॥

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥ ४ ॥

[கஙச] அர்ச்சுனன் சொல்லலாயினன்:—தம்முடைய ஜன்மம் பிந்தியது. சூரியனுடைய ஜன்மம் முந்தியது. சிருஷ்டியினாரம்பத்தில் தாம் உபதேசித்தவர் என்பதனை யான் அறிவதெப்படி? (ச)

॥ श्रीभगवानुवाच ॥

बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥ ५ ॥

[கஙஎ] ஸ்ரீ பகவான் சொல்லலாயினர்:—அர்ச்சுனா! எனக்கும் உனக்கும் அநேக ஜன்மங்கள் கழிந்தன. அவற்றையெல்லாம் யான் அறிவேன். பரந்தப! நீ அறியாய். (ரு)

अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥ ६ ॥

[கசுஅ] யான் பிறப்பில்லாதவனும் அவ்வியயனும் பூதங்களுக்கெல்லாம் ஈசுவரனுமிருந்தும் எனது பிரகிருதியை யதிஷ்டித்து(வசமாகக்கொண்டு)எனது மாயையினால் பிறக்கின்றேன். (சு)

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥ ७ ॥

[கசுகூ] பாரத! எப்பொழுதெப்பொழுது தர்மத்திற்கு நாசமுண்டாகின்றதோ, அதர்மத்திற்கு வளர்ச்சி யுண்டாகின்றதோ, அப்பொழுது நான் என்னைச் சிருஷ்டிக்கிறேன்(வெளிப்படுகிறேன்). (எ)

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥ ८ ॥

[கஎ0] சாதுக்களை இரக்ஷிக்கும்பொருட்டும் துஷ்டர்களை அழிக்கும்பொருட்டும் தர்மத்தை நிறுத்துதற்பொருட்டும் யுகந்தோறும் பிறக்கின்றேன். (அ)

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः ।
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९ ॥

[களக] அர்ஜுனா! எவன் என்னுடைய திவ்வியமான ஜன்மத்தினையும் கர்மத்தினையும் இப்படிஉண்மையாக அறிகிறானோ, அவன் தேகத்தினைவிட்டு மறுபடியும் ஜன்மத்தைப்படையான்; என்னை யடைகின்றான். (௯)

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १० ॥

[களஉ] இராகபயக்குரோதங்கள் விசேஷமா யொழிந்தவர்களான என்மயமானவர்கள் என்னையடுத்தவர்களாய் ஞானமாகிய தவசினால் பவித்திரமானவர்களாய் அநேகர் எனது தன்மை(முக்தி)யை யடைந்திருக்கின்றனர். (க0)

ये यथा मां प्रपद्यंते तांस्तथैव भजाम्यहम् ।
मम वर्त्मानुवर्तंते मनुष्याः पार्थ सर्वशः ॥ ११ ॥

[களஈ] பார்த்தா! எவர்கள் எப்படி என்னை உபாசிக்கின்றார்களோ, அவர்களை யான் அப்படியே(அவரவர் விரும்பியதைக் கொடுத்தலாலேயே)பஜி(அநுக்கிரகி)க்கின்றேன். மனி

தார் எல்லாவகையாலும் என்வழியை யநுசரித்து நடக்கின்றார்கள். (கக)

कांक्षंतः कर्मणां सिद्धिं यजंत इह देवताः ।
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥ १२ ॥

[கஎச] கர்மங்களின்சித்தியை விரும்புகிறவர்கள் இங்குத் தேவதைகளை யஜிக்கின்றார்கள். எதனாலெனின் மானுடலோகத்தில் கர்மத்தாலாகும் சித்தி விரைவில் உண்டாகிறது.(கஉ)

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥ १३ ॥

[கஎ௫] (சத்வாதி)குண(சமதமாதி)கர்மங்களின் விபாகத்தால்(பிரிவால்)நான்கு வர்ணமும் என்னால் படைக்கப்பட்டன. (யான்)அதன் கர்த்தாவாயினும், என்னை அகர்த்தாவென்றும் அவ்வியயனென்றும் அறிக. (க௩)

न मां कर्माणि लिंपंति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४ ॥

[கஎசு] என்னைக் கர்மங்கள் பற்றா, எனக்குக் கர்மபலத்தில் இச்சையில்லை என்று எவன் என்னை அறிகின்றானோ, அவன் கர்மங்களால் கட்டப்படான். (கச)

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥ १५ ॥

[கஎஎ] இப்படி அறிந்து பூர்வீர்களான முமுக்ஷுக்களா லும் கர்மம் செய்யப்பட்டது. அதனால் முன்னோர்களால் செய்யப்பட்ட மிகமுந்திய(தொன்றுதொட்டுவருவ)தான கருமத்தினையே நீ செய். (கரு)

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १६ ॥

[கஎஅ] கர்மம் யாது ? அகர்மம் யாது ? என்று இவ்வாறு இங்கு(இவ்விஷயத்தில்)கவிகளும்(அறிஞரும்) மோகிக்கப்பட்டவர்களாயிருக்கின்றனர். ஆதலால் எதனையறிந்து அசுபத்தினின்றும் விடுபடுவாயோ அந்தன்மைய கர்மத்தை உனக்குச் சொல்லுவேன். (கசு)

कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मणः ।
अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गतिः ॥ १७ ॥

[கஎக] கர்மத்தினையும் அறியவேண்டும். விகர்மத்தினையும் அறியவேண்டும். அகர்மத்தினையும்அறியவேண்டும். எதனாலெனின், கர்மத்தின் கதி ஆழமானதாம்(அறிதலரியதக்கதாம்).

कर्मण्यकर्म यः पश्येदकर्मणि च कर्म यः ।
स बुद्धिमान्मनुष्येषु स युक्तः कृत्स्नकर्मकृत् ॥ १८ ॥

[கஅ०] எவன் கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தினையும் பார்க்கிருனே, அவன் மனிதர்களில் புத்திமான். அவன் யோகமுடையவ(ஞானநிஷ்ட)னும் சகல கர்மங்களையுஞ் செய்பவனுமாவன்.

(கஅ)

यस्य सर्वे समारंभाः कामसंकल्पवर्जिताः ।
ज्ञानाग्निदग्धकर्माणं तमाहुः पंडितं बुधाः ॥ १९ ॥

[கஅக] எவனுடைய எல்லாச் செய்கைகளும் காமசங்கற்ப

(ஆசையுமபிமானமு)மில்லாதனவோ, ஞானாக்கினியினால் தகிக்கப்பட்ட கர்மமுடைய அவனை அறிஞர் பண்டிதன் என்பர்.

त्यक्त्वा कर्मफलासंगं नित्यतृप्तो निराश्रयः ।
कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किंचित्करोति सः ॥ २० ॥

[கஅஉ] நிராசிர(சார்பின்றி)யனாய் நித்தியத்திருப்தனாய் கர்மபலாபிமானம்விட்டுக் கர்மத்தில் நாற்புறமும் பிரவிருத்திக்கவனாயினும் அவன் எதுவும் செய்கிறதேயில்லை. (உ0)

निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।
शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ २१ ॥

[கஅகூ] ஆசையில்லாதவனும் அடக்கப்பட்ட சித்த (மன) ஆத்மாக் (இந்திரியங்களோடுகூடியசரீரங்) களையுமுடையவனு ய் எல்லா(சரீரநிர்வாகத்திற்கதிகமான தனதிகளைக் கொள்ளுத லான)பரிக்கிரகத்தினையும் விட்டவனுய், கேவலம் சாரீர(சரீர நிர்வாகத்துக்குபயோகமுள்ள)கர்மத்தைச்செய்து (அதனுல்) பாபத்தை அடையான். (உக)

यदृच्छालाभसंतुष्टो द्वंद्वातीतो विमत्सरः ।
समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥ २२ ॥

[கஅச] தைவீகமாகக்(வினைவசத்தாற்)கிடைத்தலாபத்தால் சந்தோஷமுடையவனுய், துவந்துவம்(சுகதுக்காதி இருமை)

இல்லாதவனாய், மற்சரமில்லாதவனாய் சித்தியசித்தி(பேறுபே
றின்மை)களில் சமமான(ஹர்ஷசோகமில்லாத)வனாயுள்ளவன்
(கர்மத்தைச்)செய்தும் பந்தப்படுகிறதில்லை. (உஉ)

गतसंगस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।
यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥ २३ ॥

[கஅடு] சங்கமொழிந்தவனும் முக்தனும் ஞானத்தில் நிலை
த்த சித்தமுடையவனும் யஞ்ஞத்தின்(ஈசுவரன்)பொருட்டுச்
செய்கின்றவனுமாகிய புருஷனது கர்மமுழுவதும் மிக விசே
ஷமாய் ஒடுங்குகின்றது. (உரு)

ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।
ब्रह्मैव तेन गंतव्यं ब्रह्मकर्मसमाधिना ॥ २४ ॥

[கஅசு] அர்ப்பணம் (ஓமசாதனங்கள்) பிரஹ்மமே. ஹவிஸ் (ஓமத்தில் போடும் திரவியம்) பிரஹ்மம். பிரஹ்மாக்கினியில் (யஜமானாகிய) பிரஹ்மத்தினால் ஓமிக்கப்பட்டது பிரஹ்மமே. பிரஹ்மமாகிய கர்மத்தில் சமாதியுடையவனான அவனால் அடையத்தக்கது (பிரஹ்மமே). (உச)

दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।
ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५ ॥

[கஅஎ] பிற யோகிகள்(கர்மயோகிகள்)தைவ(தேவதைகளின் பொருட்டான)யஞ்ஞத்தையே எப்போதும் செய்கிறார்கள். மற்றையர்(ஞானயோகிகள்)பிரஹ்மமாகிய அக்கினியில் யஞ்ஞத்தினை(சோபாதிகஜீவரூப ஆத்மாவினை)யஞ்ஞத்தி(நிருபாதிகஆத்மாவி)னாலேயே ஓமிக்கின்றார்கள். (உரு)

श्रोत्रादीनींद्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।
शब्दादीन्विषयानन्य इंद्रियाग्निषु जुह्वति ॥ २६ ॥

[கஅஅ] வேறு சிலர்(இயமாதி நான்கங்கசித்தியுடையோர்) சுரோத்திராதி இந்திரியங்களை சம்யம(தாரணை தியான சமாதி

வடிவ)அக்கினியில் ஓமிக்கின்றூர்கள். வேறு சிலர்(சாஸ்திரநி ஷித்தமல்லாத)சப்தாதி விஷயங்களை (சரீரநிர்வாகத்தின்பொ ருட்டு)இந்திரியாக்கினிகளில் ஓமிக்கின்றூர்கள். (உசு)

सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।
आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७ ॥

[கஅகூ] வேறு சிலர்(நிர்விகற்பசமாதிநிஷ்டர்)சகல இந்தி ரியகர்மங்களையும் பிராணகர்மங்களையும்(ஆத்ம)ஞானத்தினுல் கொழுத்தப்பட்ட ஆத்மசம்யம(சித்தநிரோத)வடிவ யோகாக் கினியில் ஓமிக்கின்றூர்கள். (உஎ)

द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ २८ ॥

[கககூ0] வேறு சிலர் திரவிய(பொருளாற் சாதிக்கத்தக்கவாபிகூபாதி)யஞ்ஞமுடையவர்களும் (கிருச்சிராதி) தபயஞ்ஞமுடையவர்களும், அப்படியே (பிராணாயாமாதி) யோகயஞ்ஞமுடையவர்களும், சுவாத்தியாய (வேதாத்தியயன)வடிவமும்(சாஸ்திரார்த்த) ஞானவடிவமுமாகிய யஞ்ஞமுடையவர்களுமாய் முயற்சியுடையவர்களாயிருக்கின்றனர். அவர்கள் தீக்ஷ்ணமான விரதமுடையவர்களாயிருக்கின்றனர். (உஅ)

अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।
प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९ ॥

[ககூக] வேறு சிலர் (அடயோகிகள்) (உள்ளேபோகும் வாயுவாகிய) அபானனில் (வெளிப்படும் வாயுவாகிய) பிராணனையும் அப்படியே பிராணனில் அபானனையும் ஓமிக்கின்றார்கள் (பூரகரேசகங்களைச் செய்கிறார்கள்). பிராணாபானகதிகளைத்தடுத்து, (கும்பகஞ்செய்து) பிராணாயாமபராயணராகின்றனர். (உகூ)

अपरे नियताहाराः प्राणान्प्राणेषु जुह्वति ।
सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषाः ॥ ३० ॥

[கசுஉ] வேறு சிலர் நியமிக்கப்பட்ட(மிதமும் இதமுமான) உணவுடையவர்களாய் (அதனால்நிரோதிக்கப்பட்ட)பிராணன் களில்(ஞானகர்மேந்திரியவடிவ)பிராணன்களை ஓமிக்கின்றார்கள். இவர்களெல்லோரும் யஞ்ஞமுணர்ந்தவர்களாய்(கூறப்பட்ட-கஉ)யஞ்ஞங்களால் பாவநீங்கியவராகின்றனர். (ங௦)

यज्ञशिष्टामृतभुजो यांति ब्रह्म सनातनम् ।
नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्यः कुरुसत्तम ॥ ३१ ॥

[கசுங] குருசிரேஷ்டனே! யஞ்ஞத்தில்மிஞ்சிய அமுதத்தினைப்புசிப்பவர் பழைமையான பிரஹ்மத்தை அடைகின்றனர்.

யஞ்ஞமில்லாதவனுக்கு இவ்வுலகமில்லை. அப்போது மற்றைய
து(பரலோகம்)எது? (௩௧)

एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।
कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥ ३२ ॥

[கக௬௪] இப்படி வெகுவிதமான யஞ்ஞங்கள் பிரஹ்மாவின் (வேதத்தின்)முகத்தில் விஸ்தரிக்கப்பட்டுள்ளன. அவை யெல்லாவற்றையும் கர்மத்தாலானவைகளாக அறி. இவ்வாறு அறிந்து விசேஷமாக முக்தனுவாய். (௩௨)

श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परंतप ।
सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥ ३३ ॥

[௧௯௫] பரந்தப! திரவியமயமான யஞ்ஞத்தினும் ஞானயஞ்ஞம் மிகச்சிரேஷ்டமாம். பார்த்த! எஞ்சுதலின்றிய எல்லாக் கர்மங்களும் ஞானத்தில் முடிவுபெறுகின்றன. (௩௩)

तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।
उपदेक्ष्यंति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४ ॥

[௧௯௬] அதனை (ஞானத்தினை) சாஷ்டாங்கநமஸ்காரத்தினாலும், செவ்வையாய் வினாவுதலாலும், சேவையினாலும் அறிக.

ஞானிகளும் தத்துவமுணர்ந்தவர்களுமாகிய அவர்கள் ஞானத்தை உபதேசிப்பார்கள். (௩௪)

यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पांडव ।
येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५ ॥

[கசுஎ] பாண்டவ! எதனையறிந்துமறுபடியும் இப்படிமோகத்தினை அடையாயோ, மற்றும் எதனால் முழுவதுமாகப்பூதங்களை ஆத்மாவாகிய என்னிடத்துப் பார்ப்பாயோ(அந்த ஞானத்தினை உபதேசிப்பார்கள்), (௩௫)

अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।
सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं संतरिष्यसि ॥३६॥

[ககூஅ] சகல பாபிகளினும் அதிக பாபஞ்செய்தவனாயினும், சகல பாபங்களையும் ஞானமாகிய தெப்பத்தினாலேயே செவ்வையாய்க் கடப்பாய். (௩௬)

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७ ॥

[ககூகூ] அர்ஜுனா! எப்படிக் கொளுத்தப்பட்ட அக்கினி விறகினைப் பஸ்மமாக்குகின்றதோ, அப்படி ஞானக்கினி சகல கர்மங்களையும் பஸ்மமாக்குகின்றது. (௩௭)

नहि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विंदति ॥ ३८ ॥

[உOO] ஏதனாலெனின், இங்கு ஞானத்திற்குச் சமமானபவித்திரமானது(சுத்திசெய்வது) இல்லை. அதனை (நீண்ட) காலத்தினால் யோகஸம்சித்தியுடையவன் தானே தன்னில்(புத்தியில்) அடைகிறான். (ங௲அ)

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेंद्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शांतिमचिरेणाधिगच्छति ॥ ३९ ॥

[உOக] சிரத்தையுடையவனும் தற்பர(ஞானத்தினை மேலா

னதாகக் கொண்டவ)னுமான இந்திரியவடக்கமுள்ளவன் ஞானத்தையடைகின்றான். ஞானத்தைப்பெற்றுத் தாமதமின்றி மேலான சாந்தியை யடைகின்றான். (ஙகூ)

अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥ ४० ॥

[உ0௨] அஞ்ஞானியும் சிரத்தையில்லாதவனும் சம்சயசித்தமுடையவனும் மிகக் கெடுகின்றனர். (அவர்களுள்)சம்சயசித்தமுள்ளவனுக்கு இந்த லோகமில்லை; பரலோகமில்லை; சுகமில்லை. (சಂ)

योगसंन्यस्तकर्माणं ज्ञानसंछिन्नसंशयम् ।
आत्मवंतं न कर्माणि निबध्नंति धनंजय ॥ ४१ ॥

[உ0௯] தனஞ்சய! ஞானத்தினற் சேதிக்கப்பட்ட சம்சயமுடையவனும் யோகத்தினலொழிந்த கர்மமுடையவனுமான பிரமாதமின்றியவனைக் கர்மங்கள் கட்டுகிறதில்லை. (சக)

तस्मादज्ञानसंभूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।
छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥ ४२ ॥

[உ0ச] பாரத! ஆதலால் அஞ்ஞானத்தினலாகியதும் இருதயத்திலுள்ளதுமான உனது இச்சம்சயத்தினை ஞானவாளால்

சேதித்து(கர்ம)யோகத்தைப் பற்று(செய்). (யுத்தத்தின்பொ
ருட்டு)எழுந்து நில். (சஉ)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
चतुर्थोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீ பகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
நான்காம் அத்தியாயம் முடிந்தது.

—o—

## ॥ पंचमोऽध्यायः ॥
## ஐந்தாம் அத்தியாயம்.
## ॥ (कर्म)संन्यासयोगः ॥
## (கர்ம)சந்நியாஸயோகம்.



॥ अर्जुन उवाच ॥

संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।
यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥ १ ॥

[உ௦ரு] அர்ஜுனன் சொல்லலாயினன்:—கிருஷ்ணபகவானே ! கர்மங்களின் சந்நியாசத்தினையும் மறுபடியும் யோக(கர்மாநுஷ்டான)த்தினையும் சொல்லுகிறீர். இவ்விரண்டனுள் எவ்வொன்று மேலானதோ அதனை எனக்கு செவ்வையாய் நிச்சயிக்கப்பட்டதாய்ச் சொல்லியருள்வீராக. (க)

॥ श्रीभगवानुवाच ॥

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २ ॥

[உ௦சு] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:—சந்நியாஸமும் கர்மயோகமுமாகிய இரண்டும் மோக்ஷத்தைத் தருவனவாம்.

அவ்விரண்டினுள்ளே கர்மசந்நியாசத்தினினும் கர்மயோகம் விசேஷமாகின்றது. (உ)

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न कांक्षति ।
निर्द्वंद्वो हि महाबाहो सुखं बंधात्प्रमुच्यते ॥ ३ ॥

[உ0எ] பெரும்புயத்தோய்! எவன்(கர்மத்தைத்)துவேஷிக்கிறதில்லையோ(கர்மபலத்தை)விரும்புகிறதில்லையோ, அவன் நித்தியசந்நியாசி என்று அறிதற்குரியவனாகின்றான். எதனாலெனின், துவந்துவமின்றியவனாய்ச் சுகமாகப் பந்தத்தினின்றும் விடுபடுகின்றான். (ங)

सांख्ययोगौ पृथग्बालाः प्रवदंति न पंडिताः ।
एकमप्यास्थितः सम्यगुभयोर्विंदते फलम् ॥ ४ ॥

[உ0அ] பாலர்(அவிவேகி)கள் சாங்கியம்(கர்மசந்நியாசம்) யோகம்(கர்மயோகம்)இரண்டனையும் வேருகச்சொல்லுகின்றனர்; பண்டிதர்சொல்லுகிறதில்லை.(இரண்டில்)ஒன்றையேனும் செவ்வையாய்ப்பற்றியுள்ளவன் இரண்டன்பயனையும் அடைகிருன். (ச)

यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ ५ ॥

[உ0௲] சாங்கியர்களால் எந்தஸ்தானம் அடையப்படுகின்ற தோ அது யோகிகளாலும் அடையப்படுகின்றது. எவன் சாங் கியமும் யோகமும் ஒன்றெனக் காண்கின்முனோ அவன்(பரத் தைக்)காண்கின்ருன். (ரு)

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥ ६ ॥

[உக0] மகாபாகுவே! சந்நியாசமோ யோகமின்மையால் து க்கமடையதற்குரியதாம். யோகத்தோடுகூடிய முநி(கௌணசந் நியாசியானமனனசீலகிருகஸ்தன்)பிரஹ்மத்தைத் தாமதமின் றியடைகிருன். (சா)

योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेंद्रियः ।
सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७ ॥

[உகக] யோகத்தோடு கூடியவனும் விசுத்தசித்தமுடையவனும், தேகமனதுகளை வென்றவனும், இந்திரியஜயமுள்ளவனும், சர்வபூதங்களின் ஆத்மவடிவினனுமாகிய ஞானி(கர்மத்தைச்)செய்தும் பற்றப்படுகிறதில்லை. (எ)

नैव किंचित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।
पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपन्श्वसन् ॥ ८ ॥

प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।
इंद्रियाणींद्रियार्थेषु वर्तंत इति धारयन् ॥ ९ ॥

[உகஉ-உகங] (சமாதி)யோகமுடைய தத்துவஞானி பார்த்தும், கேட்டும், பரிசித்தும், முகர்ந்தும், உண்டும், நடந்தும், உறங்கியும், உசுவசித்தும், பேசியும், (மலத்தை)விட்டும், (ஒன்றை)கிரகித்தும், கண்திறந்தும், கண்மூடியும், இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களிலிருக்கின்றன என்று தரித்த(மனத்துட்கொண்ட)வனாய் எதுவுமே யான் செய்திலேன் என்று மதிப்பான். (அ-கூ)

ब्रह्मण्याधाय कर्माणि संगं त्यक्त्वा करोति यः।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

[உகச] எவன் கர்மங்களைப் பிரஹ்மத்தில்வைத்துச் சங்கத்தை(பலேச்சைகர்த்திருத்வாபிமானங்களை)விட்டுச் செய்கிறானோ, அவன் ஜலத்தாற்றாமரையிலையினைப்போல பாபத்தாற்பற்றப்படுகிறதில்லை. (க௦)

कायेन मनसा बुद्ध्या केवलैरिंद्रियैरपि।
योगिनः कर्म कुर्वंति संगं त्यक्त्वाऽऽत्मशुद्धये ॥ ११ ॥

[உகரு] (கர்ம)யோகிகள் சங்கத்தைவிட்டு, சித்தசுத்தியின் பொருட்டுக் காயத்தினல், மனதினல், புத்தியினல், கேவல இந்திரியங்களால் கர்மத்தையும்(உபாசனையையும்)செய்கிருர்கள்.

युक्तः कर्मफलं त्यक्त्वा शांतिमाप्नोति नैष्ठिकीम् ।
अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥ १२ ॥

[உகசு] சமபுத்தியாகிய யோகமுடையவன் கர்மபலத்தை விட்டு நைஷ்டிக(நிஷ்டையினலாம்)சாந்தியைஅடைகின்ருன். யோகமில்லாதவன் காமித்தலை(இச்சையை)ச்செய்தலால் பலத்தில் பற்றுள்ளவனுய்க் கட்டுப்படுகிருன். (கஉ)

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥ १३ ॥

[உகள] சர்வகர்மங்களையும் மனதினால் விட்டுத் தேகியானவன் (தேகேந்திரியசமூகங்களின்) சுவாதீனமுள்ளவனாய் ஒன்பது துவாரமுடைய (சரீரமாகிய) புரத்தில் செய்யாதவனாகியும் செய்வியாதவனாகியும் சுகமாயிருக்கின்றான். (கங)

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥ १४ ॥

[உகஅ] பிரபுவானவன் உலகத்தின் கர்த்திருத்தன்மையினைப் படைக்கிறதில்லை; கர்மங்களையும் படைக்கிறதில்லை. கர்மபலசையோகத்தையும் படைக்கிறதில்லை. ஆனால் ஸ்வபாவம்(அவித்தியா லக்ஷணமுள்ள மாயையாகிய தைவீபிரகிருதி)பிரவர்த்திக்கின்றது. (கச)

नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यंति जंतवः ॥ १५ ॥

[உகக] விபுவானவன் ஒருவனுடைய பாபத்தையும் கிரகிக்கிறதில்லை; புண்ணியத்தையும் கிரகிக்கிறதில்லை. அஞ்ஞானத்

தினால் ஞானம் மறைக்கப்பட்டுளது. அதனால் ஜந்துக்கள் மோகமடைகின்றனர். (கரு)

ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।
तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६ ॥

[உஉ0] மற்றோ, எவர்களுக்கு அவ்வஞ்ஞானம் ஆத்மாவின் ஞானத்தினல் கெடுக்கப்பட்டுளதோ, அவர்களது ஞானம் அப்பரத்தினை சூரியனைப்போல பிரகாசிக்கின்றது (விளக்குகின்றது). (கசு)

तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।
गच्छंत्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७ ॥

[உஉக] அப்புத்தி(அப்பரத்தில் நிச்சயபுத்தி)யுடையோரு
ம், அவ்வாத்மவடிவின(அப்பரமே ஆத்மாவாகவுடையவ)ரும்,
அதில் நிலேத்துள்ளவர்களும், அப்பராயண(அப்பரத்தினேயே
மேலானகதியாகவுடையவ)ரும், ஞானத்திஞல் அழுக்கு நீங்கி
யவர்களுமாகிய அவர்கள் மீண்டும்(பிறப்பில்)வாராமையை அ
டைகின்றனர். (கள)

विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पंडिताः समदर्शिनः ॥ १८ ॥

[உஉஉ] வித்தையும் அடக்கமுமுடைய பிராஹ்மணனிடத்
திலும், கோவினிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும்,

நாயுண்புலையனிடத்தும், பண்டிதர்(ஞானி)கள் சமதர்சி(எல்லாவற்றினும் ஆத்மாவொன்றனையே காண்பவர்)களாவர். ()

इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः।
निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः॥ १९॥

[உஉரு] எவர்களுடைய மனது சமத்தன்மையில் நிலைத்திருக்கின்றதோ அவர்களால் இவ்விடத்திலேயே ஜன்மம் ஜயிக்கப்பட்டதாம். எதனால் பிரஹ்மம் தோஷமில்லாததும் சமமானதுமாயிருக்கிறதோ, அதனால் அவர்கள் பிரஹ்மத்தில் நிலைத்தவர்களாகின்றனர். (கசு)

न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसंमूढो ब्रह्मविद्ब्रह्मणि स्थितः ॥ २० ॥

[உஉச] பிரியத்தினையடைந்து மிகக்களிப்பை யடையான். பிரியமில்லாததையடைந்து துவேஷத்தையு மடையான். ஸ்திரபுத்தியுள்ளவனாய்ச் சம்சயவிபரீதங்களொழிந்த பிரஹ்மவித்தானவன் பிரஹ்மத்தில் நிலைக்கின்றான். (உ௦)

बाह्यस्पर्शेष्वसक्तात्मा विंदत्यात्मनि यत्सुखम् ।
स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षय्यमश्नुते ॥ २१ ॥

[உஉரு] வெளிவிஷயங்களில் பற்றின்றிய சித்தமுள்ளவன்

ஆத்மாவினிடத்து எந்தச் சுகத்தை யடைகின்றானோ, அவன் பிரஹ்மயோகத்தோடுகூடிய சித்தமுடையவனாய் அழிவின்றி ய சுகத்தை யநுபவிக்கின்றான். (உக)

ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।
आद्यंतवंतः कौंतेय न तेषु रमते बुधः ॥ २२ ॥

[உஉகூ] கௌந்தேய! எதனாலெனின், விஷயசம்பந்தத்தா லுண்டாகும் போகங்கள் எவையோ அவை ஆதியந்தமுள்ளனவாய்த் துக்ககாரணங்களாகவே யிருக்கின்றன. அவற்றில் அறிஞன் இரமிக்கிறதில்லை. (உஉ)

शक्नोतीहैव यः सोढुं प्राक् शरीरविमोक्षणात् ।
कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥ २३ ॥

[உ௨௭] எவன் சரீரம் நீங்குவதன்முன்(தேகம் விழும்வரையில்)காமக்குரோதங்களாலுண்டாகும் வேகத்தை இங்குதானே சகிக்கக்கூடியவனாகின்றானோ, அவன் யோகி. அம்மனிதனே சுகி. (உ௩)

योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।
स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥ २४ ॥

[உ௨௮] எவன் உள்ளே(ஆத்மாவில்)சுகமுடையவனோ, அ

ப்படியே உள்ளே இரமித்தலையுடையவனையும், உள்ளே ஜோதி யுடையவனையுமிருக்கின்றானோ, அந்த யோகி பிரஹ்மவடிவமா ய்ப் பிரஹ்மநிர்வாணத்தை(பிரஹ்மாநந்தமாகிய முத்தியினை) யடைகின்றான். (உச)

लभंते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।
छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥ २५ ॥

[உஉரு] பாபமொழிந்தவரும், சம்சயநீங்கியவரும், ஒருமித் தமனதுடையவரும், சகலபூதங்களின் இதத்தில் இரமித்தவரு மான ரிஷிகள் பிரஹ்மநிர்வாணத்தை(முத்தியை)யடைகின்றா ர்கள். (உரு)

कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।
अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६ ॥

[உரு௦] காமக்குரோதங்கள் நீங்கியவர்களும், அடங்கிய சித்தமுடையவர்களும், ஆத்மாவினை யறிந்தவர்களுமாகிய யதி (யத்தனசீலர்)கட்கு எப்புறத்துமாக(ஜீவித்துளபோதும் மரித்தபோதும்)நிர்வாணமாகிய பிரஹ்மமி(முத்தியி)ருக்கின்றது.

स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवांतरे भ्रुवोः ।
प्राणापानौ समौ कृत्वा नासाभ्यंतरचारिणौ ॥ २७ ॥

[உருக] (சப்தாதி)வெளிவிஷயங்களை வெளியில் நிறுத்தி,

நேத்திரத்தை புருவநடுவில் வைத்து, நாசியிநுட்சரிக்கும் பிராணபானன்களை சமமுள்ளனவாகச் செய்து, (உஎ)

यतेंद्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।
विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८ ॥

[உஅ] அடக்கப்பட்ட இந்திரியமனோபுத்திகளையுடையவனும், இச்சாபயக்குரோதங்கள் நீங்கியவனும், மோக்ஷபராயண (முத்தியை மேலானகதியாகவுடையவ)னுமாய் எந்தமுநி (சந்நியாசி)யிருக்கின்றானோ, அவன் எப்பொழுதும் முக்தனே.

भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।
सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शांतिमृच्छति ॥ २९ ॥

[உ௯௯] யஞ்ஞதபசுகளை(கர்த்தாவடிவாகவும் தேவதாரூப மாகவும்)புசிப்பவனும், சர்வலோகமஹேசுவரனும், சர்வஜீவர் களின் சுகிருத்து(நலத்தைக்கருதுபவனு)மாகிய என்னை யறிந் து சாந்தியை யடைகிறான். (உகூ)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
पंचमोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீ பகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
ஐந்தாம் அத்தியாயம் முடிந்தது.



## ॥ षष्ठोऽध्यायः ॥

## ஆறும் அத்தியாயம்.

## ॥ अध्यात्म(आत्मसंयम)योगः ॥

## அப்பியாச(ஆத்மசம்யம)யோகம்.

॥ श्रीभगवानुवाच ॥

अनाश्रितः कर्मफलं कार्यं कर्म करोति यः ।
स संन्यासी च योगी च न निरग्निर्न चाक्रियः ॥ १ ॥

[௨௩௪] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார் :—எவன் கர்மபலத்

தை ஆசிரயிக்காதவனுப் செய்யத்தக்க கர்மத்தைச் செய்கின்ருனே, அவன் அக்கினியில்லாதவனல்லன்; கிரியையில்லாதவனல்லன். (என்ருலும்)சந்நியாசியும்யோகியு(சித்தசமாதானமுள்ளவனு)மாவன். (க)

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पांडव ।
न ह्यसंन्यस्तसंकल्पो योगी भवति कश्चन ॥ २ ॥

[உ௫௫] பாண்டவ! எதனைச் சந்நியாசமென்று கூறுகின்ருர்களோ, அதனை யோக(கர்மாநுஷ்டான)மென்றறி. எதனுலெனின், சங்கற்பம் விடாதவன் எவனும்(கர்ம)யோகி(சமாதானமுடையவன்)ஆகான். (உ)

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।
योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३ ॥

[உரை] (தியான)யோகத்தினை ஏறவிரும்பும் முனி(கர்மபலம்விட்டவனு)க்குக் கர்மம் காரண(சாதன)மென்று சொல்லப்படுகின்றது. யோகத்திலேறியவனை அவனுக்குச்சமமே(சர்வகர்மநிவிருத்தியே)காரண(சாதன)மென்று சொல்லப்படுகின்றது. (ங)

यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।
सर्वसंकल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४ ॥

[உ-ந-ள] எப்பொழுது இந்திரிய விஷயங்களில் பற்றுகிறதில்லையோ, கர்மங்களிலுமில்லையோ, சர்வசங்கற்ப சந்நியாசியாயிருக்கின்றானோ, அப்பொழுது யோகாரூடன் எனப்படுகின்றான். (சு)

उद्धरेदात्मनाऽऽत्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बंधुरात्मैव रिपुरात्मनः ॥ ५ ॥

[உ-ந-அ] ஆத்மாவை (அந்தவிசிஷ்ட) ஆத்மாவி (சுத்தபுத்தியி)னால் உத்தாரஞ்செய்ய (உயர்த்த)வேண்டும். ஆத்மாவைக் கீழ்ப்படுத்தலாகாது. எதனாலெனின், ஆத்மாவே (தானே) ஆத்

மாவிற் (தனக்)கு பந்து (உறவு). ஆத்மாவே ஆத்மாவிற்குச் சத்துரு (பகை). (ரு)

बंधुरात्माऽऽत्मनस्तस्य येनात्मैवात्मना जितः।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥ ६ ॥

[உருகூ] எவனுல் ஆத்மா (காரணகாரியசங்காதம்) ஆத்மாவி (சுத்தபுத்தியி)ஞலேயே ஜயிக்கப்பட்டதாமோ, அவனுடைய ஆத்மா (மனது) ஆத்மாவுக்கு (புத்திவிசிஸ்டசேதனத்திற்கு)ப் பந்துவாம். (அவனின்வேருன) அநாத்மாவிற் (சங்காதஜயமில்லாதவனுக்)குச் சத்துருத்தன்மையில் சத்துருவினைப்போல ஆத்மாவே (தானே) யிருக்கின்றது. (சா)

जितात्मनः प्रशांतस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥ ७ ॥

[உ௫௦] சீதோஷ்ணசுகதுக்கங்களிலும் அப்படியே மானவமானங்களிலும் ஜயிக்கப்பட்ட சித்தமுடைய மிக்க சாந்தனுக்குப் பரமாத்மா செவ்வையாய் கொள்ள(வெளி)ப்படுவதாகின்றது. (எ)

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेंद्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकांचनः ॥ ८ ॥

[உ௫௧] (சாஸ்திர) ஞானவிஞ்ஞான(அநுபவ ஞான)ங்களால் திருப்தியடைந்த சித்தமுடையவனும், கூடஸ்த(சலிப்பின்

றியவ)னும், இந்திரியஜயமுள்ளவனும், மண்ணாங்கட்டி கல் பொன் என்பவற்றிற் சமத்துவமுள்ளவனுமாகிய யோகியோ கார்ருடனென்று சொல்லப்படுகின்முன். (அ)

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबंधुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥ ९ ॥

[உசஉ] துணைவன் (தனது நலங்கருதுவோன்)நண்பன் பகைவன் உதாசீனன் மத்தியஸ்தன் துவேஷிக்கப்படுபவன் உறவினனென்னு மிவர்களிடத்திலும், சாதுக்களிடத்திலும், பாபிகளிடத்திலும் சமபுத்தியுடையவன் விசேஷிக்கப்படுகின்றுன்.

योगी युंजीत सततमात्मानं रहसि स्थितः।
एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥ १० ॥

[உ௪௩] யோகி (தியானப்பியாசி) இரகசிய (ஏகாந்த)த்திலிருப்பவனும், தனித்தவனும், அடக்கப்பட்ட மனவாத்மாக்(தேகேந்திரியங்)களையுடையவனும், ஆசையற்றவனும், எதனையும் கிரகியாதவனுமாய் ஆத்மாவை(மனதை)எப்போதும்(ஆத்மாவில்) பொருத்துக. (க0)

शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः।
नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥ ११ ॥

[உ௪௪] சுசியான இடத்தில் மிகவுயரமில்லாததும் மிகத்தாழ்வில்லாததும் வஸ்திரம் மான்தோல் தர்ப்பை என்பவற்றை (முறையே) ஒன்றன்மேலொன்ருகவுடைய தனது ஸ்திரமான ஆசனத்தை அமைத்து, (௧௧)

तत्रैकाग्रं मनः कृत्वा यतचित्तेन्द्रियक्रियः ।
उपविश्यासने युंज्याद्योगमात्मविशुद्धये ॥ १२ ॥

[உ௪௫] அங்கு ஆசனத்தில் உட்கார்ந்து, தடுக்கப்பட்ட சித்தஇந்திரியக்கிரியைகளை யுடையவனுய் மனதை ஏகாக்கிரம் செய்து, ஆத்மாவினது (சித்தத்தின்) விசுத்தியின் பொருட்டு யோகத்தைச் சாதிக்கக்கடவன். (௧௨)

सम‍ं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३ ॥

[உசஙு] அசையாதவனாய், உடல் சிரம் கழுத்து என்பவற்றை சமமாக அசையாது வைத்துத் தனது நாசி நுனியைச் செவ்வையாய்ப் பார்த்துக்கொண்டு திசைகளைப்பாராதவனாய்,

प्रशांतात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।
मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥ १४ ॥

[உசஎ] மிகச்சாந்தசித்த முடையவனாய், பயமொழிந்தவனாய், பிரஹ்மசாரிவிரதத்தில் நிலைத்தவனாய், மனதையடக்கி; என்

னிடத்துச் சித்தமுடையவனாய், என்னையே(மேலாகக்)குறித்த வனாய் யோகமுடையவனா யிருப்பன். (கச)

युञ्जन्नेवं सदाऽऽत्मानं योगी नियतमानसः ।
शांतिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥ १५ ॥

[உ.சா.அ] இப்படி எப்போதும் மனதைப் பொருத்தியோகி அடக்கப்பட்ட மனதையுடையவனாய் என் நிலையும் நிர்வாண (முக்தி) எல்லையினதுமாகிய சாந்தியை யடைகின்றான்.(கரு)

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकांतमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥ १६ ॥

[உசகூ] அர்ஜுனா! மிகுதியாய்ச் சாப்பிடுகிறவனுக்கோ யோகமில்லை. அத்தியந்தம் புசியாதவனுக்குமில்லை; அதிகமாய்த் தூங்குமியல்புடையவனுக்குமில்லை ; (அத்தியந்தம்) விழித்திருப்பவனுக்குமேயில்லை. (கசு)

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ १७ ॥

[உருo] பொருத்தமான ஆகாரவிகாரங்களையுடை (உணவும் நடையுமுடை) யவனும், கர்மங்களில் பொருத்தமான சேஷ்டையையுடையவனும், பொருத்தமான உறக்கமும் விழிப்பு

முடையவனுமாயுள்ளவனது யோகம் துக்கத்தைக் கெடுப்பதாகின்றது. (கஎ)

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥ १८ ॥

[உநிக] எப்போது விசேஷமாயடக்கப்பட்ட சித்தம் ஆத்மாவிலேயே நிற்கின்றதோ, சர்வ காமங்களினின்றும் பற்றுஒழிந்ததாகின்றதோ அப்போது யுக்தன் (யோகமுடையவன்) என்று சொல்லப்படுகின்றான். (கஅ)

यथा दीपो निवातस्थो नेंगते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युंजतो योगमात्मनः ॥ १९ ॥

[உ௬உ] எப்படிக் காற்றில்லாத விடத்துள்ள தீபம் அசைகிறதில்லையோ, அது ஆத்மாவினது யோகத்தினைப் பொருந்தும் யோகியின் அடங்கிய சித்தத்திற்கு உவமையாகக் கருதப்படுகின்றது. (கக)

यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनाऽऽत्मानं पश्यन्नात्मनि तुष्यती ॥ २० ॥

[உ௬௩] யோகசேவையினால் தடுக்கப்பட்ட சித்தம் எப்போது ஒடுங்குகின்றதோ, எங்கு ஆத்மாவி(சமாதிபரிசுத்த அந்தக்கரணத்தி)னால் ஆத்மாவை(பரத்தை)க்கண்டு ஆத்மாவிலேயே சந்தோஷிக்கின்றானோ, (உ0)

सुखमात्यंतिकं यत्तद्बुद्धिग्राह्यमतींद्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ २१ ॥

[உருச] எந்தச்சுகம் ஆத்தியந்திக (பூர்ண) மும், அதீந்திரியமும், புத்தியினால் கிரகிக்கத்தக்கதுமாயிருக்கின்றதோ அதனை எப்போது நிலைத்தவனாய் இவன் (யோகி) அறிகின்றானோ, உண்மையினின்றும் சலிக்கிறதேயில்லையோ, (உக)

यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ २२ ॥

[உருரு] எதனை (எப்பாக்யத்தை) அடைந்து, அதனினும் அதி

கமான வேறு லாபத்தை மதிக்கிறதில்லையோ, எதில் (எவ்வா த்மாவில்) நிலைத்தவன் பெருந்துன்பத்தினாலும் அசைக்கப்படா னோ, (உஉ)

तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगो निर्विण्णचेतसा ॥ २३ ॥

[உருசு] அதனைத் துக்கசையோகத்தின் வியோக (துன்பச் சேர்க்கையின்பிரிவு) வடிவயோக மென்னும் பெயருடையதாக அறிக. அந்தயோகம் வேதனையி (கைப்பி) ன்றிய சித்தத்தால் (சாஸ்திராசாரியவுபதேசத்தாலாகிய) நிச்சயத்தினால் அப்பிய சிக்கத்தக்கதாம். (உங)

संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेंद्रियग्रामं विनियम्य समंततः ॥ २४ ॥

[உ௨௪] (சோபாதிகமாகிய) சங்கற்பத்தினின்றுண்டாகிய சர்வகாமங்களையும் முழுவதும்விட்டு, மனதினாலேயே இந்திரியக்கூட்டங்களை எப்புறத்துமாக அடக்கி, ()

शनैःशनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिंतयेत् ॥ २५ ॥

[உ௨௫] தைரியத்தினால் கொள்ளப்பட்ட புத்தியினால் மெல்லமெல்ல உபரதிசெய்க(ஒடுக்குக). மனதை ஆத்மாவில் செவ்வையாக நிலைத்ததாகச்செய்து எதனையும் சிந்திக்கலாகாது.

यतो यतो निश्चरति मनश्चंचलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ २६ ॥

[உருகூ] சஞ்சலமும் அஸ்திரமுமாய் மனது எதெதனால் வெளிப்படுகின்றதோ, அததனினின்றும் இதனை அடக்கி, ஆத்மாவிலேயே வசமாக்குக (நிறுத்துக). (உகூ)

प्रशांतमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शांतरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७ ॥

[உகூ0] மிகச்சாந்தியடைந்தவனும் அழுக்கு நீங்கியவனும் பிரஹ்மவடிவினனும் வினையொழிந்தவனுமாகிய இந்த யோகியை நிச்சயமாக உத்தமமான சுகம் நெருங்குகின்றது. (உஎ)

युंजन्नेवं सदाऽऽत्मानं योगी विगतकल्मषः ।
सुखेन ब्रह्मसंस्पर्शमत्यंतं सुखमश्नुते ॥ २८ ॥

[உ௬௧] இவ்வாறு எப்போதும் ஆத்மாவினை அநுசந்திக்குக்கொண்டு கல்மஷ (அவித்தையாதிக்கிலேச) ம் நீங்கியவனை யோகி சுகமாகப் பிரஹ்மத்தோடு பொருந்தியுள்ளதும் முடிவில்லாததுமான சுகத்தை வியாபி(அநுபவி)க்கின்றான். (உஅ)

सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९ ॥

[உ௬உ] யோகத்தோடுகூடிய சித்தமுடையவனும் எங்கும் சமதிருஷ்டியுடையவனுமாய்ச் சர்வபூதங்களினு முள்ளதாக

ஆத்மாவையும் ஆத்மாவில் சர்வபூதங்களையும் காண்கிறுன். ()

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥ ३० ॥

[உசுரு] எவன் எவ்விடத்தும் என்னைப் பார்க்கின்றுனே, எல்லாவற்றையும் என்னிடத்தில் பார்க்கின்றுனே, அவனுக்கு யான்நாசமாகேன் (காணப்படாதிரேன்). அவன் எனக்கு நாசமாகான் (காணப்படாதிரான்). (௩௦)

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥ ३१ ॥

[உகூச] எவன் சர்வபூதங்களிலுமுள்ள என்னை (ஆத்ம) ஒருமையில் நிலைத்தவனாய் பஜிக்கின்றானோ, அந்தயோகி எவ்விதமாக இருப்பவனாயினும் என்னிடத்திலிருப்பன். (௩௧)

आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।
सुखं वा यदि वा दुःखं स योगी परमो मतः ॥ ३२ ॥

[உகூ௫] அர்ஜுனா! எவன் தன்னைப்பாக எங்கும் (சர்வஜீவர்களிடத்தும்) சுகத்தையாவது துக்கத்தையாவது சமமாகக்காண்கின்றானோ அந்தயோகி (நான்காம்பூமியிலுள்ளவனினும்) மேலானவனென்று மதிக்கப்படுகின்றான். (௩௨)

॥ अर्जुन उवाच ॥

योऽयं योगस्त्वया प्रोक्तः साम्येन मधुसूदन ।
एतस्याहं न पश्यामि चंचलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३ ॥

[உகூசா] அர்ஜுனன் சொல்லலாயினன்:—மதுசூதனரே! தம்மால் யாதொரு இந்தயோகம் சமத்தன்மையாகச் சொல்லப்பட்டதோ, இதன் ஸ்திரமானஸ்திதியை யான் காணேன்; சஞ்சலமுடைமையால். (ஙங)

चंचलं हि मनः कृष्ण प्रमाथि वलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४ ॥

[உகூஎ] கிருஷ்ணமூர்த்தியே! எதனால் மனம் சஞ்சலமா

னதும், கடைதற்சுபாவமுடைய(கலக்குவ)தும், வலியுடைய தும், திடமானதுமாயு மிருக்கின்றதோ, அதனால் அதன் நிக் கிரகத்தினை யான் வாயுவின் நிரோதம்போல் மிகவரிதிற் செ ய்யக்கூடியதெ(மிகஅசாத்தியமெ)ன்று கருதுகின்றேன். ().

॥ श्रीभगवानुवाच ॥

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौंतेय वैराग्येण च गृह्यते ॥ ३५ ॥

[உகூஅ] ஸ்ரீபகவான்சொல்லலாயினார்:-மகாபாகுவே! மன து அடக்குதற்கரியதும் சஞ்சலசுபாவமுடையதுமா மென்பதி ற் சம்சயமில்லை. ஆனால் குந்திபுத்திரா! அப்பியாசத்தினாலும்

வைராக்கியத்தினாலும் நிரகிக்க (நிரோதிக்க)ப்படுகின்றது. ()

असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६ ॥

[உகூகூ] அடக்கப்படாத மனதுடையவனால் யோகம் அடைதற்கரியதென்பது என் அபிப்பிராயம். ஆனால் முயற்சியுடைய வசப்பட்ட மனதுடையவனால் (அப்பியாசவைராக்யவடிவ) உபாயத்தினால் அடையக்கூடியதாம். (ஙகூ)

॥ अर्जुन उवाच ॥

अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७ ॥

[உஎ௦] அர்ஜுனன் சொல்லலாயினன்:—கிருஷ்ணபகவானே! முயற்சியில்லாதவனும் சிரத்தையோடு கூடியவனுமாய் (யாதேனுமோர் பிரதிபந்தத்தால்) யோகத்தினின்றும் நழுவிய மனதுடையவன் யோகத்தின் செவ்வையான சித்தியை அடையாதபோது என்னகதியை யடைகிறன்? (௩எ)

कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८ ॥

[உஎக] மகாபாகுவே! பிரஹ்மத்தினது மார்க்க (பிரஹ்மமடைவிக்கும் ஞான) த்தில் விமூடன் (விசேஷ அறிவில்லாத

வன்) நிலையில்லாதவனாய், (ஞானம் யோகம்) இரண்டினின்றும் நழுவினவனாய்ச் சிதைபட்ட மேகம்போல் நாசத்தை யடைய மாட்டானா? என்னை? (௩அ)

एवन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य छेत्ता नह्युपपद्यते ॥ ३९ ॥

[உஎஉ] கிருஷ்ணபகவானே! (தாம்) எனக்கு இச்சம்சயத்தினை அடியோடு சேதித்தற்குரியவராகின்றீர்: எதனாலெனின், தம்மின்வேறானவர் (ஒருவர்) இச்சம்சயத்தை யொழிப்பவராகச் சம்பவிப்பதில்லை. (௩௯)

॥ श्रीभगवानुवाच ॥

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
नहि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

[உஎரு] ஸ்ரீபகவான் சொல்லலாயினர்:-பார்த்த! அவனுக்கு விநாசம் இவ்விடத்திலேயேயில்லை. பரத்திலு (மறுமையிலு) மில்லை. எதனாலெனின், அப்பா! கல்யாண (சுப)த்தைச் செய்கின்ற எவனும் துர்க்கதியை அடைகிறதில்லை. (௪0)

प्राप्य पुण्यकृताँल्लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

[உஎச] யோகப்பிரஷ்டன் (அசுவமேதாதி) புண்ணியஞ் செய்தவர்களது லோகங்களை அடைந்து, வெகு வருஷங்கள் வசித்துப்பின் சுசியுள்ள ஸ்ரீமான்கள் குலத்தில் பிறக்கின்றான்.

अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२ ॥

[உஎரு] அல்லது அறிவுள்ள யோகிகளின் குலத்திலேயே உண்டாகின்றான். எதனாலெனின், இப்படிப்பட்ட ஜன்மம் எதுவோ இது உலகத்தில் அடைதற்கரியதினும் அடைதற்கரியதாம். (சஉ)

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनंदन ॥ ४३ ॥

[௨௭௬] குருநந்தனே! அங்கு முன்(யோகப்ரஷ்ட)சரீரத்தினதாகிய அந்த ஞானத்தின் சையோகத்தை யடைகிறான். அதன் பின் நற்சித்தியில் (மோக்ஷவிஷயத்தில்) மிகுதியாக முயலுகிறான். (சரு)

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४ ॥

[௨௭௭] அவன் வசமில்லாத (விரும்பாத) வனாயினும், அந்த முந்திய அப்பியாசத்தினாலேயே இழுக்கப்படுகின்றான்.

ஏதனாலெனின், யோக (ஞானசாதன) த்தினை அறிய விரும்பு வோனும் சப்தப்பிரஹ்ம(கர்மப்பிரதிபாதகவேத)த்தினை அதிக்கிரமித்து நடக்கின்றான். (சச)

प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५ ॥

[உஎஅ] முயற்சியினால் அப்பியசிக்கின்ற யோகியோ செவ்வையாய்ப் பாபங்களினின்றும் சோதிக்கப்பட்டவனாய் அநேக ஜன்மங்களால் நல்ல சித்தியை (ஞானத்தை)ப் பெற்றவனாய் அதன் பின் பரகதியை அடைகின்றான். (சரு)

तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६ ॥

[உ-ள்கூ] யோகி(ஞானசம்பன்னன்)தபசிகளினும் அதிகனுக மதிக்கப்படுகின்ருன்; (பரோக்ஷ) ஞானிகளினும் அதிகன். யோகி கர்மயோகிகளினும் அதிகன். ஆதலால் அர்ஜுனு! யோகியாகக்கடவாய். (சாகூ)

योगिनामपि सर्वेषां मद्गतेनांतरात्मना ।
श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥ ४७ ॥

[உ-அ०] எந்தச்சிரத்தையுடையவன் என்னிடத்து நிலேத்துள்ள மனதினுல் என்னைப் பஜிக்கின்ருனே, அவன் (மற்றதே

வதா தியானிகளான) எல்லா யோகிகளுள்ளும் மிகச்சிரேஷ்ட
னென்பது என் அபிப்பிராயம். (சஎ)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
षष्ठोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
ஆறும் அத்தியாயம் முடிந்தது.

इति प्रथमं कर्मषट्कं समाप्तम् ॥

இவ்வாறு முதல் கர்மஷட்கம் முடிந்தது.

## ॥ सप्तमोऽध्यायः ॥
## ஏழாம் அத்தியாயம்.
## ॥ ज्ञानविज्ञानयोगः ॥
## ஞானவிஞ்ஞானயோகம்.

॥ श्रीभगवानुवाच ॥

मय्यासक्तमनाः पार्थ योगं युंजन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

[உஅக] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:-பார்த்த! என்னிட
த்தில்பற்றிய மனதுடையவன் என்னாசிரயமுள்ளவனாய் யோ

கத்திற் (மனசமாதானத்தைப்) பொருந்தி என்னை முழுவதும் சம்சயமின்றியதாக எவ்வாறு அறிவாயோ அதனைக்கேள். (க)

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २॥

[உஅஉ] எதனை அறிந்து இவ்வுலகத்தில் மறுபடியும் அறியத்தக்கது வேறு மிஞ்சுகிறதில்லையோ, அவ்விந்த விஞ்ஞானத்தோடுகூடிய ஞானத்தினை யான் உனக்கு முழுவதுமாகச் சொல்லுகிறேன். (உ)

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

[உஅங] மனிதர்களின் (எத்தனையோ) ஆயிரங்களுள் ஒரு வன் சித்தியின்பொருட்டு முயலுகிறான். முயன்ற சித்தர்களு ள்ளும்(எவனோ)ஒருவன் என்னை உண்மையாக அறிகின்றான்.

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

[உஅச] பிருதிவி, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம், மன து, புத்தி, அகங்காரம் என்று என்னுடைய இந்தப் பிரகிருதி எண்வகையாக வேறுபட்டுளது. (ச)

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

[௨அ௫] மகாபாகுவே! இது அபரா (தாழ்ந்த) பிரகிருதி. எதனால் இந்த ஜகத்து தரிக்கப்படுகின்றதோ, அதனை இதனின் வேறானதான ஜீவஸ்வரூபமாகிய எனது பரா (மேலான) பிரகிருதியென்று அறிக. (௫)

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

[௨அ௬] எல்லாப்பூதங்களும் (அபரா பராவெனும்) இவ்விரண்டனையும் காரணமாகவுடையன என்று நிச்சயஞ்செய்க. யான் எல்லாஜகத்திற்கும் (பிரகிருதிகள் இரண்டன்வாயிலாக) உற்பத்தியும் அப்படியே பிரளயமுமாயிருக்கிறேன். (௬)

मत्तः परतरं नान्यत्किंचिदस्ति धनंजय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

[உஅஎ] தனஞ்சயா! எனக்கு வேறாக எதுவும் மிக மேலானதா (சுவதந்திரகாரணமா) யில்லை. சூத்திரத்தில் மணிகணங்களைப்போல என்னிடத்தில் இவ்வெல்லாம் கோக்கப்பட்டிருக்கின்றது. (எ)

रसोऽहमप्सु कौंतेय प्रभाऽस्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

[உஅஅ] கௌந்தேயா! ஜலங்களில் இரஸம் யான். சந்திர சூரியர்களிடத்துள்ள பிரபை யான். ஸர்வவேதங்களிலும் பிர

ணாவம் யான். ஆகாசத்தில் சப்தம் யான். நரர்களில் புருஷத்
தன்மை யான். (அ)

पुण्यो गंधः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

[உஅகூ] பிருதிவியில் புண்ணியமான (நல்ல) கந்தமாயிருக்கிறேன். அக்கினியில் தேஜசு (ஒளி) யான். சர்வபூதங்களிலும் ஜீவனம் யான். தவசிகளில் தவம் யான். (கூ)

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥

[உ௯0] பார்த்த! பழைமையான என்னை எல்லாப்பூதங்களுக்கும் வித்தென்றறி. புத்திமான்களிடத்துப் புத்தி யான். தேஜசுள்ளவர்களில் தேஜசு (பராக்கிரமம்) யான். (௧0)

बलं बलवतामस्मि कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

[உ௯௧] பரதசிரேஷ்டனே! பலமுள்ளவர்களிடத்துள்ள காமராகங்களின்றிய பலம் (வலி) யான். பூதங்களிடத்துள்ள தர்மவிரோதமின்றிய காமம் யான். (௧௧)

ये चैव सात्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥

[உகூஉ] எவைகள் சாத்துவிகமும், எவை இராஜஸமும் தாமஸமுமான பதார்த்தங்களாயிருக்கின்றனவோ, அவற்றை என்னிடத்திருந்தே உண்டாயினவென்று அறி. ஆனால் யான் அவற்றில் இல்லை. அவை என்னிடத்திருக்கின்றன. (கஉ)

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

[உகூ௩] இந்த முக்குணமயமான பதார்த்தங்களால் இவ்வெல்லா ஜகத்தும் மோகிக்கப்பட்டனவாய், இவற்றிற்கு (குணங்கட்கு) மேலான அவ்வியயமாக என்னை அறிகிறதில்லை. (க௩)

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यंते मायामेतां तरंति ते ॥ १४ ॥

[உகசு] என்னுடைய இந்தக்குணமயமானபிரசித்த தைவீ மாயை கடத்தற்கரியதாம். எவர்கள் என்னையே அடைகின்றுர்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக்கின்றுர்கள். (கச)

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यंते नराधमाः ।
माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥

[உகரு] மாயையினல் அபகரிக்கப்பட்ட ஞானமுடையோரும், அசுரத்தன்மையை யாசிரயித்தவர்களும், துஷ்டகர்மஞ்

செய்வோரும், மூடருமான நராதமர்கள் என்னை அறிகிறதில்லை. (கரு)

चतुर्विधा भजंते मां जनाः सुकृतिनोऽर्जुन।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥

[உகசு] பரதசிரேஷ்டனே! அர்ஜுனா! ஆர்த்தன் (துக்கபீடிதன்), ஜிஞ்ஞாசு(பகவத்தத்வஞானவிருப்புடையவன்), அர்த்தார்த்தி(பொருளை விரும்பினோன்), ஞானி(தத்துவமுணர்ந்தவன்) என்னும் நால்வகையான புண்ணியவான்களாகிய ஜனங்கள் என்னைப் பஜிக்கின்றார்கள். (கசு)

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

[உகூஎ] அவர்களுள் நித்தியமும் யோகஞ்செய்பவனும் ஒன்றிலேயேபக்தியுடையவனுமான ஞானிவிசேஷிக்கின்றான். எதனாலெனின், யான் ஞானிக்கு மிகவும் பிரியமுள்ளவன். அவன் எனக்குப் பிரியமுள்ளவன். (கஎ)

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

[உகூஅ] இவர்கள் யாவரும்மேலானவர்களே. ஆனால் ஞானி ஆத்மாவே(என்சொரூபமே)என்பது என் அபிப்பிராயம்.

எதனாலெனின், அவன் (என்னிடத்து) ஒருமனமுடையவனாய் சர்வோத்தமகதியான என்னையே எப்புறத்துமாக ஆசிரயித்திருக்கின்றான். (கஅ)

बहूनां जन्मनामंते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

[உகக] வெகுஜன்மங்களின் முடிவில் எல்லாம் வாசுதேவன் என்னும் ஞானமுடையவன் என்னை அடைகிறான். அந்த மகாத்மா மிகத்துர்லபன் (கிடைத்தற்கரியன்). (கக)

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यंतेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

[௩00] அந்தந்தக் காமங்களால் கவரப்பட்ட ஞானமுடையோர் தமது பிரகிருதியினல் பிரேரிக்கப்பட்டவர்களாய் அந்தந்த நியமத்தில் நிலைபெற்றவர்களாய் அந்நிய தேவதைகளையடைகின்றார்கள். (உ0)

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥

[௩0௧] எந்த எந்தப் பக்தன் எந்த எந்தச் சரீரத்தை (மூர்த்தியை)ச் சிரத்தையோடு அர்ச்சிக்க விரும்புகிறானே, அவனவனது அந்தச் சிரத்தையினையே அசையாததாக்குகின்றேன்.

स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२ ॥

[௩௦௨] அவன் அந்தச் சிரத்தையோடுகூடியவனாய் அத்தேவதையின் ஆராதனத்தை விரும்புகின்றான். அதனிடத்தினின்றும் என்னாலேயே விதிக்கப்பட்ட அக்காமங்களை நிச்சயமாக அடைகின்றான். (௨௨)

अंतवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यांति मद्भक्ता यांति मामपि ॥ २३ ॥

[௩௦௩] அந்த அற்பஅறிவுடையவர்களுக்கு அந்தப்பலம்

நாசமுடையதாகவே யாகின்றது. தேவாராதனை செய்வோர் தேவர்களை அடைகின்றனர். என் பக்தர்கள் என்னையும் அடைகின்றார்கள். (உங)

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यंते मामबुद्धयः ।
परं भावमजानंतो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥

[ஙஂ௦௪] புத்தியீனர் என்னுடைய மேலான அவ்வியயமான இருப்பைச் சர்வோத்தமமென்று அறியாதவர்களாய் அவ்வியக்தமாகிய(வெளிப்படாத)என்னை வியக்தியடைந்தவனாக(மனிதவடிவாக)மதிக்கின்றார்கள். (உச)

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥

[௲௦ரு] யோக(வசமாயிருக்கும் எனது சங்கற்பமாகிய)மாயையினால்மறைத்திருக்கும்யான் எல்லோருக்கும்பிரகாச(தெரிகிறவ)னல்லன். (யோகமாயையினால் மறைக்கப்பட்டுள்ளதாகிய)மூடமான இவ்வுலகு பிறப்பில்லாதவனும் அழிவில்லாதவனுமாகிய என்னைச் செவ்வையாய் அறியாது. (உரு)

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

[ரு0சு] அர்ஜுனா! யான் கழிந்தனவும் நிகழ்வனவும் வருவனவுமாகிய பூதங்களை அறிவேன். என்னையோ ஒருவனும் அறியான். (உசு)

इच्छाद्वेषसमुत्थेन द्वंद्वमोहेन भारत।
सर्वभूतानि संमोहं सर्गे यांति परंतप ॥ २७ ॥

[ரு0எ] பாரதா! பரந்தபா! சர்வபூதங்களும் உற்பத்திகாலத்தில் இச்சாத்துவேஷங்களால் செவ்வையாய் எழும்பிய துவந்துவமோகத்தினால் நல்ல மோகத்தை யடைகின்றன. (உஎ)

येषां त्वंतगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वंद्वमोहनिर्मुक्ता भजंते मां दृढव्रताः ॥ २८ ॥

[௩௦அ] ஆனால் எந்தப் புண்ணியகர்மமுடைய ஜனங்களுடைய பாவம் நாசத்தை யடைந்திருக்கிறதோ, அவர்கள் துவந்துவமோகத்தினின்றும் விடுபட்டவர்களாய்த் திடவிரதமுடையவர்களாய் என்னை உபாசிக்கின்றார்கள். (உஅ)

जरामरणमोक्षाय मामाश्रित्य यतंति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

[ந௦௯] எவர்கள் ஜராமரண நீங்குதற்பொருட்டு என்னை ஆசிரயித்து முயலுகின்றார்களோ, அவர்கள் அந்த எல்லாமான பிரஹ்மத்தையும் (சங்காதவடிவ) அத்தியாத்மத்தையும், சகலகர்மங்களையும் அறிவர். (உ௯)

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥

[ந௧௦] எவர்கள் அதிபூத அதிதெய்வங்களோடுகூடியவனும், அதியஞ்ஞத்தோடுகூடியவனுமாகிய என்னை அறிகின்றார்

களோ, அந்த என்னிற்பொருந்திய சித்தமுடையோர் பிரயாண(மரண)காலத்திலும் என்னை அறிகின்றார்கள். (௩௦)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु

श्रीकृष्णार्जुनसंवादे

सप्तमोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்

ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்

ஏழாம் அத்தியாயம் முடிந்தது.



॥ अष्टमोऽध्यायः ॥

எட்டாம் அத்தியாயம்.

॥ अक्षर(पर)ब्रह्मयोगः ॥

அக்ஷரப்(பர)பிரஹ்மயோகம்.

॥ अर्जुन उवाच ॥

किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १ ॥

[௲கக] அர்ஜுனன் சொல்லலுற்றான்:-புருஷோத்தமரே! அந்தப்பிரஹ்மம் என்பது யாது? அத்தியாத்மம் என்பது யாது? கர்மம் என்பது யாது? அதிபூதம் என்பது யாது? அதிதெய்வம் என்ன என்று சொல்லப்படுகின்றது. (க)

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥

[௲கஉ] மதுசூதனா! இங்கு(இத்தேகத்தில்) அதியஞ்ஞமென்பது யாது? இத்தேகத்தில் எப்படி இருக்கிறது? பிரயாண (மரண)காலத்தில் அடக்கப்பட்ட மனதுடையவர்களால் எப்படி அறியத்தக்கவராயிருக்கின்றீர்? (உ)

॥ श्रीभगवानुवाच ॥

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

[ந௩௩] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:–(ஓங்காரம் அவ்யக்தமெனும் இரண்டின்) மேலான அக்ஷரம் பிரஹ்மம் எனப்படுகின்றது. சுவபாவம் (பிரஹ்மமாகிய தனது இருப்பு) அத்தியாத்மமாம். பூதவஸ்துவை (ஜீவர்களின் இருப்பை) உண்டுபண்ணுவதான விசர்க்கம் (அக்கினியில் ஹோமத்திரவியம் போடுதலாகிய யஞ்ஞம்) கர்மமென்னும் பெயருடையதாம்.

[அத்தியாத்மம்=ஆத்மாவாகிய தேகமிரண்டனையும் போக்தி ருபோகாயதனத்தன்மையானது அதிகரித்து இருப்பது.] ()

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

[ஙகச] தேகந்தாங்கியவருட்சிரேஷ்டனே! க்ஷரமாகியபாவம் (அழிபொருள்=காரியமாகிய விராட்டு) அதிபூதமாம். புருஷன்(பூர்ணனான இரணியகர்பன்)அதிதெய்வமாம். இங்குத் தேகசமூகத்தில்(விஷ்ணுவாகிய)யானே அதியஞ்ஞமாம். [அதிபூதம்=பிருதிவியாதிகளும் பிராணிமாத்திரங்களுமான பூத

த்தினை அதிகரித்திருப்பது. அதிதெய்வம்=சூரியன் முதலிய தேவதைகளை அதிகரித்து கண்முதலிய இந்திரியங்களை அநுக்கிரகிப்பது. அதியஞ்ஞம்=யஞ்ஞத்தின் அதிஷ்டாதாவும் பலதாதாவும் அபிமானியும்.] (௪)

अंतकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

[ரு-க௫] எவன் கடைசிக்காலத்திலும் என்னையே நினைத்துக்கொண்டு சரீரத்தைவிட்டுச் செல்லுகின்றானோ, அவன் எனது தன்மையை(என் ஸ்வரூபத்தை) அடைகிறான். இதிற்சம்சயமில்லை. (௫)

यं यं वापि स्मरन्भावं त्यजत्यंते कलेवरम् ।
तं तमेवैति कौंतेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

[ஙகசு] கௌந்தேய! எப்பொழுதும் அப்பாவம் பாவிக்கப்பட்டவன் (அவ்விஷ்டதேவதையின் சொரூபத்தில் அல்லது வேறொன்றில் திடபாவனையினாலாகிய வாசனையோடுகூடியவன்) கடைசியில் (முந்திய பழக்கமுதிர்ச்சியால்) எந்த எந்த பாவத்தை (வஸ்துவை) ஸ்மரித்துக்கொண்டு சரீரத்தை விடுகிறானோ, அந்தந்த பாவத்தையே அடைகின்றான். (சு)

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युद्ध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७ ॥

[௩கஎ] அதனுல் எல்லாக்காலங்களிலும் என்னைநினை. யுத்தஞ்செய். என்னிடத்தில் அர்ப்பணஞ்செய்யப்பட்ட மனோபுத்திகளை யுடையவனுய் என்னையே அடைவாய். (இது)சம்சயமின்றியதாம். (எ)

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिंतयन् ॥ ८ ॥

[௩கஅ] பார்த்த! அப்பியாச (இடையின்றிப் பழகுதலாகிய)யோகத்தினுல் அடங்கியதும் வேறொன்றிற்செல்லாததுமானசித்தத்தினுல் தொடர்ந்து சிந்திக்கின்றவனுப் மேலான திவ்யபுருஷனை அடைகின்றுன். (அ)

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिंत्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

[ரு-கசு] எவன் கவியும் (சர்வஞ்ஞனும்), பழைமையானவனும், ஆளுவோனும், (பெரிதிற்கெல்லாம் பெரிதாயிருந்தும்) அணுவிற்கணுவாயுள்ளவனும், எல்லாவற்றையுந்தரித்துள்ளவனும், சிந்திக்கக்கூடாதவடிவினனும், ஆதித்தியநிறத்தின (சூரியனைப்போல் தன்னையும் பிரஹ்மாண்டத்தினையும் விளக்கும் சொப்பிரகாச)னும், அஞ்ஞானவிருளிற்கப்பாற்பட்டவனுமாயுள்ள அவனைத் தொடர்ந்து சிந்திக்கின்றானோ, (கூ)

प्रयाणकाले मनसाऽचलेन भक्त्या युतो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक् स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥ १० ॥

[ஙூ௨௦] அவன் பக்தியோடும் (கரணங்களை யடக்குதலாகிய) யோகபலத்தோடும் கூடியவனாகவே பிரயாண (கடைசிக்) காலத்தில் புருவநடுவில் பிராணனைச் செவ்வையாய் பிரவேசிக்கச்செய்து அசைவின்றிய மனதினால் அந்தத்திவ்ய(சொப்பிரகாச)பரமபுருஷனை அடைகின்றான். (௧௦)

यदक्षरं वेदविदो वदंति विशंति यद्यतयो वीतरागाः ।
यदिच्छंतो ब्रह्मचर्यं चरंति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥ ११ ॥

[நஉக] வேதமுணர்ந்தவர் எந்த அக்ஷரத்தினை உபதேசிக்கின்றனரோ, இராகமொழிந்த யதிகள் எதிற்பிரவேசிக்கின்றார்களோ, எதனை (அறிய) விரும்பியவர்களாய்ப் பிரஹ்மசரியத்தினை ஆசரிக்கின்றார்களோ, அந்தப்பதத்தினை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன். (கக)

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥

[நஉஉ] எவன் எல்லாத் துவாரங்களையும் தடுத்து மனதை இருதயத்தில் நிரோதித்துப் பிராணனை உச்சியில்வைத்து ஆத்மாவின் யோகதாரணையில் நிலைத்தவனாய், (கஉ)

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमांगतिम् ॥ १३ ॥

[கூஉகூ] எவன் ஓம் என்று ஏகாக்ஷரமான மந்திரத்தினை உச்சரித்துக்கொண்டு என்னையிடைவிடாது சிந்திக்கின்றவனுய்த் தேகத்தைவிட்டுச் செல்லுகின்றானே, அவன் பரமமான கதியை அடைகின்றான். (கங)

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

[கூஉக] பார்த்தா! எவன்வேறுசித்தமில்லாதவனுய் இடைவிடாது எப்போதும் என்னை நினைக்கின்றானே, அந்த எப்போ

தும் சிந்திக்கும் யோகிக்கு யான் சுலபன் (எளிதிற்பெறற்குரியவன்). (கச)

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवंति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

[கூஉரு] என்னை அடைந்து மேலான நற்சித்தி(முத்தி)யை அடைந்த மகாத்துமாக்கள் மறுபடியும் துக்காலயமும் சாசுவதமல்லாததுமான பிறப்பினை அடையார்கள். (கரு)

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौंतेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

[௲உகா] அர்ஜுனா! பிரஹ்மலோகத்தொடக்கமான லோகங்கள் மறுபடியும் திரும்பிவருமியல்பினவாம். குந்திபுத்திரா! என்னை அடைந்தோ (அடைவதனால் அவர்கட்கு) மறுபடியும் பிறப்பது இருப்பதில்லை. (கசா)

सहस्रयुगपर्यंतमहर्यद्ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रां तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

[௲உஎ] எவர்கள் ஆயிரயுகபரியந்தமான பிரஹ்மாவின் பகலையும், ஆயிரயுகபரியந்தமான இராத்திரியையும் அறிகின்றார்களோ, அந்த ஜனங்கள் இராப்பகலுணர்ந்தவராவர். (கஎ)

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवंत्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयंते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

[௬உஅ] பகல் வரும்போது அவ்வியக்தத்தினின்றும் சகல வியக்தி(வடிவங்)களும் உண்டாகின்றன. இரவு வரும்போது அங்கு அவ்வியக்தமென்னும் பெயருடைய அதன் கண்ணே யே ஒடுங்குகின்றன. (கஅ)

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

[௬உக] பார்த்த! அதே இந்தப்பூதக்கிராமம்(ஜீவசமூகம்)வசமில்லா (அவித்தியாகாமகர்மங்களின்வசத்) ததாய்(பிரஹ்மா

வின்)பகல்வரும்போது உண்டாகி உண்டாகி, இரவுவருங்கால் ஒடுங்குகின்றது. (மறுபடியும் பகல்வரும்பொழுது) வெளிப்படுகின்றது. (௧௯)

परस्तस्मात्तु भावोऽन्यो व्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥

[௩௩௦] எது பாவமோ (பரமார்த்த இருப்போ), அந்த (மாயாரூப)அவ்வியக்தத்தினினும் மேலான வேறு அவ்வியக்தமாகிய சநாதனமோ (அநாதியோ), அது எல்லாப்பூதங்களும் நசிக்குங்காலத்தும் நசிக்கிறதில்லை. (௨௰)

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तंते तद्धाम परमं मम ॥ २१ ॥

[௩௩க] அவ்வியக்தம் (இந்திரியாதிகட்கு விஷயமாகாத பரமாத்மா) அக்ஷரமென்று சொல்லப்பட்டுளது. அதனைப் பரமகதியென்று கூறுவர். எதனை அடைந்து நிவிருத்தியாகா(திரும்பா)ர்க்ளோ அது என்னுடைய மேலான தாம (நிஜசொரூப) மாம். (உக)

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यांतःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥ २२ ॥

[௯௯உ] பார்த்த! எவனுக்குப் பூதங்கள் உள்ளிருப்பனவாகின்றனவோ, எவனால் இவ்வெல்லாம்வியாபிக்கப்பட்டுளவோ, அந்தப் பரமபுருஷன் வேற்றுமையில்லாத பக்தியினாலேயே அடையத்தக்கவனாவன். (உஉ)

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः।
प्रयाता यांति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

[௯௯௯] பரதசிரேஷ்டனே! எந்தக்காலத்தில் (எக்காலாபிமானி தேவதையோடுகூடிய மார்க்கத்தில்) தேகத்தைவிட்டுச் சென்ற யோகிகள் திரும்பிவராமையையும் திரும்பிவருதலையும் அடையவே செய்கின்றார்களோ அந்தக்காலத்தைச் சொல்லுகிறேன். (உ௯)

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छंति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

[௩௩௪] ஜோதி(மயமான)அக்கினி(யபிமானிதேவதை), பகல்(அபிமானிதேவதை), சுக்கிலம் (சுக்கிலபக்ஷாபிமானிதேவதை), ஆறுமாதவளவுள்ள உத்தராயணம்(அபிமானிதேவதை) என்னும் அதில் தேகத்தைவிட்டுசென்ற பிரஹ்மவித்துக்களாகிய ஜனங்கள் பிரஹ்மத்தை அடைகின்றார்கள். (உ௪)

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चांद्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

[௫௫] தூமம் (புகையபிமானிதேவதை) இராத்திரி (இரவின் அபிமானிதேவதை) அப்படியே கிருஷ்ணம் (கிருஷ்ணபக்ஷாபிமானிதேவதை) ஆறுமாதஅளவுள்ள தக்ஷிணாயனம் (தக்ஷிணாயனாபிமானதேவதை) என்னும் அதில் (சென்ற) யோகி சந்திரலோகசம்பந்தியான ஜோதியை அடைந்து நீங்குகின்றான். (உ௫)

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययाऽऽवर्तते पुनः ॥ २६ ॥

[௫௬] பிரசித்த சுக்கிலகிருஷ்ணங்களான இவ்விரண்டுகதிகளும் ஜகத்திற்குச் சாசுவதமானவையென்று மதிக்கப்பட்

டிருக்கின்றன. ஒன்றினால் திரும்பிவராமையை அடைகின்றான். மற்றதனால் மறுபடியும் திரும்புகிறான். (உ௬)

नैते सृती पार्थ जानन् योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

[௲௨௭] பார்த்த! இவ்விரண்டுமார்க்கங்களையும் அறிகின்ற எந்த யோகியும் மோகியான். ஆதலால் அர்ஜுனா! எல்லாக்காலங்களிலும் யோகத்தோடு கூடியவனாவாய், (உ௭)

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥२८॥

[௲௨௮] வேதங்களிலும், யஞ்ஞங்களிலும், தவசுகளிலும்,

தானங்களிலுமே எந்தப்புண்ணியபலன் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அந்த இவ்வெல்லாவற்றையும்அறிந்து யோகிகடக்கின்றான்; மேலான முதன்மையதாகிய ஸ்தானத்தையும் அடைகிறான். (உ௮)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
अष्टमोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
எட்டாம் அத்தியாயம் முடிந்தது.

## || नवमोऽध्यायः ||

ஒன்பதாம் அத்தியாயம்.

## || राजविद्याराजगुह्ययोगः ||

இராஜவித்யாராஜகுஹ்யயோகம்.



|| श्रीभगवानुवाच ||

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

[௩௩௯] ஸ்ரீபகவான் சொல்லலாயினர்:—எதனையறிந்து அசுபத்தினின்று விடுபடுவாயோ(அப்படிப்பட்ட)இந்த மிகாகசியமும், விஞ்ஞானத்தோடுகூடியதுமான ஞானத்தினை அசூயையின்றிய உனக்குச் சொல்லுவேன். (க)

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

[௩௪௦] இது இராஜவித்தையும் (வித்தைகளுட்சிறந்ததும்) இராஜரகசியமு (இரகசியங்களுட்சிறந்தது)மான உத்தமமாம்; பவித்திரமாம்(புனிதமாக்குவதாம்). பிரத்தியக்ஷமாயறிவதும்,

தர்மத்தோடுகூடியதும், செய்தற்கெளியதும், அவ்வியயமு(அழிவின்றியது)மாம். (உ)

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

[ந-சக] பரந்தப! இந்தத் தர்மத்தின் சிரத்தையில்லாத புருஷர்கள் என்னையடையாது மரணமயமான சம்ஸாரமார்க்கத்தில் செல்லுகின்றார்கள். (ந)

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥

[ஙசஉ] அவ்வியக்தமூர்த்தியாகிய (வெளிப்படாதவடிவமுள்ள) என்னால் இவ்வெல்லா ஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. எல்லாப்பூதங்களும் என்னிடத்திருப்பனவாம். யான் அவற்றின்கண் இருப்பவனல்லன். (ச)

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥

[ஙசங] பூதங்கள் என்னிடத்திருப்பனவன்று. எனதுஈசுவரசம்பந்தியோகத்தினைப்பார். என் ஆத்மா (சொரூபம்) பூதங்களைத் தாங்குவதும், பூதங்களை யுண்டுபண்ணுவதுமாம்; பூதங்களிலிருப்பதன்று. (ரு)

यथाऽऽकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान्।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

[ஈசச] எங்குஞ்செல்லுவதான பெருத்தவாயு எப்படி எப்பொழுதும் ஆகாயத்தில் (அசங்கமாய்) இருப்பதாகின்றதோ, அப்படியே சகலபூதங்களும் என்னிடத்திருப்பனவாகின்றன என்று நிச்சயஞ்செய். (சா)

सर्वभूतानि कौंतेय प्रकृतिं यांति मामिकाम्।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥

[ஈசரு] கௌந்தேயா! கற்பக்ஷய (மகாப்பிரளய) த்தில் சர்வ

பூதங்களும்எனது (அபரா) பிரகிருதியை அடைகிறார்கள். ம
றுபடியும் கற்பத்தின் ஆதியில் யான் அவற்றைவிசேஷமாய் சி
ருஷ்டிக்கிறேன். (எ)

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

[ருசகு] (யான்) எனது (மாயாரூப அபரா) பிரகிருதியை ஆ
சிரயித்து (பூர்வ அதிருஷ்டமும் வாசனுமயமுமான) பிரகிருதியி
ன் வசத்தால் வசமில்லாத இவ்வெல்லாப்பூதசமூகங்களையும் ம
றுபடியும் மறுபடியும் நாநாவாகப் படைக்கின்றேன். (அ)

न च मां तानि कर्माणि निबध्नंति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

[௩௬௭] தனஞ்சய! விருப்புவெருப்பில்லாதவனைப்போலி ருப்பவனும், அக்கர்மங்களில்பற்றில்லாதவனுமாகிய என்னை அக்கர்மங்கள் கட்டுவதில்லை. (௯)

मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनाऽनेन कौंतेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

[௩௬௮] கௌந்தேய! நடத்தும்தலைவனை என்னால் பிரகி ருதியானது, சரத்தையும் அசரத்தையும் உண்டாக்குகின்றது.

நிமித்தவடிவ இந்தக்காரணத்தால் ஜகத்து நாநாவிதமாக மாறி மாறி வருகின்றது. (க0)

अवजानंति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानंतो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

[ந-ககூ] மூடர்கள் பூதங்களுக்கு மகேசுவர (அதிஷ்டான) மான எனதுமேலான சொரூபத்தை அறியாதவர்களாய் மனுஷிய சம்பந்தமானசரீரத்தை ஆசிரயித்துள்ள என்னை அநாதரஞ் செய்கின்றார்கள். (கக)

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

[௩௫௦] (அவர்கள்) வியர்த்தமான ஆசையுடையவர்களும் வீணைகர்மமுடையவர்களும் வியர்த்தமானஞானமுடையவர் களும் விவேகமில்லாதவர்களுமாய் இராக்ஷஸர்களதும் (தமோ குணப் பிரதானமும்) அசுரர்களதும் (இரஜோகுணப்பிரதான மும்) மோகிக்கச்செய்வதுமாகிய பிரகிருதியி(பூர்வவாசனுமய சுபாவத்தி)ஜீனயே ஆசிரயித்தவர்களாயிருக்கின்றனர். (௧௨)

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः।
भजंत्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

[௩௫௧] பார்த்த! தெய்வப்பிரகிருதியை (சத்வகுணப்பிர தானதேவர்களதையொத்த சுபாவத்தை) ஆசிரயித்தவர்களும்

அந்நியமன தில்லாதவர்களுமாகிய மகாத்துமாக்களோ என்னைப் பூதகாரணனும் அவ்வியயனுமாக அறிந்து பஜிக்கின்றார்கள்.

सततं कीर्तयंतो मां यतंतश्च दृढव्रताः ।
नमस्यंतश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

[ருடுஉ] (சிலர்) நிரந்தரம் என்னைக் கீர்த்திப்பவர்களாயும் (சாக்ஷாத்காரத்தின்பொருட்டு) யத்தனஞ் செய்பவர்களாயும், (பிரஹ்மசர்யாதி) திடவிரதமுடையவர்களாயும், பக்தியோடு என்னை வணங்குகிறவர்களாயும், நித்தியசமாதியுடையவர்களாயும் உபாசிக்கின்றார்கள். (கச)

ज्ञानयज्ञेन चाप्यन्ये यजंतो मामुपासते ।
एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥

[௩௰௩] பிறர் (ஞானநிஷ்டர்) ஞானயஞ்ஞத்தினால் யஜிக்கின்றவர்கள் (சிலர்) ஒருமையாகவும் (சிலர்) வேற்றுமையாகவும் (சிலர்) வெகுவிதமாக எப்புறத்தும் முகமுடையவனாகவும் என்னை உபாசிக்கின்றார்கள். (கரு)

अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।
मंत्रोहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

[௩௰௪] யான் (வேதத்திற் சொல்லப்பட்ட) யாகம். யானே (ஸ்மிருதியிற் சொல்லப்பட்ட) யஞ்ஞம். யான் ஸ்வதா (பிதிருக்

களின் அந்நம்). யான் ஔஷதம்(மனிதர்களின் அந்நம்), யான் மந்திரம், யான் ஆச்சியம்(நெய்முதலிய அவி), யான் அக்கினி, யான் ஓமஞ்செய்யப்பட்ட திரவியம். (௧௬)

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोंकार ऋक् साम यजुरेव च ॥ १७ ॥

[௩௫௫] இச்சகத்தின் பிதாவும் மாதாவும் தாதாவும்(தாங்குவோனும்), பிதாமகனும், அறியப்படுபொருளும், பவித்திரமும்(புனிதமாக்கும்பொருளும்), ஓங்காரமும், ருக்கும், சாமமும், யஜுஸும் (யானே). (௧௭)

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

[கூடுகூ] கதியும் (கர்மபலனும்), பர்த்தாவு(போஷகனு)ம், பிரபுவும் (ஸ்வாமியும்), சாக்ஷியும், இருப்பிடமும், புகலும், உபகாரியும், படைப்பவனும், அழிப்பவனும், நிலையும், ஒடுங்குமிடமும், அவ்வியயனும், வித்தும் (யானே). (கஅ)

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

[கூடுள] அர்ஜுனா! யானே காய்கின்றேன். யான் மழையை

த் தடுக்கின்றேன், விடுகிறேன். அமிருதமும் மரணமும் சத்தும் (காரியமும்) அசத்தும் (காரணமும்) யான். (கக)

त्रैविद्या मां सोमपा पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयंते ।
ते पुण्यमासाद्य सुरेंद्रलोकमश्नंति दिव्यान्दिवि देवभोगान् ॥२०॥

[ந-ரு-அ] மூவேதமுணர்ந்தவர் யஞ்ஞங்களினாலே என்னைப்பூஜித்து சோமரஸம் பருகுவோராய்ப் பாபத்தினின்றும் பரிசுத்தராய் ஸ்வர்க்ககதியை மிகவிரும்புகின்றனர் அவர்கள் புண்ணியமான தேவேந்திரலோகத்தை அடைந்து சுவர்க்கத்தில் திவ்யமான தேவபோகங்களைப் புசிக்கின்றனர். (உ0)

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशंति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभंते ॥ २१ ॥

[ரு௫கூ] அவர்கள் அந்த விசாலமான ஸ்வர்க்கலோகத்தைப்புசித்து புண்ணியம் குறைந்தபோது மனுஷ்யலோகத்தை யடைகின்றனர். இவ்வாறு மூன்றுவேதங்களின் தர்மத்தினை அநுசரித்தவர்கள் விஷயவிருப்பமுடையோராய்ப் போக்குவரத்தினை அடைகின்றனர். (உக)

अनन्याश्चितयंतो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

[௩௬௦] எந்தஜனங்கள் அந்நியமில்லாதவர்களாக என்னைச் சிந்திக்கின்றவர்களாய்ச் செவ்வையாய் உபதேசிக்கின்றார்களோ, நித்தியமும் நிரந்தரமும் யோகத்தோடுகூடியவர்களான அவர்களது யோகக்ஷேமத்தை யான் வகிக்கிறேன். [பெறாததைப்பெறுவித்தல் யோகம் அதனைக்காத்தல் க்ஷேமம்.] (௨௨)

येऽप्यन्यदेवताभक्ता यजंते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौंतेय यजंत्यविधिपूर्वकम् ॥ २३ ॥

[௩௬௧] கௌந்தேய! எவர்கள் அந்நியதேவதாபக்தர்களாயி

னும், சிரத்தையோடுகூடியவர்களாய் யஜிக்கின்றார்களோ அவர்களும் விதியின்மையோடு (அஞ்ஞானத்தோடு) என்னையேயஜிக்கின்றனர். (உங)

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानंति तत्त्वेनातश्च्यवंति ते ॥ २४ ॥

[ஙசூஉ] சர்வயஞ்ஞங்களுக்கும் போக்தாவும் பிரபுவும் யானே. எதனால் என்னை உண்மையாக அறியார்களோ அதனால் அவர்கள் நழுவுகின்றார்கள். (உச)

यांति देवव्रता देवान् पितॄन्यांति पितृव्रताः ।
भूतानि यांति भूतज्या यांति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥

[ரூ-சு-ரூ] தேவவிரதமுடையோர் தேவர்களை அடைகின்றனர். பிதிருவிரதமுடையோர் பிதிருக்களையடைகின்றனர். பூதங்களை பூஜிப்பவர் பூதங்களை யடைகின்றனர். என்னை யஜிப்பவர் என்னையே அடைகின்றனர். (உ௫)

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥

[௩௬௪] எவன் எனக்குப் பக்தியோடு பத்திரம் புஷ்பம் பழம் ஜலம் என்பவற்றைக் கொடுக்கின்றானோ அந்த அடங்கிய மனதுடையவனது பக்தியோடு கொடுக்கப்பட்ட அதனை யான் புசிக்கின்றேன். (உசு)

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौंतेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥

[௩௬௫] குந்திபுத்திரா! எதனைச் செய்கின்றாயோ, எதனைப்புசிக்கின்றாயோ, எதனை ஓமிக்கின்றாயோ, எதனைக் கொடுக்கின்றாயோ, எத்தபத்தைச் செய்கின்றாயோ, அதனை எனக்கு அர்ப்பணம்செய். (உஎ)

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबंधनैः।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥

[ந-கா-கா] சுபாசுபபலமுடைய கர்மபந்தங்களினின்றும் இவ்வாறு விடுபடுவாய். சந்நியாசயோகத்தோடுகூடிய சித்தமுடையவனாய்(கர்மபந்தத்தினின்று)விசேஷமாய் விடுபட்டவனாய் என்னைவந்தடைவாய். (உ௮)

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः।
ये भजंति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥ २९॥

[௩௯௭] யான் எல்லாப் பூதங்களிடத்தும் சமன். எனக்குத் துவேஷிக்கத்தக்கவனுமில்லை; பிரியமுள்ளவனுமில்லை. ஆனால் எவர்கள் என்னைப் பக்தியோடு பஜிக்கின்றார்களோ, அவர்கள் என்னிடத்திலிருக்கிறார்கள். யானும் அவர்களிடத்திலிருக்கி றேன். (உ௯)

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मंतव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

[௩௯௮] மிகத்தீயவொழுக்கத்தினனாயினும், அநந்நியபக்த

ஞய் என்னைப் பஜிப்பானுயின், அவன் சாது (சதாசாரமுடையவன்) என்றே மதிக்கத்தக்கவன். எதனுலெனின், அவன் செவ்வையான நிச்சயத்தை யடைந்தவன். (௩௰)

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छांतिं निगच्छति ।
कौंतेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

[௩௰௧] (அவன்) விரைவில் தர்மாத்மாவாகின்ருன். நிலையான சாந்தியை அடைகிருன். கௌந்தேய! என்னுடைய பக்தன் நாசமாகான். என்று பிரதிஞ்ஞை செய் (உறுதிமொழி கூறு). (௩௧)

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यांति परां गतिम् ॥ ३२ ॥

[கூஎ０] *பார்த்த! ஸ்திரீகளும், வைசியர்களும், அவ்வாறே சூத்திரர்களும் பாபயோனியிற் பிறந்தவர்கள் எவர்களாயிருக்கினும், அவர்களும் என்னை ஆசிரயித்து மேலானகதியை அடைகின்றனர்.* (கூ௨)

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

[கூஙக] என்றால் புண்ணியவான்களும் பக்தர்களுமாகிய பிராஹ்மணர்களும் அப்படியே இராஜரிஷிகளும் முக்தியடைவாரென்பதில் என்னசொல்லவேண்டும்? இந்த அநித்தியமும் அசுபமுமான(பெறுதற்கரிய) இவ்வுலகத்தை அடைந்து என்னைப்பஜிப்பாயாக. (கூகூ)

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥

[கூஎ௨] என்னிடத்து மனமுடையவனும் என் பக்தனும் என்னையஜிப்பவனுமாவாய். என்னை நமஸ்கரி. இவ்வாறு என்

னையே பரகதியா யுடையவனைய் ஆத்மாவை(மனதை என்னி டம்)சேர்த்து என்னையே அடைவாய். (௩௪)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
नवमोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
ஒன்பதாம் அத்தியாயம் முடிந்தது.



## ॥ दशमोऽध्यायः ॥

## பத்தாம் அத்தியாயம்.

## ॥ विभूतियोगः ॥

## விபூதியோகம்.



॥ श्रीभगवानुवाच ॥

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहंप्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

[௩௭௩] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:—மகாபாகுவே! ம ஹபடியும் யான் பிரியப்படும் உனக்கு இத(நல)த்தைவிரும்பி எதனைச் சொல்லுவேனோ(அந்த)என்னுடைய மேலான வச னத்தைக்கேள். (க)

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

[௩௭௪] என்னுடைய பிரபாவத்தைத் தேவகணங்களும் அ றியார்; மகரிஷிகளும் அறியார். எதனாலெனின், யான் தேவர் களுக்கும் மகரிஷிகளுக்கும் எவ்விதத்தாலும் முதன்மையான வன். (உ)

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम्।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

[ந-எடு] எவன் என்னை பிறப்பில்லாதவனும் காரண மில்லாதவனும் உலகங்கட்கெல்லாம் மகேசுவரனுமாக அறிகின்றானோ, அவன் மனிதர்களுள் மூடர்களினும்வேறானவன்(ஞானி); சகல பாபங்களினின்றும் விடுபடுகின்றான். (ந)

बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवो भावो भयं चाभयमेव च ॥ ४ ॥

अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवंति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

[ஙஎசு—ஙஎஎ] விவேகம், ஞானம், மோகமின்மை, க்ஷமை, சத்தியம், தமம், சமம், சுகம், துக்கம், பிறப்பு, இறப்பு, பயம், அபயம்(பயமின்மை), அஹிம்ஸை, சமத்துவம், சந்தோஷம், தபம், தானம், கீர்த்தி, அபகீர்த்தியென்னும் வெவ்வேறுவிதமானதன்மைகள் பிராணிகளுக்கு என்னிடத்திலிருந்தே உண்டாகின்றன. (௪-௫)

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजा ॥ ६ ॥

[௩எஅ] உலகத்தில் இப்பிரஜைகள் எவர்களுடைய சிருஷ்டியாயிருக்கிறார்களோ அந்த முன்னவர்களாகிய சப்தமகரிஷிகளும் அப்படியே நான்கு மனுக்களும் மனதினின்றுமுண்டானவர்கள். அதனால் என் சொரூபமாயிருக்கின்றனர். (சு)

एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकंपेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥

[௩எகூ] எவன் என்னுடைய இந்த விபூதியை(சர்வாத்மரூபவிஸ்தாரத்தை)யும் யோக(சர்வஞ்ஞத்வாதிசாமர்த்திய)த்தையும் உண்மையாக அறிகின்றானோ, அவன் அசைவின்றியயோ

க(ஞான)த்தினல் கூடுகின்றான். இதில் சம்சயமில்லை. (எ)

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजंते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

[ரு-அ௦] யான் எல்லாவற்றிற்கும் உபாதானகாரணன். என்னிடத்திலிருந்து யாவும் பிரவர்த்திக்கின்றன என்று கருதி அறிஞர் பாவத்தோடு(பாவனையோடு)செவ்வேகூடியவர்களாய் என்னைப் பஜிக்கின்றனர். (அ)

मच्चित्ता मद्गतप्राणा बोधयंतः परस्परम् ।
कथयंतश्च मां नित्यं तुष्यंति च रमंति च ॥ ९ ॥

[௩-அக] என்னிடத்துச்சித்தமுடையவர்களாய், என்னில்தற்பரமான(சக்ஷுமுதலிய)பிராணனு(கரணவொடுக்கமு)டையவர்களாய், நித்தியம் என்னை ஒருவருக்கொருவர் போதிப்பவராய், பேசுகின்றவராய்ச் சந்தோஷிக்கின்றார்கள்; இரமிக்கின்றார்கள். (௯)

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

[௩-அஉ] எப்போதும் யோகமுடையவர்களும் பிரீதியோடு பஜிக்கின்றவர்களுமாகிய அவர்களுக்கு எதனால் அவர்கள் எ

ன்னை அடைவார்களோ அந்தப் புத்தியோகத்தினைக் கொடுக்கிறேன். (க0)

तेषामेवानुकंपार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

[ந-அ-ந] அவர்களுடைய இரக்கத்தின்பொருட்டே (அவர்களது) ஆத்மபாவத்திலிருப்பவனாகிய யான் பிரகாசமுடைய ஞானதீபத்தினால் அஞ்ஞானத்தினாற் றோன்றிய இருளினைக் கெடுக்கின்றேன். (கக)

॥ अर्जुन उवाच ॥

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥

[௲அச-௲அரு] அர்ஜுனன் சொல்லலாயினன்:—தாம் மேலான பிரஹ்மம், பரந்தாமர், பரமபவித்திரர், சாசுவதர், திவ்வியர், ஆதிதேவர், அஜர், விபு, புருஷன்(பூர்ணன்)என்று தம்மை எல்லா ரிஷிகளும் அப்படியே தேவரிஷியாகிய நாரத

ரும், அஸிதரும், தேவலரும், வியாஸரும் சொல்லுகிறார்கள். (அவ்வாறே)தாமும் எனக்குச் சொல்லுகிறீர். (கஉ-கங)

सर्वमेतदृतं मन्ये यन्मां वदासि केशव ।
नहि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४॥

[ந-அசு] கேசவரே! எனக்கு எதைச் சொல்லுகிறீரோ, இதுமுழுவதும் சத்தியமென்று எண்ணுகிறேன். எதனாலெனின், பகவானே! தம்முடைய வியக்தியைத் தேவர்கள் அறியார்கள்; தானவர்கள் அறியார்கள். (கச)

स्वयमेवात्मनाऽऽत्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५॥

[ந-அள] புருஷோத்தமரே! பூதங்களையுண்டு பண்ணினவரே! பூதேசரே! தேவதேவரே! ஜகத்பதியே! தாமாகவே நீர் ஆத்மாவினால்(தன்னால்)ஆத்மாவை(தன்னை)அறிகின்றீர். (கூ)

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥

[ந-அஅ] எந்த விபூதிகளினால் தாம் இவ்வுலகங்களை வியாபித்து நிற்கின்றீரோ, அந்தத் திவ்விய(அலௌகிக)மான தம்

முடைய விபூதிகள் முழுவதையும் அருளிச்செய்வீராக.(௧௬)

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिंतयन् ।
केषु केषु च भावेषु चिंत्योऽसि भगवन्मया ॥ १७ ॥

[ரு-அகு] யோகமுடையவரே! யான் எப்போதும் விடாது சிந்திக்கின்றவனாய்த் தம்மை எவ்வாறு அறிவேன்? பகவானே! எந்தெந்தப் பதார்த்தங்களில் என்னால் சிந்திக்கத்தக்கவராயிருக்கின்றீர். (௧௭)

विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥ १८ ॥

[ந௱கூ0] ஜனார்த்தனரே! தம்முடைய யோகத்தினையும் விபூதியினையும் மறுபடியும் விஸ்தாரமாகத் திருவாய்மலர்ந்தருள்வீராக. எதனாலெனின், அமிர்தத்தைக்கேட்கும் எனக்குத் திருப்தியில்லை. (கஅ)

॥ श्रीभगवानुवाच ॥

हंत ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यंतो विस्तरस्य मे ॥ १९॥

[ந௱கூக] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:—குருசிரேஷ்டா! திவ்வியமாகிய எனது விபூதிகளை இப்போது உனக்குப் பிரதா

னத்தன்மையாகக் கூறுவேன். என்னுடைய விபூதிகளின் விஸ்தாரத்திற்கு எல்லையில்லை. (கசு)

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामंत एव च ॥ २० ॥

[சு௨௦] குடாகேச! சகல பூதங்களின் இருதயத்திருப்பு ஆத்மா யான். யானேபூதங்களுக்கு ஆதி(உற்பத்திகாரணன்), மத்தி(ஸ்திதிகாரணன்), அந்தம்(லயகாரணன்). (௨௦)

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

[௩௧௩] சூரியர்களுள் விஷ்ணு யான். ஜோதிகளுள் கிரணங்களையுடைய சூரியன் யான். வாயுக்களுள்(ஆவன் பிரவன்முதலிய மருத்துக்கள் எழுவருள்)மரீசி யான். நக்ஷத்திரங்களுள் சந்திரன் யான். (உக)

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इंद्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२॥

[௩௧௪] (யான்) வேதங்களுள் சாமவேதமாயிருக்கிறேன். தேவர்களுள் இந்திரனாயிருக்கிறேன். இந்திரியங்களுள் மனமாயிருக்கிறேன். பூதங்(ஜீவர்)களுள் சேதனையா(அறிவா)யி

ருக்கிறேன். (உஉ)

रुद्राणां शंकरश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥

[௩௲௫] ருத்திரர்களுள் சங்கரனாயிருக்கிறேன். இயக்கரி ராக்கதருள் குபேரன். வசுக்களுள் பாவகனு(அக்னியா)யிருக்கிறேன். பர்வதங்களுள் மேரு யான். (உ௩)

पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कंदः सरसामस्मि सागरः ॥ २४ ॥

[௩௲௬] பார்த்தா! புரோகிதர்களுள் முக்கியமான பிருகஸ்

பதியாக என்னை அறி. சேனாதிபதிகளுள் ஸ்கந்தர் யான். ஏரிகளுள் சாகரமாயிருக்கின்றேன். (உ௪)

महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥

[௩௬௭] மகரிஷிகளுள் பிருகு யான். வாக்குகளுள் ஏகாக்ஷர(பிரணவ) மாயிருக்கிறேன். யஞ்ஞங்களுள் ஜபயஞ்ஞமாயிருக்கிறேன். ஸ்தாவரங்களுள் (மலையானவற்றுள்) இமாலயம் யான். (உ௫)

अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गंधर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥

[ந-கூ-அ] விருக்ஷங்களுள் அரசும், தேவரிஷிகளுள் நாரதரும், கந்தர்வர்களுள் சித்திரரதனும், சித்தர்களுள் கபிலமுனிவரும் யான். (உகூ)

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥

[ந-கூக] குதிரைகளுள் அமிர்தத்தோடுண்டாகிய உச்சைசிரவஸமென்னும் குதிரையாக என்னை அறி. கஜேந்திரங்களுள்

ஐராவதமும், நரர்களுள் நராதிபனும் யான். (உ௭)

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कंदर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

[௬00] ஆயுதங்களுள் வஜ்ஜிராயுதம் யான். தேனுக்களுள் காமதேனுவா யிருக்கிறேன். பிரஜோற்பத்திமாத்திரத்திற்கு ஏதுவான கந்தர்ப்ப(மன்மத)னையிருக்கிறேன். சர்ப்பங்களுள் வாசுகியாயிருக்கிறேன். (உ௮)

अनंतश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

[௪0௯] நாகங்களுள் அநந்தன்(சேஷன்)யான். ஜலசரங்களு
ள் வருணனும் (அக்னிஷ்வாத்தாமுதலிய) பிதிர்க்களுள் அர்ய
மாவுமா யிருக்கிறேன். தண்டஞ்செய்பவருள் இயமன் யான்.

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेंद्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

[௪0௨] தைத்தியர்களுள் பிரகலாதன் யான். கணக்கர்களு
ள் காலன் யான். மிருகங்களுள் மிருகேந்திரன்(சிங்கம்)யான்.
பக்ஷிகளுள் கருடன் யான். (௩0)

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

[௩௰௫] பரிசுத்தஞ்செய்பவர்களுள் பவனம்(வாயு)யான். ஆயுதந்தரித்தவர்களுள் இராமனும், மீன்களுள் மகரமுமாயிருக்கிறேன். ஆறுகளுள் கங்கை யான். (௫௧)

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥

[௩௰௬] அர்ஜுனனே! சிருஷ்டிகளின் ஆதியும், நடுவும், அந்த

மும் யானே. வித்தைகளுள் அத்தியாத்மவித்தையும், வாதஞ் செய்பவர்களுள் வாதமும் யான். (௩உ)

अक्षराणामकारोऽस्मि द्वंद्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताऽहं विश्वतोमुखः ॥ ३३ ॥

[சூ௦ரு] அக்ஷரங்களுள் அகாரம் யான். சமாஸங்க(தொகைச்சொற்க)ளுள் துவந்துவசமாஸம்(உம்மைத்தொகை)யானே. (காலங்களுள்)அக்ஷயகாலன் யான். தாதாக்(கர்மபலவிதானஞ் செய்பவர்)களுள் எங்குமுகமுள்ளவன் யான். (௩௩)

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४ ॥

[௬0௬] (சங்கரிப்பவர்களுள்) எல்லாவற்றையும் கெடுக்கும் மிருத்தியு (சங்காரகர்த்தா) யான். ஆனவற்றுள் ஆக்கம் யான். ஸ்திரீகளுள் கீர்த்தி, ஸ்ரீ, வாக்கு, ஸ்மிருதி, மேதை (தாரணசக்தி), திருதி (தைரியம்), க்ஷமை யான். (௩௪)

बृहत्साम तथा साम्नां गायत्री छंदसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

[௬0௭] ஸாமங்களில் பிருகத்ஸாமமும் அப்படியே சந்தசு

களில் காயத்திரியும் யான். மாஸங்களில் மார்கழி யான். இரு துக்களில் வசந்தருது யான். (௩௫)

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

[சூஅ] வஞ்சர்களில் சூது யான். தேஜசுள்ளவர்களில் தேஜசும், (ஜயமுள்ளவர்களில்)ஜயமும் யான். (முயற்சியுடையவரிடத்தில்)முயற்சி யான். சத்துவ(குணம் பல)முள்ளவர்களில் சத்துவம் யான். (௩௬)

वृष्णीनां वासुदेवोऽस्मि पांडवानां धनंजयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कवीः ॥ ३७ ॥

[௩௦௬] யாதவர்களில் வாசுதேவன் யான். பாண்டவர்களில் தனஞ்செயனும் யான். முனிகளில் வியாஸர் யான். கவிகளில் சுக்கிராசாரியரென்னும் கவி யான். (௩௭)

दंडो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥

[௩௧௦] தண்டஞ்செய்பவர்களில் தண்டம் யான். வெற்றிவிருப்பமுள்ளவர்களில் நீதி யான். இரகசியவஸ்துக்களில் மௌன

னமே யான். ஞானமுடையவர்களில் ஞானம் யான். (௩அ)

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९ ॥

[சகக] அர்ஜுனா! எது சர்வபூதங்களுக்கும் பீஜமோ அது வும் யான். என்னையின்றி எந்தச்சராசரபூதமிருக்கிறதோ அது என்னையின்றி இல்லை. (௩௯)

नांतोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥

[சகஉ] பரந்தபா! எனது திவ்யமான விபூதிகளுக்கு அளவி

லலை. ஆனால் இந்த விபூதியின் விஸ்தாரம் என்றால் உத்தேச(ஏ
கதேச)மாகச் சொல்லப்பட்டது. (௪0)

यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा।
तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥ ४१ ॥

[௪௧.] எந்த எந்த சத்துவம்(வஸ்து)ஐசுவரியமுடையதா
யும் திருவுடையதாயும் உயர்ந்ததாயுமேயிருக்கின்றதோ அத
தனை நீ என்னுடைய தேஜோஅம்சத்தினின்றுண்டாகியதா
கவே அறி. (௪௧)

अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥

[சஉச] அல்லது அர்ஜுனா! வெகுவிதமான அறியப்பட்ட இதனால் உனக்கு என்ன பிரயோஜனம்? இச்சகத்துமுழுவதையும் யான் ஒரு அம்சத்தினால் தாங்கி நிற்கின்றேன். (சஉ)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
॥ दशमोऽध्यायः ॥

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
பத்தாம் அத்தியாயம் முடிந்தது.

## ॥ एकादशोऽध्यायः ॥

## பதினோராம் அத்தியாயம்.

## ॥ विश्वरूपदर्शनयोगः ॥

## விசுவரூபதரிசனயோகம்.



॥ अर्जुन उवाच ॥

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

[௬௧௫] அர்ஜுனன் சொல்லலாயினன் :—எனது அநுக்கிரகத்தின் பொருட்டுத்தம்மால் யாதொரு மேலான இரகசியமாகிய அத்தியாத்மமென்னும்பெயரையடைந்த வாக்கியம்(௯-வது வரையில்) சொல்லப்பட்டதோ அதனால் என்னுடைய இந்த மோகம் நீங்கிற்று. (௧)

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥

[௬௧௬] தாமரையிதழ்போன்ற நேத்திரங்களையுடையவரே! எதனால் தம்மிடத்தினின்றும் என்னால் உற்பத்திப்பிரலயங்கள்

விஸ்தாரமாகக்கேட்கப்பட்டனவோ, அவ்யயமானமாகாத்மிய
மும் கேட்கப்பட்டதோ, (உ)

एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥

[ருகள] பரமேசுவரனே! எவ்வாறு (பரமேசுவரனை)தம்மைத்தாம் உபதேசித்தீரோ, இவ்வாறே யாம் இஃது (வேறுவிதமாயில்லை). புருஷோத்தமரே! தம்முடைய ஈசுவரவியல்பினதாகிய (ஞானைசுவரிய சக்திபலவீரியதேஜசுகளோடு கூடியதான) உருவத்தினைத் தரிசிக்க விரும்புகிறேன். (௩)

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

[சகஅ] பிரபுவே! அது என்னால் தரிசிக்கக் கூடியதென்று கருதுவீராயின், அப்போது யோகேசுவரரே! எனக்கு நீர் அவ்வியயமான தம்மை(ஆத்தமதுவடிவத்தினை)க்காட்டுவீராக.(ச)

॥ श्रीभगवानुवाच ॥

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

[சககூ] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:—பார்த்த! பலவர்ண

ங்களும்வடிவங்களுமுள்ள நாநாவித திவ்வியங்களான நூற்றுக் கணக்கும் ஆயிரக்கணக்குமான என் உருவங்களைப்பார். (ரு)

पश्यादित्यान्वसून् रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

[சஉ0] பாரத! (கஉ)ஆதித்தர்களையும், (அ) வசுக்களையும், (கக)உருத்திரர்களையும்,(உ) அசுவினிகுமாரர்களையும்,(சகூ)மருத்துக்களையும் பார். அப்படியே முன்காணப்படாத வெகு ஆச்சரியங்களைப்பார். (சு)

इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

[சஉக] குடாகேச ! என்னுடைய இந்தத்தேகத்தில் ஓரிட த்திருப்பதாக சராசரத்தோடு கூடிய எல்லா ஜகத்தையும் இப் போதுபார். எந்தப் பிறவற்றையும் பார்க்க விரும்புவாயாயின் (பார்). (எ)

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

[சஉஉ] ஆனால் உன்னுடைய இந்த நேத்திரத்தினலேயே என்னையே காணக்கூடியவனுகாய். உனக்குத்திவ்விய நேத்திர த்தைத்தருகின்றேன். என்னுடையஈசுவரசம்பந்தியானயோக

த்தை(சாமர்த்தியத்தை)ப் பார். (அ)

॥ संजय उवाच ॥

एवमुक्त्वा ततो राजन् महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

[சஉரு] சஞ்சயன்சொல்லலாயினன்:—அரசனே! மகாயோகேசுவரராகிய ஹரியானவர் இவ்வாறுகூறி, அதன்பின் பார்த்தனுக்கு மேலான ஈசுவர சம்பந்தியான உருவத்தினைத் தரிசிப்பித்தார். (கூ)

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

[சஉசு] அநேக முகநேத்திரங்களையுடையதும், அநேக அற்புதக்காட்சிகளையுடையதும், அநேகதிவ்யாபரணமுடையதும், உத்தியோகமுடைய (ஏந்திய) அநேக திவ்ய ஆயுதமுடையதும், (௧0)

दिव्यमाल्यांबरधरं दिव्यगंधानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनंतं विश्वतोमुखम् ॥ ११ ॥

[சஉ௬] திவ்யமாலையும் வஸ்திரமுமணிந்ததும், திவ்வியமா ண சந்தனுதி வாசனை பூசியதும், சர்வ ஆச்சரியமயமானதும், பிரகாசவடிவினதும், அந்தமில்லாததும், எப்புறத்துமுகமுள்ளதுமாகக் கண்டான். (கக)

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

[சஉகூ] ஆகாசத்தில் ஒரேகாலத்தில் ஆயிரம் சூரியர்களின் பிரபை (பிரகாசம்) உதிக்குமாயின், அது அம்மகாத்மாவின் பிரபை(ஒளி)க்குச் சமானமாம். (கஉ)

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पांडवस्तदा ॥१३ ॥

[௬௨௭] அப்போது பாண்டவன் அங்குத்தேவதேவனுடையசரீரத்தில் ஒரு அவயவத்திலிருப்பதாய் அநேகவிதமாய்ப்பிரிவுபட்டுள்ள சகலஜகத்தையும் கண்டான். (௧௩)

ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनंजयः ।
प्रणम्य शिरसा देवं कृतांजलिरभाषत ॥ १४ ॥

[௬௨௮] அதன்பின் புதுமைபுகப்பெற்ற(ஆச்சரியமடைந்த)வனாய் மயிர்க்குச்செறியப்பெற்றவனாய் அத்தனஞ்சயன் தேவனைத் தலையால் நன்றாய்வணங்கி அஞ்சலிசெய்தவனாய்ச்சொல்லலாயினான். (௧௪)

॥ अर्जुन उवाच ॥

पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसंघान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥ १५ ॥

[௪௨௧] அர்ஜுனன் சொல்லலாயினன் :-தேவனே! தமது தேகத்தில் சகல தேவர்களையும், அப்படியே (ஸ்தாவர ஜங்கம) பூதபேதங்களின் கூட்டங்களையும், கமலாசனத்திருக்கும் ஈசனை பிரஹ்மாவையும், (வசிஷ்டாதியரான) எல்லா ரிஷிகளையும் (வாசுகிமுதலிய) திவ்வியமான பாம்புகளையும் காண்கிறேன்.

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनंतरूपम् ।
नांतं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ॥ १६ ॥

[ச௩௦] விசுவேசுவரனே ! விசுவரூபனே ! தம்மை அநேக கைகள் வயிறுகள் முகங்கள் நேத்திரங்களுடையவராகவும், எப்புறத்தும் அளவற்றவடிவுடையவராகவும் காண்கின்றேன். மறுபடியும் தமது முடிவினைக்காணேன்; நடுவையும்(காணேன்); ஆதியையும்(காணேன்). (௧௬)

किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समंताद् दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥ १७ ॥

[௪௩௧] கிரீடமுடையவரும், கதையுடையவரும், சக்கரமுடையவரும், தேஜோராசியினரும், எல்லாப்புறத்தாலும் பிரபையுடையவரும், துக்கத்தோடு பார்க்கத்தக்கவரும், எப்புறத்தும் ஜ்வலிக்கின்ற அக்கினி சூரியர்களின் காந்தியுடையவரும், பிரமாணவிஷயமாகாதவருமாகத் தம்மைகாண்கின்றேன்.(௧௭)

त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १८ ॥

[௪௩௨] தாம் மேலான அக்ஷரமாக (அழிவில்லாதவராக) அறியத்தக்கவர். தாம் இந்த ஜகத்திற்கு அதிஷ்டானம்; மேலான

வர். தாம் அவ்வியயர். சாசுவதமான தர்மத்தை ரக்ஷிப்பவர். தாம் சநாதனர்; புருஷர் என்பது என் அபிப்பிராயம். (௧௮)

अनादिमध्यांतमनंतवीर्यमनंतबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्रं स्वतेजसा विश्वमिदं तपंतम् ॥ १९ ॥

[சங்ங] ஆதிநடுவந்தமின்றிய அநந்தவீரியமுடையவராயும், அநந்தகரங்களுடையவராயும், சந்திரசூரியர்களான நேத்திரமுடையவராயும், ஜ்வலிக்கின்ற அக்னிமுகமுடையவராயும், தமது தேஜசால் இந்தவுலகைத்தபிக்கச் செய்பவராயும் தம்மைக்

காண்கின்றேன். (௧௯)

द्यावापृथिव्योरिदमंतरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाऽद्भुतं रूपमुग्रं तवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २० ॥

[சாங்க] மகாத்மாவே! தம்மொருவராலேயே விண்ணிற்கும் மண்ணிற்குமிடையும் (அந்தரிக்ஷமும்) சகல திக்குகளும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. தம்முடைய இந்த அற்புதமும் உக்கிரமுமான உருவத்தைக்கண்டு மூன்றுலகமும் மிகப்பீடிக்கப்பட்டிருக்கின்றன. (௨௦)

अमी हि त्वां सुरसंघा विशंति केचिद्भीताः प्रांजलयो गृणंति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिध्दसंघाः स्तुवंति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥

[௩௩௫] இந்தத்தேவக்கூட்டங்கள் தம்மையே அடைகிறார்கள். சிலர் பயத்தோடுகூடிக் கைகூப்பியவராய்த் துதிக்கின்றனர். மகரிஷிசித்தர்களது கூட்டம் சுவஸ்தி (சுபமுண்டாகுக) என்று கூறித் தம்மை வெகுஸ்துதிகளால் ஸ்துதிக்கின்றார்கள். (உக)

रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गंधर्वयक्षासुरसिध्दसंघा वीक्षंते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥

[௪௩௪] (௧௧)ருத்திரர்,(௧௨)ஆதித்தியர்,(அ)வசுக்கள்,(௧௨) சாத்தியர்,(௧௦)விசுவேதேவர்கள்,(௨)அசுவினிகுமாரர், (௪௯)மருத்துக்கள் உஷ்ணபானஞ்செய்யும் பிதிரர், கந்தர்வ யக்ஷாசுர சித்தக்கூட்டங்கள் எவர்களோ அவர்களெல்லோருமே ஆச்சரியமடைந்தவராய்த் தம்மைக் காண்கின்றார்கள். (௨௨)

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाऽहम् ॥ २३ ॥

[௪௩௭] மகாபாகுவே! வெகுமுகங்களும் நேத்திரங்களுமுடையதும், வெகுபுஜங்கள் தொடைகள் பாதங்களையுடையதும்,

வெகுவயிறுகளுடையதும், வெகுபற்களினால் கோரமுடைய துமான தமது பெருத்த வடிவத்தைப் பார்த்து உலகத்தினரும் அப்படியே யானும் மிகத்துன்புற்றவராகின்றோம். (உ௩)

नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितांतरात्मा धृतिं न विंदामि शमं च विष्णो ॥

[௨௩-அ] விஷ்ணுவே! ஆகாயத்தைதொடுவதும், மிகப்பிர காசிப்பதும், அநேக நிறமுடையதும், திறந்த வாயுடையதும், மிகப்பிரகாசிக்கும் விசால நேத்திரமுள்ளதுமான தமதுவடிவ

த்தைக்கண்டு, எதனால் மிகவருந்திய மனதுடையவனாயிருக்கின்றேனோ, அதனால் தைரியத்தையும் சமத்தினை(மனவமைதியினை)யுமடையேன். (௨௪)

दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसंनिभानि ।
दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

[சங்க] பயங்கரமானபற்களுடையதும் காலாக்கினிக்கொப்பானதுமான தமது முகங்களைப்பார்த்தவுடன் திக்குகள் தெரியவில்லை. சுகத்தையுமடையேன். தேவேசனே! ஜகந்நிவாசா! பிரசன்ன(சாந்தவடிவின)ராகுக. (௨௫)

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसंघैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥
वक्त्राणि ते त्वरमाणा विशंति दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनांतरेषु संदृश्यंते चूर्णितैरुत्तमांगैः ॥ २७ ॥

[௪௪௦-௪௧] இந்தத்திருதராஷ்டிரரின் புத்திரர்கள் உலகாள்பவரின் கூட்டங்களுடனேயே எல்லோரும் விரைவுடையவர்களாய்த் தம்மிடத்துப்பிரவேசிக்கின்றார்கள். இப்பீஷ்மரும், துரோணரும், அப்படியே சூதபுத்திர(கர்ண)னும், எங்களவர்களாகிய முக்கியவீரர்களோடு தம்மையடைந்து கோரைப்

பற்களையுடைய பயங்கரமான தமது முகத்தில் பிரவேசிக்கின்ற னர்; சிலர் பொடிபட்ட சிரசுகளோடு தமது பற்களினிடைகளில் விசேஷமாக ஒட்டி யிருப்பவர்களாகக் காணப்படுகின்றனர். ()

**यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवंति ।**
**तथा तवामी नरलोकवीरा विशंति वक्त्राण्यभिविज्वलंति ॥ २८ ॥**

[௪௪௨] எப்படிநதிகளின் வேகமுள்ள வெகுஜலங்கள் சமுத்திரத்தை எதிர்நோக்கியே ஓடுகின்றனவோ, அப்படி இந்நரலோக வீரர்கள் தமது எங்குமாய் ஜ்வலிக்கும் முகங்களில் பிரவேசிக்கின்றனர். (உஅ)

यथा प्रदीप्तं ज्वलनं पतंगा विशंति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशंति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

[சசங] எப்படி விட்டில்கள் மிகவேகமுள்ளனவாய் நாசத்தின்பொருட்டு மிகஜ்வலிக்கும் அக்கினியில் பிரவேசிக்கின்றனவோ, அப்படியே ஜனங்களும் மிக வேகமுடையவர்களாய் நாசத்தின்பொருட்டுத் தம்முடைய வாய்களில் பிரவேசிக்கின்றனர். (உகூ)

लेलिह्यसे ग्रसमानः समंताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपंति विष्णो ॥ ३० ॥

[௪௪௪] விஷ்ணுவே! எல்லாலோகங்களையும் விழுங்குகின்றவராய் ஜ்வலிக்கும் முகங்களால் எப்புறத்தாலும் சுவைக்கின்றீர். சகல ஜகத்தையும் தேஜசுகளினால் நிரப்பித் தமது உக்கிரமான காந்திகள் மிகத் தபிக்கச்செய்கின்றன. (௩௦)

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद।
विज्ञातुमिच्छामि भवंतमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम्॥

[௪௪௫] உக்கிர வடிவுடைய தாம் யார்? எனக்குச்சொல்லியருளல்வேண்டும். தேவசிரேஷ்டரே! தம்பொருட்டு நமஸ்காரம் உளதாகுக. பிரசன்னராகுக. தமது ஆதியான வடிவத்தை

அறியவிரும்புகிறேன். ஏனெனில், தமது பிரவிருத்தி(செய்கை)யை அறியேன். (௩௧)

॥ श्रीभगवानुवाच ॥

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां नभविष्यंति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥

[௩௩௬] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:-(அர்ஜுனா !)உலகத்தையழிக்கும் பிரசண்டகாலன் யான். இங்கு உலகத்தைச்சங்கரிக்கப் பிரவிருத்தித்திருக்கின்றேன். ஒவ்வொரு சேனையிலும் எவர்கள்யுத்தவீரர்களாய் நிலைத்திருக்கின்றனரோ, உன்

னையொழிந்த அவர்கள் யாவரும் இருக்கமாட்டார்கள். (௩௨)

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून्भुंक्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

[௪௪௭] ஆதலால் நீ எழுந்திரு. கீர்த்தியினையடை. சத்துருக்களை ஜயித்து நல்ல வளமுடைய இராஜ்யத்தினைப் புசிப்பாயாக. சவ்யசாசியே(இடதுகையினாலும் பாணப் பிரயோகஞ்செய்யு மியல்புடையோய்) ! இவர்கள் முன்னரே என்னாலேயே கொல்லப்பட்டிருக்கின்றனர். நீ நிமித்தமாத்திரமாகக்கடவாய். (௩௩)

द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथाऽन्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युध्यस्व जेताऽसि रणे सपत्नान् ॥

[சசஅ] என்னால்கொல்லப்பட்டவர்களாகிய துரோணரையும், பீஷ்மரையும், ஜயத்திரதனையும், கர்ணனையும், அப்படியே மற்றயுத்தவீரர்களையும் நீ கொல்லுவாயாக. கலங்காதே; யுத்தஞ்செய்; போரில் சத்துருக்களை வெல்பவனாவாய். (௩௰௪)

॥ संजय उवाच ॥

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृतांजलिर्वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

[௪௪௯] சஞ்சயன் சொல்லலாயினன்:-கேசவருடைய இவ்வசனத்தைக்கேட்டு நடுக்கமுடையவனாய் அர்ஜுனன் கிருஷ்ணனை நமஸ்கரித்து மிகப்பயத்தை யடைந்தவனாய் மறுபடியுமே நன்றாய் வணங்கி கைகூப்பியவனாய்த் தழுதழுப்புடன் சொல்லலுற்றான். (௩௫)

॥ अर्जुन उवाच ।

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवंति सर्वे नमस्यंति च सिद्धसंघाः ॥

[௪௫௦] அர்ஜுனன் சொல்லலாயினன்:-ஹ்ருஷிகேசரே!

தமது மிக்ககீர்த்தியினால் (தம்மைமிகப்புகழ்தலால்) உலகு மிக க்களிக்கின்றது ; அநுராகத்தை (தம்மிடத்துத் தொடர்ந்தபிரீதியை)யடைகின்றது. இராக்ஷஸர்கள் பயமடைந்தவர்களாய்த் திக்குகளில் ஓடுகின்றனர். சித்தர்க் கூட்டங்களெல்லோரும் நமஸ்கரிக்கின்றனர். இது பொருத்தமுள்ளதாம். (௩௬)

कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनंत देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

[சடுக] மகாத்மாவே ! அநந்தரே ! தேவேசரே ! ஜகந்நிவாசரே ! மிகமேலானவராகிய பிரஹ்மாவுக்கும் ஆதிகர்த்தாவா

இவ ரமக்கு எதனல் நமஸ்காரஞ்செய்யமாட்டார்கள் ? (செய்ய வே செய்வார்கள்.) தாம் அக்கரமும் சத்தும் அசத்தும் அவற் றின்மேலானதும் எதுவோ அதுவும் ஆவீர். (௩௭)

त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्ताऽसि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनंतरूप ॥ ३८ ॥

[பொழிப்பு] அநந்தவடிவரே ! தாம் ஆதிதேவர் ; புராண (பழை மையான) புருஷர் ; தாம் இந்த ஜகத்திற்கு லயஸ்தானமாயும் அறிபவராயு மிருக்கின்றீர். அறியத்தக்கவரும்,பரமந்தாம(மே லானநிலையின)ருமாயிருக்கின்றீர். தம்மால் உலகம் வியாபிக்க

ப்பட்டிருக்கின்றது. (௩௮)

वायुर्यमोऽग्निर्वरुणः शशांकः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥

[௪௰௩] வாயுவும், இயமனும், அக்கினியும், வருணனும், சந்திரனும், பிரஜாபதியும், பிரபிதாமகரும் (பிதாமகரான பிரஹ்மாவுக்குப் பிதாவும்) தாம். தமக்கு அநேகமுறை நமஸ்காரமுளதாகுக. நமஸ்காரமுளதாகுக. தமக்கு மறுபடியும் அடிக்கடி நமஸ்காரமுளதாகுக. நமஸ்காரமுளதாகுக. (௩௯)

नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनंतवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

[சருசு] எல்லாமா யிருப்பவரே! தமக்கு முன்பாக நமஸ்காரமுளதாகுக. இனிப் பின்புறமாகவும் நமஸ்காரம். தம்பொருட்டு எப்புறத்தாலுமே நமஸ்காரம் உளதாகுக. தாம் அநந்த (அழியாத)வீரிய(சாமர்த்திய)மும் அளவற்ற பராக்கிரமமுமுடையவராய் எல்லாவற்றையும் செவ்வையாய் வியாபிக்கின்றீர். அதனுல் எல்லாமாயிருக்கின்றீர். (௪௦)

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१ ॥

[௪௫௫] தம்முடைய இந்த மகிமையை அறியாத என்னால் தோழனென்று மதித்து, பிரமாதத்தி(சோர்வி)னாலும் பிரேமையினாலும் ஏ! கிருஷ்ணா! ஏ! யாதவா! ஏ! தோழா! என்று அநுசிதமானவார்த்தை எது சொல்லப்பட்டதோ. (௪௧)

यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥

[௪௫௬] அச்சுதரே! அன்றியும், பரிகாசத்தின் பொருட்டு

விளையாட்டு படுக்கை ஆசனம் போஜன மென்பவற்றில் ஒருவ னாயிரு (தனித்திரு)க்கும் போதாவது அல்லது அப்பலர் முன் பாவது எந்த அவமதிப்பு செய்யப்பட்டீரோ அதனை மன்னிக் கும்படி யான் அப்பிரமேயராகிய தம்மைகேட்கின்றேன்.(௪௨.)

पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभावः ॥

[௪௩] உவமிக்கப்படாத சாமர்த்தியமுடையவரே! இச்ச ராசரமாகிய உலகத்தினுக்குத் தாம் பிதாவாயிருக்கின்றீர்; பூஜ் யராயிருக்கின்றீர்; மேலான குருவாயிருக்கின்றீர்; மூன் றுலகு

த்திலும் தமக்குச் சரியானவன் வேறெவனுமில்லை; எனின், அதிகமானவன் எங்கிருந்திருப்பான் ? (௪௩)

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥

[௪௪] ஆதலால் சரீரத்தைத் தண்டஞ்சமர்ப்பித்துச் செவ்வையாய் வணங்கி யான் துதிக்கத்தக்கவரும் ஈசுவரனுமாகிய தம்மைச் சந்தோஷிப்பிக்கின்றேன். தேவனே! (என்பிழையைப்) புத்திரனுடையதைப் பிதாவைப்போலும், தோழனுடையதைத்தோழனைப்போலும், பிரியமுள்ளவளதைப் பிரி

யனைப்போலும் பொறுத்தற்குரியவராயிருக்கின்றீர். (௪௪)

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

[௪௫] முன்காணாததைக் கண்டு சந்தோஷித்தவனாயிருக்கின்றேன். பயத்தினால் என் மனம் மிகத்துன்புறுகின்றது. எனக்கு அந்த(முந்திய)வடிவத்தினையே காட்டுவீராக. தேவனே! தேவேசனே! ஜகந்நிவாசா! அருள்புரிவீராக. (௪௫)

किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

[சகூ0] யான் கிரீடியும், கதையினரும், சக்கரக்கையின ருமான தம்மை அப்படியே முன்னிருந்தவாறே தரிசிக்க விரும் புகின்றேன். ஆயிரம் புஜங்களுடையவரே! விசுவமூர்த்தியே! அந்நாற் புயமுடைய வடிவுமாகவே ஆகுவீராக. (சகூ)

॥ श्रीभगवानुवाच ॥

मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

[சகூக] ஸ்ரீ பகவான் சொல்லலாயினார்:— அர்ஜுனனே! பிர சன்னனாகிய என்னால் உனக்கு இம்மேலான வடிவம் என

லோகத்திறுற் காட்டப்பட்டது. தேஜோமயமும் எல்லாமும் அநந்தமும் ஆதிகாரணமுமான எனது வடிவம் எதுவோ அது உன்னையொழிந்த பிறரால் முன் பார்க்கப்பட்டதில்லை. (சஎ)

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

[சகூஉ] குருவீரனே! நரலோகத்தில் இத்தன்மைய வடிவுடைய யான் உனக்கந்நியமானவனால் வேதயஞ்ஞாத்தியயனங்களாலும் காணக்கூடியவனல்லன்; தானங்களாலும் அல்லன்; கிரியைகளாலுமல்லன்; உக்கிரமமான தபசுகளினாலுமல்லன்

(நானக்கூடியவனல்லன்). (௪௮)

मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

[சகா௩] என்னுடைய இத்தன்மையான இந்தக் கோரரூபத்தைக்கண்டு உனக்குத் துன்பம்வேண்டாம். விபரீதபாவனை யுண்டாக வேண்டாம். பயமொழிந்தவனும் பிரீதியுள்ள மனதுடையவனுமாய் நீ மறுபடியும் அந்த(முன்னிருந்ததான) இந்த(இப்போது காட்டும்) உருவத்தினையே பார். (௪௯)

॥ संजय उवाच ॥

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

[௪௯௪] சஞ்சயன் சொல்லலாயினன்:— வாசுதேவன் அர்ஜுனனை நோக்கி இவ்வாறு கூறி, அப்படியே தமது வடிவத்தை மறுபடியும் காட்டினர். மகாத்மாவானவர் மறுபடியும் சாந்த சரீரமுடையவராகிப் பயமடைந்திருந்த இவனை அழைத்தார். (௫௦)

॥ अर्जुन उवाच ॥

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

[௪௯௫] அர்ஜுனன் சொல்லலாயினன்:— ஜநார்த்தனரே! தம்முடைய இந்த சாந்தமான மானுடவடிவத்தைப்பார்த்து, இப்போது பிரசன்ன சித்தமுண்டான(வியாகுலமில்லாத)வனும் எனதியல்பையடைந்தவனுமாகி யிருக்கின்றேன். (௫௧)

॥ श्रीभगवानुवाच ॥

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकांक्षिणः ॥ ५२ ॥

[௪௯௬] ஸ்ரீபகவான் சொல்லலாயினர்:— எனது எந்த ரூபத்தைப் பார்த்தாயோ (அந்த) இது மிகவும் காணுதற்கரிய

தாம். தேவர்களும் நித்தியம் இந்த ரூபத்தைத் தரிசிக்கும் இச்சையுள்ளவர்களா யிருக்கின்றனர். (௫௨)

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

[சுலோ] எப்படி என்னை நீ பார்த்திருக்கின்றாயோ, இவ்விதமாக யான் வேதங்களாலும் காணக்கூடியவனல்லன். தபசிலும் (காணக்கூடியவன்) அல்லன். தானத்தினாலும் (காணக்கூடியவன்) அல்லன். யாகத்தினாலும் (காணக்கூடியவன்) அல்லன். (௫௩)

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

[௪௭௮] அர்ஜுநனே! பரந்தபனே! இத்தன்மைய யான் அநந்யபக்தியினுற்றான் அறியவும் உண்மையாகக் காணவும் பிரவேசிக்கவும் கூடியவனு யிருக்கின்றேன். (௫௪)

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पांडव ॥ ५५ ॥

[௪௭௯] பாண்டவ! எவன் என்னைப்பற்றிய கர்மஞ்செய்பவனும் என்னை மேலாகக் கொண்டவனும் சங்கமொழிந்தவ

னும் என்னுடைய பக்தனும், எல்லா ஜீவர்களிடத்தும் வைர
மில்லாதவனுமாயிருக்கின்றானோ, அவன் என்னையடைகின்
றான். (௫௫)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
एकादशोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
பதினோராம் அத்தியாயம் முடிந்தது.



|| ॐ ||

## || द्वादशोऽध्यायः ||

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## || भक्तियोगः ||

## பக்தியோகம்.



|| अर्जुन उवाच ||

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥

[சஎ0] அர்ஜுனன் சொல்லலாயினன்:—இப்படி இடை-

விடாது ஏகாக்கிரமனதுடையவர்களாய் எந்தப் பக்தர்கள் தம்மையுபாசிக்கின்றார்களோ, எவர்கள் அக்ஷரமும் அவ்வியக்த (இந்திரியாதிகட்கு விஷயமாகாத நிர்குணப்பிரஹ்ம)முமான வஸ்துவை உபாசிக்கின்றார்களோ, அவர்களுள், எவர் யோக முணர்ந்த சிரேஷ்டராவர்? (௧)

॥ श्रीभगवानुवाच ॥

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

[ரா௯] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:— எவர்கள் என்னி

டத்து மனதைச் செலுத்தி, நித்தியம் ஒருமித்தமனமுடையவர்களாய், மேலான சிரத்தையோடுகூடியவர்களாய் என்னை உபாசிக்கின்றார்களோ, அவர்கள் மிகுந்த(பக்தி)யோகமுடையவர்கள் என்பது என் கருத்து. (௨)

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिंत्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥
संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवंति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

[௪௭௨-௭௩] ஆனால் எவர்கள் இந்திரியசமூகத்தைச் செவ்

வையாய் அடக்கி, எங்கும் சம(பிரஹ்ம)புத்தியுடையவராய், சர்வஜீவர்களது நலத்திலும் பிரீதியுடையவர்களாய்ச் சொல்லக்கூடாததும், அவ்யக்தமும்(வெளிப்படாததும்), சிந்திக்கக்கூடாததும், எங்குமிருப்பதும், நிர்விகாரமும், அசலமும், நித்தியமுமான வஸ்துவை உபாசிக்கின்றார்களோ, அவர்கள் என்னையே அடைகின்றனர். (௩-௪)

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

[சஎச] அவ்வியக்தத்தில் பிரீதியுள்ள சித்தத்தினராகிய

அவர்களுக்கு மிகுந்த கிலேசமேயுள்ளது. எதனாலெனின், தேகமுடையவர்களால் அவ்வியக்தமாகிய கதி வருத்தத்தோடு அடையப்படுகின்றது. (௫)

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायंत उपासते ॥ ६ ॥

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

[௪௭௫-௭௬] ஆனால் எவர்கள் எல்லாக் கர்மங்களையும் என்னிடத்து விட்டு, என்னிடத்துத் தற்பரர்களாய், அநந்யமான

யோகத்தினால் என்னையே தியானிக்கின்றவர்களாய் உபாசிக்கின்றார்களோ, பார்த்த! அந்த என்னிடத்துப் பிரவேசித்த சித்தமுடையவர்களுக்கு யான் மிருத்யுவடிவ சம்சாரசாகரத்தினின்றும் விரைவில் கரையேற்றுபவனாகின்றேன். (சு-எ)

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

[சஎஎ] மனதை என்னிடத்திலேயே நிறுத்து. புத்தியை என்னிடத்துச்செலுத்து. இதற்குமேல் (தேகாந்தத்தில்) என்னிடத்திலேயே நிரந்தரம் வசிப்பாய்; சம்சயம் இல்லை. (அ)

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनंजय ॥ ९ ॥

[௪௭அ] தனஞ்சயனே! எப்போது என்னிடத்துச் சித்தத்தை ஸ்திரமாக வைத்தற்கு முடியவில்லையோ, அப்போது அப்பியாசயோகத்தினால் என்னை அடைய இச்சி. (௯)

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

[௪௭௯] அப்பியாசத்திலும் சாமர்த்தியமில்லாதவனாயிருக்கின், என்பொருட்டான கர்மங்களை மேலாகக்கொண்டவனாக

க்கடவாய். என்பொருட்டு (சிரவணகீர்த்தனாதி) கர்மங்களைச் செய்தும் சித்தியை அடைவாய். (௧௦)

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

[௪அ௦] இதுவும் செய்யக்கூடாதவனாயின், அப்போது என் விஷயமான யோகத்தை ஆசிரயித்தவனாய் மனதை யடக்கியவனாய்ச் சர்வ கர்மங்களின் பலத்தின் தியாகத்தைச் செய்வாயாக. (௧௧)

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छांतिरनंतरम् ॥ १२ ॥

[௬அக] (ஞானார்த்தகிரவணமாகிய)அப்பியாசத்திலும் ஞான(சப்தயுக்திகளாலாம் ஆத்மநிச்சய)மே மேலானது. ஞானத்திலும்(நிச்சயபூர்வகமான)தியானம் விசேஷிக்கின்றது. தியானத்திலும் கர்மபலத்தியாகம் சிரேஷ்டம். (ஈசுவரனிடத்தில் கர்மபலத்தை சமர்ப்பித்தலாகிய)தியாகத்தினின்றும்(ஈசுவரப்பிரசாதத்தால் ஞானம் கிடைத்தலின்)சீக்கிரமாகவே சாந்தி(முக்தி)யுண்டாகின்றது. (௧௨)

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

[௪அ௨] (எவன்)சர்வபூதங்களின் துவேஷமில்லாதவனும், மைத்திரியுடையவனும், கருணையுடையவனும், எனது என்பது இல்லாதவனும், அகங்காரமில்லாதவனும், துக்கசுகங்களில் சமமுடையவனும் க்ஷமையுடையவனும், (௧௩)

सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मे भक्तः स मे प्रियः ॥ १४ ॥

[௪அ௩] எவன்எப்போதும்சந்தோஷமுடையவனும், யோகியும், அடங்கிய கரணமுடையவனும், திடநிச்சயமுடையவனும், என்னிடத்தர்ப்பணஞ்செய்யப்பட்ட மனோபுத்தியுடை

யவனும், என்னுடைய பக்தனுமாயிருக்கின்றானோ, அவன் எனக்குப் பிரியன். (௧௪)

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

[௪௮௪] எவனிடத்தினின்றும் உலகம் வியாகுலத்தையடைகிறதில்லையோ, எவன் உலகத்தினின்றும் மனக்கொதிப்பை அடைகிறதில்லையோ, எவன் சந்தோஷம் குரோதம் பயம் வியாகுலமென்பவற்றினின்றும் விடுபட்டவனாகின்றானோ, அவன் எனக்குப் பிரியன். (௧௫)

अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारंभपारित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

[௧௬] எவன் அபேக்ஷையில்லாதவனாய், சுசியாய், சமர்த்தனாய், உதாசீனனாய், பயநீங்கியவனாய், எல்லாச்செய்கைகளையும் விட்டவனாய், என்பக்தனாயிருக்கின்றானோ, அவன் எனக்குப் பிரியன். (௧௬)

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न कांक्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७ ॥

[௧௭] எவன் மகிழ்கிறதில்லையோ, துவேஷிக்கிறதில்லையோ,

சோகிக்கிறதில்லையோ, இச்சிக்கிறதில்லையோ, எவன் சுபா சுபங்களை விட்டவனாய்ப் பக்திமானாயிருக்கின்றானோ, அவன் எனக்குப் பிரியன். (௧௭)

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः संगविवर्जितः ॥ १८ ॥

[சஅஎ] அன்றியும், சத்துருவினிடத்தும், மித்திரனிடத்தும் சமனாயிருக்கின்றானோ, அப்படியே மானாவமானங்களிலும், சீதோஷ்ண சுகதுக்கங்களிலும் சமனாய்ச்சங்கமில்லாதவனாயிருக்கின்றானோ, (௧அ)

तुल्यनिंदास्तुतिर्मौनी संतुष्टो येनकेनचित्।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

[௪௮௮] நிந்தைஸ்துதிகளில் சமமானவனும், மௌனியும், (கிடைத்த)யாதேனுமொன்றினால் சந்தோஷமு(திருப்தியு)ள்ளவனும், வீடில்லாதவனும், நிலைத்தவறிவுடையவனும், பக்திமானுமாகிய நரன் எனக்குப் பிரியன். (௧௯)

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

[௪௮௯] ஆனால் எவர்கள் சிரத்தையுடையவர்களும் என்னைப் பரமகதியாயுடையவர்களுமாய் இந்தச் சொல்லியபடி

யான தர்மமுடைய அமிர்தத்தை உபாசிக்கின்றார்களோ அந்தப் பக்தர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள். (௨௦)

इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु
श्रीकृष्णार्जुनसंवादे
द्वादशोऽध्यायः

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
பன்னிரண்டாம் அத்தியாயம் முடிந்தது.

इति द्वितीयमुपासनाषट्कं समाप्तम्
இவ்வாறு இரண்டாவது உபாஸனஷட்கம் முடிந்தது.

|| ॐ ||

|| त्रयोदशोऽध्यायः ||

பதின்மூன்றும் அத்தியாயம்.

|| क्षेत्रक्षेत्रज्ञविभागयोगः ||

க்ஷேத்திரக்ஷேத்திரஞ்ஞவிபாகயோகம்.



|| अत्र क्षिप्तः श्लोकः ||

|| अर्जुन उवाच ||

प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव || १ ||

*அர்ஜுனன் சொல்லலாயினன்:— கேசவரே (பிரஹ்மாவையும் ஈசனையும் வசமாகவுடையவரே)! பிரகிருதியினையும், புருஷனையும், க்ஷேத்திரத்தையும், க்ஷேத்திரஞ்ஞனையும், ஞானத்தினையும், இந்த ஞேயத்தினையும் அறியவிரும்புகிறேன். (க)

॥ श्रीभगवानुवाच ॥
इदं शरीरं कौंतेय क्षेत्रमित्यभिधीयते ।
एतंद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ १ ॥

---

*இந்தச்சுலோகம் சில பிரதிகளில் இல்லாமையாலும் எ00-க்கு மேற்படுதலாலும் அதிகமெனத் தெரிகிறது.

[சகூ௦] ஸ்ரீ பகவான் சொல்லலாயினர் :—கௌந்தேயா! இந்தச் சரீரம் க்ஷேத்திரம் என்று சொல்லப்படுகின்றது. இதனை எவன் அறிகின்ருனே, அவனை க்ஷேத்திரஞ்ஞனென்று அவற்றையறிந்தவர் கூறுவர். (க)

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ २ ॥

[சகூக] பாரத! அன்றியும் சகலக்ஷேத்திரங்களிலும்(உள்ள)க்ஷேத்திரஞ்ஞனுகவும் என்னை அறி. க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞர்களின்ஞானமெதுவோ அது (தான்) ஞானம் என்பது என் கருத்து. (உ)

तत्क्षेत्रं यच्च यादृक् च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३ ॥

[சகூஉ] அந்தக்ஷேத்திரம் யாதாய், எத்தன்மையதாய், எவ்விகாரமுடையதாய்(இருக்கிறதோ),எதனினின்றும் எதுவாய் (உண்டாகிறதோ), அவன்(க்ஷேத்திரஞ்ஞன்)எவனாய், எவ்வல்லமையுடையவனாயிருக்கின்றானோ, அதனைச்சுருக்கமாய் என்னிடமிருந்து கேள். (௩)

ऋषिभिर्बहुधा गीतं छंदोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४ ॥

[௪௬௩] (இந்தக்ஷேத்திரக்ஷேத்திரஞ்ஞர்களது சொரூபம்) இருஷிகளால் வெகுவிதமாய்ப் பாடப்பட்டுள்ளது. நாநாவித சந்தசுகளாகிய வேதங்களாலும் வெவ்வேறு விதமாகத் தனித் தனி பாடப்பட்டுள்ளது. ஹேதுக்களுடையனவும் செவ்வை யாய் நிச்சயிக்கப்பட்டனவுமாகிய பிரஹ்மசூத்திரபதங் (பிர ஹ்மத்தைக் குறிக்கும்சொற்)களாலேயே பாடப்பட்டுள்ளது.

महाभूतान्यहंकारो बुद्धिरव्यक्तमेव च ।
इंद्रियाणि दशैकं च पंच चेंद्रियगोचराः ॥ ५ ॥

इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६ ॥

[௪௬௪-௪௬௫] மகாபூதங்கள், அகங்காரம், புத்தி, அவ்வியக்தம்,(சுரோத்திராதி)பத்தும்(மனது)ஒன்று மாகிய இந்திரியங்கள், ஐந்து இந்திரியவிஷயங்கள், இச்சை, துவேஷம், சுகம், துக்கம், சங்காதம்(தேகேந்திரியங்களின் கூட்டம்), சேதனை (அறிவு), தைரியம் என்னும் இந்தக்ஷேத்திரம் விகாரத்தோடு சுருக்கமாகச் சொல்லப்பட்டது. (௫-௬)

अमानित्वमदंभित्वमहिंसा क्षांतिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ७ ॥

[௪௬௬] மானமுடைமையின்மையும், தம்பமுடைமையின்

மையும், இம்ஸையில்லாமையும், பொறையும், நேர்மையும், ஆசாரியசேவையும், சௌசமும், ஸ்திரத்வமும், ஆத்மநிக்கிரகமும் (ஆத்மாவுக்கு உபகாரகங்களான காரியகாரண சங்காதங்களை யடக்குதலும்), (எ)

इंद्रियार्थेषु वैराग्यमनहंकार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ८ ॥

[சகூஎ] இந்திரியார்த்தங்களில் வைராக்கியமும், அகங்காரமின்மையும், ஜன்மமரண ஜராவியாதி துக்கதோஷங்களைத் தொடர்ந்து காணுதலும், (அ)

असक्तिरनभिस्वंगः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९ ॥

[சகூஅ] புத்திரதார கிருகாதிகளில் பற்றில்லாமையும், அபிமானமின்மையும், நித்தியமும் இஷ்டாநிஷ்டங்(அநுகூலப்பிரதிகூலமானவை)களினடைவில் சமசித்தமுடைமையும், (௯)

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १० ॥

[சகூகூ] என்னிடத்தில் அநந்நியயோகத்தினால் வியபிசாரமின்றிய பக்தியும், தனியிடத்தைச் சேவிக்குந்தன்மையும், ஜனங்களின் கூட்டத்தில் உருசியின்மையும், (௧௦)

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ ११ ॥

[௫௦௦] அத்தியாத்மஞானநித்தியத்தன்மை(ஆத்மாநாத்மவிவேகத்தில் நிஷ்டையுடைமை)யும், தத்துவஞானத்தின் பிரயோஜனத்தைக்காணுதலுமாகிய இதுஞான(ஞானசாதன)மாமென்று சொல்லப்பட்டது. இதனின் விபரீதமானதுஎதுவோ அது அஞ்ஞானமாம். (௧௧)

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १२ ॥

[௫௦௧] எதனை அறிந்து (நரன்) அமிர்தத்தைப்புகிப்பானோ

அத்தன்மையதேனும் (அறியத்தக்கபொருள்) எதுவோ அதனைச்சொல்லுகிறேன். அது அநாதியுடைய பரமாம், பிரஹ்மமாம், சத்து (ஸ்தூலமு) மன்று அசத்து (சூக்ஷ்மமு) மன்று என்று சொல்லப்படுகின்றது. (கஉ)

सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १३ ॥

[௫௦உ] அஃது எப்புறத்தானும் கைகால்களுடையது. எப்புறத்தானும் கண்சிரமுகங்களுடையது. எல்லாப்புறத்தானும் காதுடையது. உலகத்தில் எல்லாவற்றையும் நன்றாய் வியாபித்துநிற்கின்றது. (கங)

सर्वेंद्रियगुणाभासं सर्वेंद्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४ ॥

[௫௦௩] எல்லா இந்திரியங்களையும் விஷயங்களையும் வியாபித்தது போல எல்லாமாய்விளங்குவதும், எல்லா இந்திரியங்களினீங்கியதும், சம்பந்தமின்றியதும், எல்லாவற்றையும் தாங்குவதும், நிர்க்குணமும், குணபோக்தாவுமாம். (௧௪)

वहिरंतश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चांतिके च तत् ॥ १५ ॥

[௫௦௪] அதுவே பூதங்களுக்கு வெளியானதும், உள்ளானதும், அசரமும், சரமும், சூக்ஷ்மமாயிருத்தலின் ஞானத்திற்கு

விஷயமாகாததுமாம். அது தூரத்திருப்பதும், சமீபத்திருப்பதுமாம். (௧௫)

आविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६ ॥

[நிலை] அந்த ஞேயம் பூதங்களில் பிரிபடாததும் பிரிக்கப்பட்டதுபோல் நிற்பதும், பூதங்களைத் தாங்குவதும், விழுங்குவதும், உற்பத்திசெய்வதுமாம். (௧௬)

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य धिष्ठितम् ॥ १७ ॥

[ருசு] அது ஜோதிகட்கெல்லாம் ஜோதியும், இருளைக்கடந்தது மென்று சொல்லப்படுகின்றது. ஞான(சேதனஸ்வரூப)மும், ஞேயமும்(விருத்திவியாப்தியாலறியப்படுவதும்),(அகம் பிரம்மாஸ்மி விருத்தியாகிய)ஞானத்தினலடையப்படுவதும், எல்லோருடைய இருதயத்திலும் நிற்பதுமாம். (கஎ)

इति क्षेत्र तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १८ ॥

[ருஎ] இவ்வாறு க்ஷேத்திரமும், அப்படியே ஞானமும், ஞேயமும் சுருக்கமாகச் சொல்லப்பட்டன. எனது பக்தன் இதனை அறிந்து எனதுஸ்வரூபமாதற்குத்தக்கவனாகின்றான்.()

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ १९ ॥

[௫௦அ] பிரகிருதியும் புருஷனுமாகிய இரண்டனையும் அநாதியென்றே அறி. விகாரங்களையும் குணங்களையும் பிரகிருதியினின்றுண்டானவைகளாகவே அறி. (௧௯)

कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २० ॥

[௫௦க] (சரீரமும் அதன் ஆரம்பகமான பஞ்சபூத பஞ்சவிஷயங்களான) காரிய (அந்தக்கரணம் தசேந்திரியம் அவற்றின்

ஆசிரிதமான சுகதுக்கமோகரூபகுணமயமான)காரண(அல்லது கரண)ங்களின் கர்த்திருத்தன்மையில் பிரகிருதி ஏதுவென்று சொல்லப்படுகின்றது. சுகதுக்கங்களின் போக்திருத்தன்மையில் புருஷன் ஏதுவாகச்சொல்லப்படுகின்றான். (௨௦)

पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।
कारणं गुणसंगोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१ ॥

[ரு௯௦] புருஷன் பிரகிருதியிலிருப்பவனாகியே பிரகிருதியிற்றோன்றினகுணங்களைப்புசிக்கின்றான். சத்தசத்துயோனி (நல்லனவும் தீயனவுமானபிறப்பு)களில் பிறத்தற்கு இவனுக்குக் குணசங்கம் காரணமாகின்றது. (௨௧)

उपद्रष्टानुमंता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २२ ॥

[ருகக] இந்தத்தேகத்தில் புருஷன் பரன். அவன் உபதிருஷ்டா, அநுமந்தா (அநுமதிகொடுப்பவன்),பர்த்தா, போக்தா, மகேசுவரன், பரமாத்மா என்றும் சொல்லப்படுகின்றான். ()

य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३ ॥

[ருகஉ] எவன் இப்படிப் புருஷனையும் குணங்களோடு பிரகிருதியையும் அறிகின்றானோ, அவன் எவ்விதமாயிருப்பவனாயினும் மறுபடியும் ஜன்மத்தையடையான். (உந)

ध्यानेनात्मनि पश्यंति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४ ॥
अन्ये त्वेवमजानंतः श्रुत्वान्येभ्य उपासते ।
तेऽपि चातितरंत्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५ ॥

[௨௪-௨௫] சிலர் தியானத்தினால் (பிரஹ்மமாகிய) ஆத்மாவினிடத்து (கூடஸ்த) ஆத்மாவினை (பிரஹ்மாகாரபுத்தியாகிய) ஆத்மாவினால் பார்க்கின்றார்கள். பிறர்சாங்கியயோகத்தினாலும், வேறு சிலர் கர்மயோகத்தினாலும், மற்றும்சிலரோ இவ்வாறு அறியாதவர்களாய்ப் பிறரிடத்திருந்து கேட்டும் உபாசி

க்கின்றார்கள். கேள்வியினை மேலானசாதனமாகக் கொண்ட அவர்களும் மிருத்தியுவினையே கடக்கின்றார்கள். (௨௪-௨௫)

यावत्संजायते किंचित्सत्वं स्थावरजंगमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥ २६ ॥

[௫௧௫] பரதசிரேஷ்டனே! எவ்வளவு ஸ்தாவர சங்கமவடிவ பிராணியுண்டாகின்றதோ அதுக்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞர்களின் ஸம்யோகத்தாலென்றறி. (௨௬)

समं सर्वेषु भूतेषु तिष्ठंतं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यंतं यः पश्यति स पश्यति ॥ २७ ॥

[௫௧௬] நசிப்பனவாகிய எல்லாப்பூதங்களிடத்தும் சமமாய் நிற்பவரும், நாசமில்லாதவருமாகிய பரமேசுவரனை எவன் காண்கின்றானோ, அவன் காண்கின்றான். (௨௭)

सम पश्यन् हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
नहिनस्त्यात्मनाऽऽत्मानं ततो याति परां गतिम् ॥ २८ ॥

[௫௧௭] எங்கும் சமமாகச் செவ்வையாய் நிலைத்திருக்கும் ஈசுவரனைக்காண்பவனாய், எதனால் ஆத்மாவினால் ஆத்மாவினைக்கொல்லுகிறதில்லையோ, அதனால் பரகதியை அடைகின்றான். (௨௮)

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥ २९ ॥

[௨௯] பிரகிருதியிஞலேயே எல்லாவிதத்தாலும் கர்மங்கள் செய்யப்படுவனவாக எவன் காண்கின்ருனே, அப்படியே ஆத்மாவை அகர்த்தாவாகக்காண்கின்ருனே, அவன் காண்கின்ருன். (உ௯)

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म सपद्यते तदा ॥ ३० ॥

[௩௰] எப்போது பூதங்களின் வேறுபட்டதன்மையை ஒன்றன்(அதிஷ்டான பிரஹ்மத்தின்) கணிருப்பதாகக்காண்கின்ருனே, அது(அவ்வதிஷ்டான பிரஹ்மத்தி)ஞலேயே விஸ்

தார(ஜக)த்தைக்காண்கின்றானோ, அப்போது பிரஹ்மத்தைய டைகின்றான். (௩0)

अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौंतेय न करोति न लिप्यते ॥ ३१ ॥

[ரு௨0] கௌந்தேயா! அநாதியாயிருத்தலாலும், நிர்க்குண மாயிருத்தலாலும், இந்த அவ்வியயமான பரமாத்மா சரீரத்தி ருப்பவராயிருந்தும்(எதனையும்)செய்கிறதில்லை; (கர்மபயனால்) பற்றப்படுகிறதில்லை. (௩க)

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३२ ॥

[௫௨௧] எப்படி எல்லாவற்றினுமுள்ள ஆகாயம் ஸூக்ஷ்மத் தன்மையால் பற்றப்படுகிறதில்லையோ, அதுபோலஎங்கும் தேகத்திலிருக்கும் ஆத்மா பற்றப்படுகிறதில்லை. (௩௨)

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३ ॥

[௫௨௨.] பாரதா! எப்படி ஒரேஸூரியன் இவ்வெல்லாலோகத்தையும் பிரகாசிக்கின்றனே, அப்படி க்ஷேத்திரி(க்ஷேத்திரஞ்ஞன்)எல்லாக்ஷேத்திரத்தையும் பிரகாசிக்கின்றான். (௩௩)

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमंतरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यांति ते परम् ॥ ३४ ॥

[௫௨௩] எவர்கள் க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞர்களின் பேதத்தினையும் பூதப்பிரகிருதி மோக்ஷ(பூதங்களது உபாதான காரணத்தின் நீக்க)த்தினையும் ஞானசக்ஷுவினுல் இவ்வாறு அறிகின்ருர்களோ, அவர்கள் பரத்தினை அடைகின்றனர். (௩௪)

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ॥
॥ श्रीकृष्णार्जुनसंवादे ॥
॥ त्रयोदशोऽध्यायः ॥

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
பதின்மூன்ரும் அத்தியாயம் முடிந்தது.



|| ॐ ||

## || चतुर्दशोऽध्यायः ||

## பதினான்காம் அத்தியாயம்.

## || गुणत्रयविभागयोगः ||

## குணத்திரயவிபாகயோகம்.



|| श्रीभगवानुवाच ||

परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः || १ ||

[௫௨௪] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:—எதனையறிந்து எல்லாமுநிவர்களும் இங்கிருந்தும் மேலானசித்தி(பரமுத்தி)யை அடைந்திருக்கின்றனரோ, அந்த ஞானங்களுள் உத்தமமானதும், சிரேஷ்டமானதுமான ஞானத்தை மறுபடியும் சொல்லுகின்றேன். (௧)

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायंते प्रलये न व्यथंति च ॥ २ ॥

[௫௨௫] இந்த ஞானத்தைப்பற்றி என் சமானதர்மமுடைமையடைந்தவர்களாய்ச்சிருஷ்டிகாலத்திலும் பிறக்கமாட்டார்கள். பிரளயத்திலும் துன்புறார்கள். (௨)

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

[௫௨௯] பாரதா! (அபரிச்சின்னமாயிருத்தலால்) மகத்தாகிய (தன்காரியங்களின் விருத்திக்கேதுவாதலால்) பிரஹ்மம் (அவ்வியாகிருதமாகியமாயை) எனது யோனியாம். அதில் யான் (ஈக்ஷணவடிவ விருத்தியாகிய) கர்ப்பத்தைத் தரிக்கின்றேன். அதனினின்று எல்லாப் பூதங்களின் பிறப்பானது உண்டாகின்றது. (௫)

सर्वयोनिषु कौंतेय मूर्तयः संभवंति याः ।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

[௫உ௭] கௌந்தேயனே! சகலயோனிகளிலும் எந்தவடிவங்கள் உண்டாகின்றனவோ, அவற்றிற்கு மகத்தாகிய பிரஹ்மம் யோனியாம்; யான் பீஜத்தைத்தரும் பிதாவாவன். (௪)

सत्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नंति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥

[௫உ௮] மகாபாகுவே! சத்துவம், இராஜசு, தமசு என்று பிரகிருதியினின்றுண்டானவைகளாகிய குணங்கள் தேகத்தில் அவ்வியயமாகிய தேகியைக்கட்டுகின்றன. (௫)

तत्र सत्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।
सुखसंगेन बध्नाति ज्ञानसंगेन चानघ ॥ ६ ॥

[௫௨௬] பாபமில்லாதவனே! அவற்றுள், நிர்மலமாயிருத்தலால் பிரகாசமுள்ளதும் நோயில்லாததுமான சத்துவம் சுகத்தின் சங்கத்தி(பற்றி)ஞலும் ஞானத்தின் சங்கத்திஞலும் கட்டுகின்றது. (௬)

रजो रागात्मकं विद्धि तृष्णासंगसमुद्भवम् ।
तन्निबध्नाति कौंतेय कर्मसंगेन देहिनम् ॥ ७ ॥

[௫௩௦] கௌந்தேயா! ஆசை(பெருததில் இச்சை)பற்று (பெற்றதிலுண்டாகு மிச்சை)க்களைச்செவ்வையா யுண்டாக்குவதான இரஜசினை இராகவடிவினதென்று அறி. அது தேகியினைக்கர்மசம்பந்தத்திஞல் கட்டுகின்றது. (௭)

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

[நுஅ] பாரதா! தமசோ! அஞ்ஞானத்தினின்றுண்டாகி யதாய்ச்சர்வதேகிகளையும் மோகிக்கச்செய்வதாமென்று அறி. அது பிரமாதம்(சோர்வு), சோம்பல், நித்திரை முதலியவற்றால் கட்டுகின்றது. (அ)

सत्त्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥ ९ ॥

[நுஉ] பாரதா! சத்துவம் சுகத்தைச் செவ்வையாய் ஜயிக் (சுககாரியத்தில் மேம்படு)கின்றது. இராஜசு கர்மத்தில் ஜயம்

(மேன்மை)பெறுகின்றது. தமசு ஞானத்தினை மறைத்துப் பிரமாதத்திலும் நல்ல ஜயம் பெறுகின்றது. (௯)

रजस्तमश्चाभिभूय सत्वं भवति भारत ।
रजः सत्वं तमश्चैव तमः सत्वं रजस्तथा ॥ १० ॥

[ருநூ] பாரதா! இரஜசினையும் தமசினையும் அடக்கிச்சத்துவமுண்டா(தன்காரியத்தில் பிரவர்த்திக்)கின்றது. இரஜசு சத்துவத்தினையும் தமசினையும், அப்படியே தமசு சத்துவத்தினையும் இரஜசினையும் அடக்கியுண்டாகின்றது. (௧௦)

सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्वमित्युत ॥ ११ ॥

[ருகக] எப்போது இத்தேகத்தில் எல்லாத்துவாரங்களிலு மே(புத்தியின்விருத்திவடிவ) பிரகாசமாகிய ஞானமுண்டாகி றதோ, அப்போது சத்துவம் விருத்தியடைந்ததென்று அறிக.

लोभः प्रवृत्तिरारंभः कर्मणामशमः स्पृहा ।
रजस्येतानि जायंते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥

[ருகஉ] பரதசிரேஷ்டா! இரஜசுவிருத்தியானபோது லோ பம், பிரவிருத்தி(முயற்சி), கர்மங்களின் ஆரம்பம், சாந்தியி (ஒழிவி)ன்மை, ஆசை இவையுண்டாகின்றன. (கஉ)

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायंते विवृद्धे कुरुनंदन ॥ १३ ॥

[௫௯௬] குருநந்தனு! தமசுவிருத்தியாகவே அப்பிரகாசம் (அறியாமை), அப்பிரவிருத்தி(முயற்சியின்மை), பிரமாதம், மோகம்(மயக்கம்) என்பவை உண்டாகின்றன. (௧௩)

यदा सत्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४ ॥

[௫௯௭] ஆனால் தேகந்தாங்கியவன் எப்போது சத்துவகுண மிகமேலிட்ட சமயத்தில் பிரலயத்தையடை(மரிக்)கின்றானோ, அப்போது உத்தமஞானிகளின் அமலமான (சத்தியாதி) லோகங்களை அடைகின்றான். (௧௪)

रजसि प्रलयं गत्वा कर्मसंगिषु जायते ।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥

[௫௩-அ] இரஜோகுணமதிகரித்தபோது மரணமடையின், கர்மசங்கி(சகாமபுருஷர்)களில் பிறக்கின்றான். அப்படியே தமசில் மரித்தவனும்மூட(திரியக்கு தாவரமுதலிய)யோனிகளில் பிறக்கின்றான். (௧௫)

कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६ ॥

[௫௩௬] புண்ணியகர்மத்தின் நிர்மலமான பயனைச்சாத்து

விக(சத்துவகாரிய)மென்பர். இராஜஸினுக்கோ துக்கம் பயனும். தமஸிற்கு அஞ்ஞானம் பயனும். (௧௬)

सत्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥

[நிசஂ] சத்துவத்தினின்றும் ஞானமுண்டாகின்றது. இராஜஸினின்றும் லோபமே(யுண்டாகின்றது). தமஸினின்று பிரமாதமும் மோகமும் உண்டாகின்றன. அஞ்ஞானமும் உண்டாகின்றது. (௧௭)

ऊर्ध्वं गच्छंति सत्वस्था मध्ये तिष्ठंति राजसाः ।
जघन्यगुणवृत्तिस्था अधो गच्छंति तामसाः ॥ १८ ॥

[௫௬௧] சத்துவகுணத்துள்ளார் மேற்(உயர்பிறப்பிற்)செல்லுகின்றனர். இரஜோகுணத்துள்ளார் இடையி(மனிதவுலகத்தி)லிருப்பர். தாழ்ந்த(தமோ) குணவிருத்தியுள்ள தாமஸகுணமுடையார் கீழ்ச்(நரகத்தில் அல்லது திரியக்காதியோனியில்) செல்லுகின்றனர். (௧௮)

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

[௫௬௨] எப்போது திருஷ்டாவானவன் குணங்களுக்குவேறுகர்த்தாவைக் காண்கிறதில்லையோ, குணங்களுக்கு அப்

பாற்பட்டதை (நிர்க்குணவஸ்துவை) க்காண்கிறானோ, அவன் எனது தன்மையை அடைகின்றான். (௧௯)

गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

[டுசாரு] தேகத்தினின்றுண்டானவைகளாகிய இம்மூன்று குணங்களையும் கடந்து ஜன்மமரணஜராதுக்கங்களினின்று விடுபட்டவனாய்த் தேகியானவன் அமிர்தத்தையடைகின்றான்.()

॥ अर्जुन उवाच ॥

कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१ ॥

[௫௬௪] அர்ஜுனன்சொல்லலாயினான்:–பிரபுவே! இம்மூன்று குணங்களையும் கடந்தவன் எவ்வடையாளங்களோடு இருப்பன். எவ்வாசாரமுடையவன். இந்தமூன்று குணங்களையும் எப்படிக் கடப்பன்? (உக)

॥ श्रीभगवानुवाच ॥

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पांडव।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि कांक्षति ॥ २२ ॥

[௫௬௫] ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:–பாண்டவா! பிரகாசம், பிரவிருத்தி, மோகம் என்னும் அவைபிரவிருத்திக்கால்

த்வேஷிக்கிறதில்லை. நீங்கினால் விரும்புகிறது மில்லை. (உஉ)

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तंत इत्येव योऽवतिष्ठति नेंगते ॥ २३ ॥

[நிஜசு] எவன் உதாசீனனைப்போலிருப்பவனாய்க் குணங்களால் அசைப்பிக்கப்படானோ, குணங்களே இருக்கின்றன என்று எவன் அசையாதிருக்கின்றானோ, (அவை தாக்கினும்) சலிக்கிறதில்லையோ, (உங)

समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकांचनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिंदात्मसंस्तुतिः ॥ २४ ॥

[௫௪௭] சுகதுக்கசமுள்ளவனாய், ஸ்வஸ்த(தன்னிஷ்டப்படி சமாதியிலிருப்பவ)னாய், மண்ணாங்கட்டி, கல், பொன் என்பவற்றிற் சமமானவனாய், பிரியாப்பிரியங்களில் சமமானவனாய், தனது நிந்தாஸ்துதிகளில் சமமானவனாய், தீரனாய், (௨௪)

मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारंभपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५ ॥

[௫௪௮] மானாவமானங்களில் சமமானவனாய், மித்திருசத்துருபக்ஷங்களில் சமமானவனாய், எல்லாச் செய்கைகளையும்

விடுமியல்பினவனுயிருக்கின்றானே, அவன் குணாதீதனெனப் படுகின்றான். (உரு)

मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥ २६ ॥

[நிசுகூ] எவன் என்னை வியபிசாரமின்றியபக்தியோகத்தினால் சேவிக்கின்றானே, அவன் இந்தக் குணங்களைச் செவ்வையாய்க் கடந்து, பிரஹ்மத்தன்மைக்குச் சமர்த்தனாகின்றான்.()

ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥ २७ ॥

[௨௭] எதனாலெனின், யான் அமிர்தமும் அவ்வியயமுமாகிய வேதங்கட்கும், சாசுவதமான தர்மத்திற்கும், வியபிசாரமின்றிய சுகத்திற்கும் பிரதிஷ்டை(பரமாவதி)யாயிருக்கின்றேன்.

॥ इति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु ॥
॥ श्रीकृष्णार्जुनसंवादे ॥
॥ चतुर्दशोऽध्यायः ॥

இவ்வாறு ஸ்ரீபகவத்கீதையாகிய உபநிஷத்தில்
ஸ்ரீகிருஷ்ணார்ஜுனசம்வாதத்தில்
பதினான்காம் அத்தியாயம் முடிந்தது.



|| ॐ ||

## || पञ्चदशोऽध्यायः ||

## பதினைந்தாம் அத்தியாயம்.

## || पुरुषोत्तमयोगः ||

## புருஷோத்தமயோகம்.



|| श्रीभगवानुवाच ||

ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।
छंदांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ १ ॥

[௫௫௧] ஸ்ரீபகவான் சொல்லலாயினர் :—மேல்வேருள்ளதும், கீட்கிளையுள்ளதுமான அசுவத்தத்தினை (அரசினை) (ஜைமினிமுதலியோர்) அவ்வியயமென்பர். எதற்குச் சந்தசுகள் இலைகளாயிருக்கின்றனவோ அதனை எவன் அறிகின்றானோ அவன் வேதமுணர்ந்தவனாவன். (௧)

अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसंततानि कर्मानुबंधीनि मनुष्यलोके ॥ २ ॥

[௫௫௨] அதன் கிளைகள் கீழும் மேலுமாகவிரிந்திருக்கின்றன. குணத்தினால் மிகவிருத்தியடைந்திருக்கின்றன. விஷய

மாகிய இளந்தளிர்களையுடையன. கீழே மனுஷ்யலோகத்தில் தொடர்ந்தனவும், கர்மத்தால் பின்பற்றப்படுவனவுமான விழுதுக(அவாந்தரகாரணங்க)ளுள்ளனவாம். (௨)

न रूपमस्येह तथोपलभ्यते नांतो न चादिर्न च संप्रतिष्ठा ।
अश्वत्थमेनं सुविरूढमूलमसंगशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३ ॥

[ருநரு] இங்கே(பிரஹ்மத்தில்)இதனுடைய அத்தன்மையான(சத்தியமான)வடிவம் அறியப்படுகிறதில்லை; (பிரவாக அநாதியாகலின்)ஆதியும் அறியப்படுகிறதில்லை. (ஞானபரியந்தம் கெடாமையின்)அந்தமும் அறியப்படுகிறதில்லை. (மித்தையாதலின்)இருப்பும்(லயஸ்தானமும்) அறியப்படுகிறதில்லை.

மிகத்திடமானவேர்(விழுது)களையுடையஇவ்வச்சுவத்தத்தினை திடமான அசங்க(பற்றின்மையாகிய) ஆயுதத்தினல் சேதித்து,

ततः पदं तत्परिमार्गितव्यं यस्मिन्गता न निवर्तंति भूयः ।
तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४ ॥

[நிருச] அதன்பின் எதில்சென்றவர்கள் மறுபடியும் நீங்குகிறதில்லையோ, அப்பதம் விசாரிக்கத்தக்கதாம். எவனிடத்திலிருந்து பழைமையான பிருவிருத்தி(படைப்பு)விரிந்திருக்கின்றதோ அவ்வாதிபுருஷனையே அடைகின்றேன். (ச)

निर्मानमोहा जितसंगदोषा अध्यात्मनित्या विनिवृत्तकामाः ।
द्वंद्वैर्विमुक्ताः सुखदुःखसंज्ञैर्गच्छंत्यमूढाः पदमव्ययं तत् ॥ ५ ॥

[௫௫௫] மானமோகங்களில்லாதவர்களும்,(யானெனதெனு
ம் அபிமானமாகிய)சங்கதோஷத்தை வென்றவர்களும், அத்தி
யாத்மவாயிலாக நித்திய(பரமாத்மசொரூப விசாரத்தில் தற்பர)
ரும், காமமொழிந்தவரும், சுகதுக்கப்பெயருள்ளனவாகிய
துவந்துவங்களினின்று விசேஷமாய் விடுபட்டவர்களுமாகிய
விவேகிகள் அந்த அவ்வியயமான(அழிவின்றிய)பதத்தை அ
டைகின்றனர். (௫)

न तद्भासयते सूर्यो न शशांको न पावकः ।
यद्गत्वा न निवर्तंते तद्धाम परमं मम ॥ ६ ॥

[௫௫௬] எதனையடைந்து திரும்பாரோ அதனைச் சூரியனும்

விளக்குகிறதில்லை; சந்திரனும் விளக்குகிறதில்லை; அக்கினியும் விளக்குகிறதில்லை. அது என்னுடைய மேலானதாம(ஸ்வரூப)மாம். (௬)

मभैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥ ७ ॥

[நிருள] ஜீவலோக(க்ஷேத்திர)த்தில் என்னுடைய அம்சமேயான நித்தியமான ஜீவவடிவமாயுள்ளவன் பிரகிருதியிலுள்ளனவாகிய மனதை ஆறாவதாக வுடைய இந்திரியங்களை இழுக்(வெளிப்படுத்து)கிறான். (எ)

शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।
गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८ ॥

[ருடுஅ] எப்போது ஈசுவரன்(ஜீவரூபமாகப்பிரவேசித்த ஈசன் அல்லது தேகாதிகளுக்கீசனான ஜீவன்)எத(எச்சரீரத்தி) னின்றும் வெளிப்படுகின்றானோ, வேறு சரீரத்தையடைகின்றானோ அப்போது இவற்றை (பிராணேந்திரியமனதுகளை)யும் வாயு(புஷ்பாதி) ஆசிரயங்களினின்றும் வாசனையைகொண்டு செல்வதுபோலச்செவ்வையாய்க்கொண்டு செல்லுகின்றான்.().

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥ ९ ॥

[௫௫௯] இவன் சுரோத்திரம், சக்ஷுஸ், துவக்கு, இரசனம், கிராணம், மனது என்பவற்றை ஆசிரயமாகக்கொண்டே விஷயங்களைச்சேவிக்கின்றான். (௯)

उत्क्रामंतं स्थितं वापि भुंजानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यंति पश्यंति ज्ञानचक्षुषः ॥ १० ॥

[௫௬௦] வெளிச்செல்லுகின்றவனாகவாவது சரீரத்திருப்பவனாகவாவது புசிக்(சப்தாதிகளை அறி)கின்றவனும்(சுகதுக்கமோக மெனப்படும்)குணங்களோடு கூடியிருப்பவனுமாகிய ஆத்மாவையும் அவிவேகிகள் காணார். ஞானநேத்திரமுடையார்காண்கின்றனர். (௧௦)

यतंतो योगिनश्चैनं पश्यंत्यात्मन्यवस्थितम् ।
अयतंतोऽप्यकृतात्मानो नैनं पश्यंत्यचेतसः ॥ ११ ॥

[நிசூக] முயலுகின்ற யோகிகள் ஆத்மாவி(புத்தியி)லிருக்கும் இவனைக்காண்கின்றனர். முயற்சி செய்பவராயினும் அந்தக் கரணசுத்தியில்லாத அவிவேகிகள் இவனைக்காணார். (கக)

यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चंद्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥ १२ ॥

[நிசூ௨] ஆதித்தனிடத்திருப்பதாய் எந்தத்தேஜசிருக்கின்றதோ, சந்திரனிடத்து எஃதிருக்கின்றதோ, அக்கினியினிட

த்து எல்லிருக்கின்றதோ, சகலஜகத்தையும் விளக்குகின்றதோ, அத்தேஜஸு என்னுடையதென்று அறி. (கஉ)

गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥ १३ ॥

[நிசூரு] யான் பலத்தினால் பூமியில்(உலகத்துப்)பிரவேசித்து பூதங்களைத் தாங்குகிறேன். இரஸவடிவ சோமனாகி எல்லா ஔஷதி(பயிர்)களையும் புஷ்டியாக்குகின்றேன். (கரு)

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४ ॥

[நிகச] யான் வைசுவானரனுகி (உதராக்னியாய்) ப்பிராணிகளின் தேகத்தை ஆசிரயித்தவனாய், பிராணுபானன்களோடு கூடியவனாய் நால்வகை உண்டியினையும் பாகஞ்செய்கின்றேன். (கச)

सर्वस्य चाहं हृदि संनिविष्टो मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो वेदांतकृद्वेदविदेव चाहम् ॥ १५ ॥

[நிகரு] யான் எல்லோருடைய இருதயத்திலும் செவ்வையாய்ப்பிரவேசித்துளன். என்னிடத்திலிருந்து ஸ்மிருதியும். ஞானமும், (அவற்றின்) நீக்கமும் உண்டாகின்றன. சகலவேத

ங்களினாலும் யானே அறியத்தக்கவன்; வேதமுடிவினைச்செய்பவன். யானே வேதமுணர்ந்தவன். (௧௫)

द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥ १६ ॥

[௫௱௬௬] உலகத்தில் க்ஷரமும் அக்ஷரமுமாகிய இவ்விரண்டே புருஷருளர். (அவர்களுள்) க்ஷரம் சர்வபூதங்களுமாம். கூடஸ்தன் அக்ஷரம் என்றும் சொல்லப்படும். (௧௬)

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य विभर्त्यव्यय ईश्वरः ॥ १७ ॥

[நிகள] எந்த அவ்வியயஈசுவரன் மூன்றுலகத்தையும் பிரவேசித்துத் தாங்குகின்றனே, அவ்வுத்தமபுருஷனே அந்நியன். அவன் பரமாத்மா வென்று சொல்லப்படுகிறுன். (கஎ)

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥ १८ ॥

[நிசுஅ] எதனல் யான் க்ஷரத்திற்கு அப்பாற்பட்டவனுயும், அக்ஷரத்தினும் மேலானவனுயுமிருக்கின்றேனே, அதனல் உலகத்திலும் வேதத்திலும் பிரசித்தமான புருஷோத்தமனுயிருக்கிறேன். (கஅ)

